




பளபளப்போடு
நறுமணமோங்கும் கேசத்திற்கு...

# இராஸ்மிக் பர்ப்யூம்ட் கோகனட் ஹேர் ஆயில்

(கேசத்திற்கு பரிமள தேங்காயெண்ணெய்)

ரோஜா அல்லது மல்லிகை மணமூட்டியது

**இலவசம்...** பெரிய சீசா ஒவ்வொன்றுடனும் நல்லதொரு 'ப்ரைட்' சக 'அஸிடேட்' சீப்பு இலவசம்

ECH. 2-50 TM

16-8-57 முதல் சென்னை ஸ்டார் & மஹாராணியில்




மாபெரும்
வித்தியாசங்களால்
உணர்ச்சிகளை
தட்டி எழுப்பும் !

# நயா தௌர்

விழிகொண்டெழும் இந்தியாவின்
விறு விறுப்பான கதை

15 - 8 - 57 வியாழன் முதல்

சேஷ்மஹால் ... விஜயவாடா
செலக்ட் ... விசாகப்பட்டினம்
தில்ஷாத் ... ஹைதராபாத்
அஜந்தா ... சிகந்தராபாத்




ஆல் இந்தியா பிலிம் கார்ப்பொரேஷன், மவுண்ட் ரோடு, சென்னை-2

# இந்தியாவில் முதல்...

29 ஆண்டுகளுக்குமுன் பிரபாத் கியாஸ் விளக்குக திரிகள் உற்பத்தியுடன் ஆரம்பித்தனர் சடுதியில் ஆயில் பிரஷர் விளக்குகள், ஸ்டவ்கள் செய்யத் தொடங்கினர். இன்று பிரபாத் பொருள்கள் உயர்தரத்தின் சின்னங்கள் - உலகில் எத்தேசமும் பெருமை கொள்ளக்கூடிய நாம்





# பிரபாத்

ஸ்டவ்கள் • ஊதுவிளக்குகள் • லாந்தர்கள் • மாண்டில்கள்

## சிறந்தது!



அமுத மொத்த காந்திமார்க்கம்
தமிழ கத்தின் செல்வமாம்
நமது சேவை அதனைஏந்தி
நாட்டி லெங்கும் சொல்வதாம்.

—நாமக்கல் கவிஞர்

# கல்கி

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| அட்டைச் சித்திரம் | மணியம் | ... | |
| காந்தி மகான் (முகப்புப் படம்) | ... | ... | 4அ |
| சுதந்திர பாரதத்தில் மக்கள் கடமை | ... | ... | 6 |
| சுதந்திரச் சரித்திரம் (கார்ட்டூன்) | விஜி | ... | 12 |
| வாழ்த்துகிறோம் | ... | ... | 14 |
| அரிசி விலை உயருமா? | ... | ... | 14 |
| தொழுதிடல் மறக்கிலேனே! | மகாகவி பாரதியார் | ... | 16அ |
| 1857 | ராஜாஜி | ... | 16ஆ |
| தேசத் தலைவர்கள் (படங்கள்) | சிவா | ... | 17 |
| இதுதானோ ஜனநாயகம்? | வினோபா அடிகள் | ... | 23 |
| தீர்க்க தரிசன வாக்கு | ராஜாஜி | ... | 23 |
| புதிய சமுதாயம் அமைப்போம் | ம. பொ. சிவஞானம் | ... | 24 |
| சோலைக் குயில் | வி. ராஜேந்திரன் | ... | 28 |
| முதல் முழக்கம் | விநு | ... | 37 |
| மருது பாண்டியர்கள் | ... | ... | 38 |
| ஜான்ஸி ராணி | ... | ... | 39 |
| தாதியா தோபே | ... | ... | 40 |
| பாவை விளக்கு | அகிலன் | ... | 43 |
| தேசத் தியாகிகள் (படங்கள்) | சிவா | ... | 57 |
| மலைச்சாரல் மாதவி | ஆனந்தி | ... | 62 |
| சுதந்திரம் பிறந்த கதை | அழ. வள்ளியப்பா | ... | 72 |
| சுதந்திரத் திருநாளில் | ர. தங்கவேலன் | ... | 77 |
| அரசகுமாரி ஆயிஷா | கௌசிகன்-பாபு | ... | 78 |
| ஹாஸ்ய வெடிகள் | சிவா | ... | 80 |
| மாயப் பந்து | ராஜி | ... | 82 |
| மாலவல்லியின் தியாகம் | கி. ரா. கோபாலன் | ... | 87 |
| படித்துப் பாருங்கள் | ... | ... | 95 |
| திப்பு சுல்தான் | விநு | ... | 97 |
| கப்பலோட்டிய வீரர் | ... | ... | 98 |
| உப்பு சத்தியாக்கிரகம் | ... | ... | 99 |
| ஜெய் ஹிந்த்! | ... | ... | 100 |
| தனி வழி | கிருத்திகா | ... | 103 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



சுதந்திர நூற்றாண்டு மலர்





மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற | ஹேவிளம்பி
இதழ் 3 | தாயென்று கும்பிடடி பாப்பா – பாரதியார் | ஆவணி 2

# சுதந்திர பாரதத்தில் மக்கள் கடமை

சுதந்திர தேவி! நின்றன் திருவடித் தாமரைகளைப் பாரதத்தின் சுதந்திர நூற்றாண்டு விழா நடைபெறும் இந்தப் புனிதத் திருநாளிலே தொழுகின்றோம்.

எங்கள் தந்தையர் சென்ற நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேலாக நின் திருவருள் நோக்குக்குத் தவங்கிடந்து எத்தனையோ தியாகங்கள் புரிந்தனர்.

வீரபாண்டிய கட்டபொம்மனும், மருது சகோதரர்களும், தாத்தையா தோபி, ஜான்ஸிராணி லக்ஷ்மிபாய் போன்ற எண்ணற்ற வீர புருஷர்களும் வீராங்கனைகளும் உன்னிடம் இணையற்ற பக்தி செலுத்திய ஒரே 'குற்ற'த்துக்காக உயிர் துறந்தனர்.

பாலகங்காதர திலகர், வ. உ. சிதம்பரனார் போன்ற புரட்சி வீரர்கள் தாம் பிறந்த பொன்னாட்டை விட்டுக் கடல் கடந்து செல்லும் தீவாந்திர சிட்சையையும், செக்கிழுக்கும் கொடுமையையும் அனுபவித்தனர். இருப்பினும் அவர்கள் நாவில் நின் பெயர் இருந்தது. அது அவர்கள் துன்பத்தையெல்லாம் இன்பமாக்கி வந்தது.

காந்திமகான் தோன்றிய பின்னர் எத்தனையோ லட்சக்கணக்கான மக்கள் நின்னருள் வேண்டிச் சிறை சென்றனர். தடியடி பட்டனர். உயிர்த்தியாகமும் புரிந்தனர்!

அவர்கள் தியாகத்தின் பயனாகவும், முன்னோர்களின் தவத்தின் பயனாகவும் நின் கடைக்கண் பார்வை பெற்றோம். இன்றைக்குச் சரியாகப் பத்து ஆண்டுகளுக்கு முன்னால், 1947ம் ஆண்டு ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி எங்கள் பாரத அன்னையின் அடிமைத் தளை அகன்றது! பாரத நாடு சுதந்திரம் பெற்றது. 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' என்று ஆடினோம், பாடினோம், மகிழ்ந்தோம்!

இந்த ஆண்டில், 1857-ம் வருஷத்தில் தொடங்கிய சுதந்திரப் போராட்டத்தின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடுகிறோம். நின்னடியில் தவங்கிடந்த எங்கள் முன்னோர்களுக்கு வீர வணக்கம் செய்கிறோம்!

அவர்கள் ஊக்கமும் உறுதியும் தியாக உணர்ச்சியும் தேச பக்தியும் பாரத மக்களிடத்தில் என்றென்றும் கனன்று கொண்டிருக்கும் வண்ணம் அருள்புரியுமாறு எங்கள் வீரத் தந்தையரை வேண்டுகிறோம்!

சுதந்திரப் போராட்டத் தீரர்களே! வணக்கம்!
அன்னையின் அடிமைத் தளையைத் தகர்க்கப் போரிட்ட தந்தையர்களே! வணக்கம்!
தியாகசீலர்களே! உங்கள் திருவடிகளுக்கு வணக்கம்!

*** *** ***

மேற்கூறிய தியாகபுருஷர்களை யெல்லாம் நினைத்து வணங்கி விட்டு எழும் போது, சென்ற பத்து ஆண்டுகளில் சுதந்திர இந்தியாவில் அவர்கள் லட்சியத்துக்கு ஏற்ப வாழ்ந்தோமா என்ற கேள்வி இயல்பாகவே உள்ளத்தில் உதிக்கிறது!

நாம் பெற்ற சுயராஜ்யத்தில் தேனும் பாலும் கலந்தோடுகின்றனவா? அதற்கு வேண்டிய அறிகுறிகள் ஏதாகிலும் காண்கின்றனவா? என்று சிந்திக்கத் தோன்றுகிறது. அப்போது நமது தலைவர் ராஜாஜி அன்று சொன்னது இன்று உண்மையாகிவிட்டதே என்று எண்ணி வியக்கத் தோன்றுகிறது.

நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள், 1921-ம் ஆண்டு பாரத நாட்டின் விடுதலைக்காகச் சிறையில் தவமிருந்தபோது நாட்குறிப்பு எழுதி வந்தார். பாரத நாடு சுதந்திரம் பெற்றவுடன் அதன் நிலைமை எப்படி யிருக்கும் என்று ஊகித்தார். அது இன்று அப்படியே நடைபெற்று வருகிறது! சுயராஜ்யம் வந்தவுடன் நாட்டில் சுபிட்சம் வந்து விடாது என்றார். தேர்தலில் ஊழல்கள் மலியும் என்றார். பழைய ஆட்சி

தேவலையே என்று மக்கள் நினைப்பார்கள் என்றார். அவ்வளவும் இன்று உண்மையாகி விட்டன. (ராஜாஜி கூறிய இந்தத் தீர்க்க தரிசன வாக்கை 'இதே இதழில்' இருபத்து மூன்றாம் பக்கத்தில் காணலாம்.)

நாடு சுதந்திரம் பெற்றவுடன் பாரத சர்க்கார் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பல நீர்ப்பாசன திட்டங்கள் வகுத்தார்கள். இப்பொழுது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் அமைத்து வேலை செய்து வருகிறார்கள்.

இவை ருஷ்ய நாட்டில் கைக்கொள்ளப் பட்ட திட்டங்களை ஆதாரமாகக் கொண்டு வகுக்கப்பட்டவையாகும். ருஷ்ய நாட்டில் பல ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேறியதால் தான் தேசமே பல விதங்களில் முன்னேறி, அதன் தோற்றமே இன்று வேறு விதமாகக் காண்கிறது. அதைப் போல், நம் நாட்டிலும் திட்டங்கள் அமைத்து நிறைவேற்ற வேண்டும் என்று தீர்மானித்து ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டிருக்கிறார்கள்.

ஆனால் நம் நாட்டுக்கும் ருஷ்யாவுக்கும் அடிப்படையில் ஒரு வித்தியாசம் உண்டு. அங்கெல்லாம் திட்டங்கள் நிறைவேறத் தயவு தாட்சண்யமின்றி மக்களைப் பலாத்காரமாக உழைக்கச் செய்திருக்கிறார்கள். ஆனால் நம் நாட்டிலோ, ஜனநாயக ஆட்சி முறை நடைபெறுகிறது. மக்களிடம் பலாத்கார உழைப்பு வாங்க முடியாது. அவர்களுக்குச் சலுகைகள் எல்லாம் கொடுத்துக் கொடுத்து வேலை வாங்க முயன்று வந்திருக்கிறோம்!

ஒரு நாட்டின் செல்வம் உற்பத்தியில் தான் இருக்கிறதே ஒழிய, வேறு எதிலும் இல்லை. உற்பத்தி உழைப்பின் அளவைப் பொறுத்திருக்கிறது. ஊக்கத்தோடு வேலை செய்து உற்பத்தியைப் பெருக்கினால் நாட்டில் செல்வம் கொழிக்கும். நாட்டு மக்களிடையே இந்த உணர்ச்சியை வளர்ப்பதற்குப் பதில், தொழிலாளர்களுக்குச் சலுகைகள் அளித்தே அவர்களிடம் வேலை வாங்கலாம் என்று முடிவு செய்து, சென்ற பத்து ஆண்டுகளில் பலப்பல தொழில் திட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. தொழிலாளர்கள் தங்களுடைய கடமைகளை உணரும்படி செய்ய உருவான முயற்சி எதுவும் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

ஜெர்மன் தேசம் சென்ற யுத்தத்தில் அடைந்த சேதமும் நஷ்டமும் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால் சென்ற பத்து ஆண்டுகளில் ஜெர்மனியிலுள்ள பெரும் நகரங்கள் எல்லாம் எவ்வளவு வேகமாக புனர் நிர்மாணமாகி விட்டன! யுத்தத்தினால் சேதம் அடைந்த தேசம் என்று சொல்ல முடியாத அளவுக்குப் புது உருவம் பெற்று விளங்குகின்றது. இதற்குக் காரணம் அந் நாட்டுத் தொழிலாளரிடையே நிலவும் அளவு கடந்த கடமையுணர்ச்சிதான். சோம்பி இருப்பது, காலம் கடத்துவது, தள்ளிப் போடுவது முதலிய குணங்களை அந்த நாட்டுத் தொழிலாளர்கள் மிகமிக இழிவாகக் கருதுகிறார்கள். அதை எண்ணி அவமானப் படுகிறார்கள்! இப்படி அவர்களிடம் தேச பக்தியையும், கடமை யுணர்ச்சியையும் வளர்த்து, அவற்றைப் பாதுகாத்து வருகிறவர்கள் அந்த நாட்டுத் தலைவர்கள்.

நமது காங்கிரஸ் தலைவர்களோ தேசத்தை மறந்தார்கள். வோட்டுக்களையும் அதன் விளைவால் கிடைக்கும் பதவிகளையும் பெரிதாக மதித்தார்கள். அதற்காகத் தொழிலாளர் நலன்களை முதலில் கவனிக்க வேண்டும் என்று பறைசாற்றத் தொடங்கினார்கள். தாங்கள் தொழிலாளர் நலனில் அதிகமாக அக்கறை கொண்டவர்கள் என்பதைக் காண்பித்துக்கொள்ள முயன்றார்களே தவிர, தொழிலாளர்களிடம் தேச பக்தியையும் அவர்கள் ஆற்றவேண்டிய கடமை உணர்ச்சியையும் வளர்க்கத் தவறிவிட்டார்கள். அதன் பயனாக, சர்க்கார் நிர்வாகத்தில் உள்ள தொழில்களிலும் சரி, தனியார் நடத்தும் தொழில்களிலும் சரி உற்பத்தி பெரும் அளவு குறைந்து வருகிறது. குறைந்த உற்பத்திக்கு அதிக ஆட்கள் வேறு தேவைப்படுகின்றனர்; சுதந்திரம் பெற்றுப் பத்து ஆண்டுகள் ஆகியும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை அமுல் நடத்தியும் உற்பத்தி பெருகவில்லை; உணவுப் பிரச்னை தீர்ந்தபாடாயில்லை. வாழ்க்கைக்கு மிக அவசியமான பண்டங்களின் விலை குறைந்தபாடாயில்லை.

சுயராஜ்யம் வந்தவுடன் உணவுப் பிரச்னை தீரும், நாட்டில் தர்மமும் நியாயமும் நிலவும் என்று எண்ணி மகிழ்ந்த மக்களிடம் அந்த மகிழ்ச்சி குறைந்து அதிருப்தி ஏற்பட்டு விட்டது. பதவிகளுக்காக நடைபெறும் போட்டியும், சலுகையும், லஞ்சமும், ஊழலும் நாடெங்கும் மலிந்து மக்களை மிகவும் அருவருப்பு கொள்ளச் செய்திருக்கின்றன.

ஜுலை மாதச் சிறுகதைப் போட்டியில்

நூறு ரூபாய் பரிசு பெற்ற

**பாண்டியனின் பரிசு**

என்னும் கதை அடுத்த இதழில் பிரசுரமாகிறது

பரிசு பெற்றவர்: கே. முத்துசாமி, (துரோணன்)

42, பக்தபுரி தெரு :: கும்பகோணம்



ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் கேரள நாட்டுக்குச் செல்லும் வழியில் சென்ற வாரம் சென்னை நகருக்கு வந்தார். சுதந்திர தூற்றாண்டு விழாவைத் திருவனந்தபுரத்தில் கொண்டாடச் செல்லும் ஜனாதிபதி அவர்களை முதன் மந்திரி திரு காமராஜ், கவர்னர் ஜான் முதலியோர் வழியனுப்புவதை மேலே படத்தில் காணலாம்.

தொழில் துறைகளிலும் நிர்வாகத் துறைகளிலும் மட்டுமின்றி மக்கள் பழக்க வழக்கங்களிலும் சென்ற பத்தாண்டுகளில் பல மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன! பல்லாயிரம் ஆண்டுகளாக நமது நாட்டில் அனுஷ்டித்து வரும் வழக்கங்கள் பார்லிமென்ட் சட்டங்களினால் மாற்றப் பட்டிருக்கின்றன. இவற்றையெல்லாம் பற்றி மக்களிடையே மிகுந்த அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது.

இப்படி நாம் சொல்லும் போது, "சுதந்திரம் வந்ததிலிருந்து காங்கிரஸ் சர்க்கார் தானே நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்திக் கொண்டு வருகிறது. மக்களுக்கு உண்மையில் அந்த சர்க்கார்மீது அதிருப்தி யிருக்குமானால் சென்ற இரண்டு தேர்தல்களிலும் காங்கிரஸ் தோற்றுத்தானே போயிருக்க வேண்டும்" என்று கேட்கலாம்.

ஆனால் காங்கிரஸின் வெற்றி அதன் நீண்டகால சரித்திரத்தின் வெற்றி. காங்கிரஸ் பாரத நாட்டின் சுதந்திரத்தைப் பெற்றுத் தந்த கட்சி என்பதனால் மக்கள் அதற்கு வோட்டு அளித்திருக்கிறார்கள். பாரதத்தின் சுதந்திரப் போராட்டத்திலே தலைமை தாங்கி நடத்திய ஜவாஹர்லால் நேரு அவர்கள் அதில் இன்னும் இருப்பதால் மக்கள் அதைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, தேசபக்தி மிகுந்த நல்ல எதிர்க்கட்சி யில்லாததாலேயே காங்கிரஸை மக்கள் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்!

* * *

எத்தனை ஐந்தாண்டுத் திட்டங்கள் கொண்டு வந்தாலும், மக்களின் ஒத்துழைப்பும் தொழிலாளர்களின் உழைப்புமின்றி, அவற்றினால் பலன் ஏற்பட முடியாது என்பதை எல்லோரும் உணர்ந்துகொள்ள வேண்டும்.

ருஷ்ய மக்களைப்போல், ஜெர்மானியர்களைப் போல் இந்திய மக்கள், முக்கியமாகத் தொழிலாளர்கள், உழைப்பின் புனிதத் தன்மையை உணர வேண்டும். பல சலுகைகள் கோரும் தொழிலாளர்கள் தங்களுக்குக் கடமைகள் உண்டு என்பதையும் நன்கு உணர்ந்து அவைகளை நிறைவேற்ற வேண்டும்.

சர்க்காரும் நிர்வாகத்தில் உள்ள ஊழல்களைக் களைந்து, நிர்வாகம் தூய்மையானதாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

பாரத நாட்டின் சுபிட்சமும் பாரத மக்களின் எதிர்கால நல்வாழ்வும், தூய்மையான சர்க்கார் நிர்வாகத்தையும், மக்களின் ஒத்துழைப்பையும், தொழிலாளர்களின் உழைப்பையும், கடமை உணர்ச்சியையுமே பொறுத்திருக்கின்றன.

சர்க்காரும் மக்களும் அவரவர் கடமைகளை வழுவின்றி நிறைவேற்றினால்தான் பெற்ற சுதந்திரம் பயன் உள்ளதாக ஆகும்; சுதந்திரத்துக்காகச் சென்ற நூறு ஆண்டுகளுக்கு மேலாக எண்ணிக்கையற்ற தேசபக்தர்கள் செய்த அரும் பெரும் தியாகங்கள் விழலுக்கு இறைத்த நீராகி விடாமல், மக்களுக்குப் பெருமையும் பெரு வாழ்வும் அளிக்கும் அருட் செல்வமாகத் திகழ்ந்து வரும்.

வாழ்க சுதந்திரம்!

வாழ்க பாரதம்!


1 அன்னிய ஆட்சியின் ஆதிக்கத்தை எதிர்த்து 1857-ம் ஆண்டில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரே உடலின் இரண்டு கைகளைப்போல் ஒற்றுமையுடன் போர் நடத்தினார்கள்.
ஹிந்து
முஸ்லிம்
1857
புரட்சி


2 அந்த சுதந்திரப் போரை ஆங்கிலேயர்கள் நசுக்கி விட்டனர். ஆனாலும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை அவர்களுக்குப் பெரும் கவலையை உண்டாக்கி விட்டது.


3 எனவே ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் கலகமூட்டிப் பிரித்தாளும் தந்திரமுறையைக் கையாளத் தொடங்கினார்கள்.
ஹிந்து
முஸ்லிம்


4 பிரித்தாளும் தந்திரம் அவர்களுக்கு மூட்டை மூட்டையாகப் பணத்தைக் கொடுத்தது.
லாபம்
லாபம்


5 அதன் விளைவாக, பிரிட்டன் கொழுத்தது. பாரத நாடு வறுமையில் ஆழ்ந்தது.
பிரிட்டன்
இந்தியா

— விஜி


6 திலகர், லஜபதிராய் போன்ற தலைவர்கள் மீண்டும் புரட்சித் தீயை மூட்டினார்கள்.


7 காந்தி மகானின் தலைமையில் சாத்வீக சுதந்திரப் போர் நடைபெற்றது.


8 மகாத்மா காந்தியின் செல்வாக்கைக் குறைக்க பிரிட்டிஷார் வகுப்புவாத பாம்பை அவர்மீது ஏவினர்.


9 இறுதியாக, காந்தி மகான் வெற்றி பெற்றார். பிரிட்டிஷார் மூட்டை கட்டிக் கொண்டு வெளியேறினர்.


10 பாரத நாட்டின் ஒற்றுமைக்காகக் காந்தி மகான் உயிரையே தியாகம் செய்தார்.

# வாழ்த்துகிறோம்!

பாரதப் பிரதமர் பண்டித நேருவை வாழ்த்துகிறோம். இந்திய சர்க்கார் செய்திப் போக்குவரத்து மந்திரி லால்பகதூர் சாஸ்திரிக்கும் வாழ்த்துக் கூறுகிறோம். தபால் தந்தி ஊழியர்கள் பெடரேஷன் காரியதரிசி ஸ்ரீ கோஷுக்கு நன்றி கூறுகிறோம். எல்லாவற்றுக்கும் மேலாக, தபால், தந்தி ஊழியர்களை மிகவும் பாராட்டுவதுடன், அவர்களுக்கு நமது மனப்பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த வருஷம் முதலாவது சுதந்திரப் போரின் நூறாவது ஆண்டு விழாவும் சுதந்திர இந்தியாவின் பத்தாவது ஆண்டு விழாவும் வேலைநிறுத்த அந்தகாரத்தில் சூழப்பட்டு ஒளியிழந்து விடுமோ என்று எல்லோரும் கலங்கினார்கள். எனினும் சம்பந்தப்பட்ட சகலரும் வீண் பிடிவாதம் காட்டாமல் விவேகத்துடன் நடந்து கொண்டதால் வேலைநிறுத்தம் தவிர்க்கப்பட்டது.

தபால், தந்தி ஊழியர்கள், வேலைநிறுத்தம் செய்வதற்கான சகல ஏற்பாடுகளும் செய்திருந்தார்கள். அதைச் சமாளிப்பதற்கான எல்லா முஸ்தீபுகளையும் சர்க்கார் செய்திருந்தார்கள். பொது மக்களும் வாளா விருக்கவில்லை. வேலைநிறுத்தம் எவ்வளவு காலம் நடக்குமோ என்ற கவலையால் அவர்கள் லட்சக்கணக்கான ரூபாய்க்கு ஸ்டாம்பு, கவர்கள் முதலியனவும் வாங்கி வைத்து விட்டார்கள். வேலைநிறுத்தம் செய்வோரைத் தண்டிப்பதற்கு அவசரம் அவசரமாக அவசரச் சட்டமும் நிறைவேறியது. வேலைநிறுத்தம் ஆரம்பமாவதற்குச் சில மணி நேரத்துக்குமுன் வரையில் கூட நிச்சயமாக எதுவும் தெரியாமல் இருந்தது.

நேருஜி வானொலியிலும் லோக சபையிலும் நிகழ்த்திய சமாதானப் பிரசங்கங்களும், ராஜாஜி முதல் நாள் விடுத்த உருக்கமான அறிக்கையுமே தபால், தந்தி ஊழியர்கள் வேலை நிறுத்தத்தைக் கைவிடும்படி செய்தன.

வேலைநிறுத்த அறிக்கை விடுத்தபின் இந்திய சர்க்கார் சம்பளக் கமிஷன் நியமிக்க இசைந்து விட்டதாலும், இடைக்கால நிவாரணப் பிரச்னை அக்கமிஷனின் பரிசீலனைக்கு விடப்படும் என்று நேருஜி லோக சபையில் உறுதி கூறியதாலும் வேலைநிறுத்த யோசனையைக் கைவிட்டு விட்டதாக மேற்படி ஊழியர்கள் சங்கம் அறிவித்துள்ளது.

காரணம் எதுவாயினும், பொது மக்களுக்குக் கஷ்டமும், நாட்டுக்கு மிகுந்த நஷ்டமும், தபால், தந்தி ஊழியர்களுக்குக் கெட்ட பெயரும் ஏற்படக் கூடிய வேலைநிறுத்தம் தவிர்க்கப்பட்டதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறோம். கமிஷன் மூலம் மேற்படி ஊழியர்களின் குறைகள் தீர ஏதாவது நல்ல வழி பிறக்குமென நம்புகிறோம்.

# அரிசி விலை குறையுமா?

இன்று பாரதநாடு முழுவதையும் கலங்க வைக்கும் கடுமையான உள் நாட்டுப் பிரச்னை என்னவெனில், விலைவாசிகளின் உயர்வுதான். அந்தப் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்க்க முடியாததாலேயே, வேலை நிறுத்தக் கூக்குரல்கள் நாற்திசைகளிலும் காதைத் துளைக்கின்றன. கிராக்கிப்படியை உயர்த்த வேண்டும் என்று சிப்பந்திகள் இடைவிடாது கிளர்ச்சி செய்து வருகிறார்கள். முக்கிய உணவுப் பொருளான அரிசியின் விலை சென்ற சில மாதங்களில் ஐம்பது சத விகிதத்துக்கு மேல் உயர்ந்திருக்கும்போது, கிராக்கிப் படியை உயர்த்த வேண்டும் என்று அவர்கள் கூறுவதை யார் ஆட்சேபிக்க முடியும்? விலை உயர்வால் பொதுமக்களும் கஷ்டத்துக்கு உள்ளாகும்படி நேர்ந்திருக்கிறது.

வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டங்களின் விலைகள் இறங்குவதற்காகச் சர்க்கார் அத்தியாவசியப் பொருள் சட்டம் நிறைவேற்றினார்கள். அதன் பயனாக அரிசியின் விலை இறங்குமென்று அவர்கள் எதிர்பார்த்தனர். ஆனால், அவர்கள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. வட இந்தியாவில் கோதுமை நியாயவிலைக்குக் கிடைப்பதற்காகக் கோதுமை மண்டலம் அமைத்ததுபோல், இங்கு அரிசி நியாய விலைக்குக் கிடைப்பதற்காகத் தட்சிண மண்டலம் அமைத்தார்கள். இதனாலும் கோரிய பலன் கிடைக்கவில்லை. உபரி பிரதேசங்களில் அரிசியைத் தேக்கி வைத்திருப்போரும் வியாபாரிகளும் ஒத்துழைக்காததாலேயே, சர்க்கார் கைக்கொண்ட மேற்படி முறைகளால் பலன் ஏற்படவில்லை. குறிப்பாக ஆந்திர வியாபாரிகள், பற்றாக்குறை ராஜ்யங்களான சென்னைக்கும் கேரளத்துக்கும் அரிசி வர முடியாமல் தடுத்துவிட்டார்கள். எனவே வேறு வழியின்றி, உபரி பிரதேசமான ஆந்திர ராஜ்யத்திலும் ஒரிஸ்ஸாவிலும் உள்ள அரிசியைக் கொள்முதல் செய்யும் பொறுப்பை இப்போது இந்திய சர்க்காரே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அந்த வேலையைத் துரிதமாகச் செய்வதற்கு ஒரு விசேஷ அதிகாரியையும் நியமித்திருக்கிறார்கள். அவர்கள் கொள்முதல் செய்யும் அரிசி தென் இந்தியாவில் உள்ள பற்றாக்குறை ராஜ்யங்களுக்கு அனுப்பப்படும். அதன் பலனாக அரிசி விலை குறைய இடம் உண்டாகலாம்.

சிப்பந்திகள் சம்பந்தப்பட்டவரையில், விலைவாசிகளைக் குறைக்காமல் கிராக்கிப்படியை உயர்த்துவதால் மாத்திரம் அதிக பலன் ஏற்படாது. அவர்களுடைய கஷ்டங்களும் ஏழைப் பொதுமக்களின் பொருளாதார இன்னல்களும் குறைவதற்கான ஒரே வழி முக்கிய பண்டங்களின் விலைகள் குறையும்படி செய்வதுதான். அரிசி விலை குறையத் தொடங்கினால் மற்ற அவசியமான பண்டங்களின் விலையும் குறைந்துவிடும் என்பது நிச்சயம்.



# தொழுதிடல் மறக்கிலேனே



**மகாகவி பாரதியார்**

இதந்தரு மனையினீங்கி
இடர்மிகு சிறைப் பட்டாலும்

பதந்திரு விரண்டு மாறிப்
பழி மிகுத்திழிவுற்றாலும்

விதந்தரு கோடியின்னல்
விளைந்தெனை யழித்திட்டாலும்

சுதந்திரதேவி ! நின்னைத்
தொழுதிடல் மறக்கிலேனே!



தேவி நின்னொளி பெறாத
தேயமோர் தேயமாமோ ?

ஆவியங் குண்டோ ? செம்மை
அறிவுண்டோ? ஆக்கமுண்டோ?

காவிய நூல்கள் ஞானக்
கலைகள் வேதங்களுண்டோ ?

பாவியரன்றோ நின்றன்
பாலனம் படைத்திலாதார் ?



ஒழிவறு நோயிற்சாவார்
ஊக்கமொன்றறிய மாட்டார்

கழிவுறு மாக்களெல்லாம்
இகழ்ந்திடக் கடையினிற்பார்.

இழிவுறு வாழ்க்கை தேறார்
கனவினுமின்பங் காணார்

அழிவறு பெருமை நல்கும்
அன்னை நின்னருள் பெறாதார்.






# ராஜாஜி

நாட்டில் ஊழல்கள் அதிகமாகி விட்ட காலத்தில், மண் வீட்டில் எலிகள் புகுவது போல் வெள்ளைக்காரர்கள் இந்தியாவில் புகுந்து, சோம்பேறி அரசர்களுடன் சதி செய்து நாட்டை விலைக்கு வாங்கி விட்டார்கள். விற்பவர்கள் நிறைய இருந்தார்கள். வாங்குபவர்கள் சாமர்த்தியசாலிகளாக இருந்தார்கள். நாட்டைக் கொண்டே நாட்டை வாங்கி விட்டார்கள். தங்கள் ஊரிலிருந்து பணம் ஏதும் கொண்டு வரவில்லை.

ஆயினும் 1857-ம் ஆண்டில் நம் தேசத்தை நம்மவர்களே ஆளும் சக்தியும் ஞாபகமும் முற்றிலும் தீர்ந்துவிடவில்லை. ஏதோ காரணத்தால் — முக்கியமாக, தற்போது மூட நம்பிக்கை என்று சொல்லப்பட்டு வரும் சமயாசாரங்களிலுள்ள பற்றின் காரணம் — பிரிட்டிஷார் அரசாட்சியின் கீழ் சேர்ந்திருந்த இந்திய ராணுவப் படைகள் கோபங்கொண்டு அரசாட்சிக்கு விரோதமாகக் கலகம் ஆரம்பித்தார்கள். மராட்டிய வீரர்களும் பிகாரிலிருந்த சிற்றரசர்களும் வட ஹிந்துஸ்தானத்தில் அதிகாரமின்றி அரியாசனத்தில் அமர்ந்திருந்த முஸல்மான் அரச வம்சத்தினரும் சீக்கிரமாகவே ராணுவ கலகத்தை வைத்து வட இந்தியாவில் முக்கிய இடங்களிலெல்லாம் சுயராஜ்யக் கொடியை ஏற்றினார்கள்.

கலகம் பெரிதாகப்போயிற்று. ஹிந்து-முஸ்லிம்-மராட்டி முதலிய குல பேதங்களை மறந்து விட்டு ராணுவமெல்லாம் சுயராஜ்யக் கொடியின்கீழ் ஒன்றுசேர்ந்து போராடினார்கள். முக்கியமாக, தாத்தையா தோபி என்கிற மராட்டிய வீரர் வெகு சாமர்த்தியமாகப் பிரிட்டிஷ் படைகளையும் அவர்களது சமத்காரங்களையும் எதிர்த்து வெகு நாள் வரையில் இழுத்துப் பிடித்துப் போராடினார். ஜான்ஸி ராணியும் மிக தீரத்துடன் வெள்ளையர்களை எதிர்த்துச் சண்டையிட்டார். முடிவில் பிரிட்டிஷ் அரசாங்கம் வென்றது. சுதந்திரப் போர் தோல்வியடைந்தது.

இருபதாவது நூற்றாண்டில் பொது மக்கள் அடைந்த தன்னம்பிக்கையும் சுதந்திர உணர்ச்சியும் அந்தக் காலத்தில் இருந்திருப்பின் பிரிட்டிஷார் வெற்றி பெற்றிருக்க மாட்டார்கள்.

ராணுவத்தில் முக்கியமான அம்சமாயிருந்த சீக்கியப் படைகள் சுதந்திர கலகத்தில் சேரவில்லை. இது பிரிட்டிஷாருடைய சங்கடத்தை அரைப் பங்கு குறைத்து விட்டது. மிகுதி அரைப் பங்கைக் கஷ்டப்பட்டுச் சமாளித்துக் கொண்டார்கள். அதற்குக் காரணம் பொதுமக்களிடையே அக்கறையின்மை.

அந்தக் காலத்தில் பிரிட்டிஷார் தோல்வியடைந்திருந்தால் இந்திய அரசாட்சி வேறு விதமாக இருந்திருக்கும். அனேகமாக வெகு சீக்கிரத்தில் ஒற்றுமை இழந்து பிளவுபட்டு அந்நியர்கள் மறுபடியும் புகுந்திருப்பார்கள். அல்லது வேறு எதுவாயிருக்குமோ சொல்ல முடியாது. ஆண்டவனுடைய விருப்பம் சுதந்திரம் தள்ளிப் போடப்பட்டது. பிரிட்டிஷாருடைய ஆதிக்கத்தில் பலநஷ்டங்கள் நாட்டுக்கு விளைந்த போதிலும் அனேக அம்சங்களில் நாடு லாபம் அடைந்தது. அறிவும் ஒற்றுமையும் அரசியல் உணர்ச்





சியும் மக்களிடையே பரவிற்று. இருபதாவது நூற்றாண்டில் கிட்டத்தட்ட ஐம்பது வருஷங்கள் கடந்த பின் நல்ல முறையில் சுதந்திரம் பெற்றோம். ஸ்திரமான அஸ்திவாரத்துடன் கட்டடம் ஏறியிருக்கிறது என்றே சொல்லலாம். அகிம்சா முறையில் பெற்றோம். பொது மக்களின் சக்தியினால் பெற்றோம். 1857-ம் வருஷத்தில் நடந்த முயற்சியானது ராணுவ முயற்சி. பொதுமக்களின் பலம் அந்த முயற்சியில் ஈடுபடவில்லை. இரண்டுக்குமுள்ள வித்தியாசம் இதுவே.

ஆயினும் நூறு ஆண்டுகளுக்கு முன் மிக தைரியமாகப் பிறப்புரிமைக்காக இந்திய நாட்டின் சிறப்பைக் காக்கும் பொருட்டு உயிரைத் தந்த வீரர்களுக்கு அஞ்சலி செலுத்துவோமாக.

"உன்னுடைய அதிகாரத்தை நான் ஒப்புக் கொள்ள முடியாது" என்று தனக்கு மரண தண்டனை விதிப்பதற்காக உட்கார்ந்திருந்த அதிகாரிகளுக்குத் தாத்தையா தோபி சொன்ன வீரமொழிகள் பாரதத் தாயின் மொழியாகும்.

1857-ம் வருஷத்தில் நடந்த ராணுவ முயற்சி தெற்கே பரவவில்லை. அதற்கும் முந்தி தெற்கே ஏற்பட்ட எதிர்ப்புகளையெல்லாம் பிரிட்டிஷ் கம்பெனியார் சமத்காரமாகவும், ஜனங்களிடையேயிருந்த அக்கறையின்மையையும் பேத உணர்ச்சிகளையும் கொண்டு நன்றாகச் சமாளித்து விட்டார்கள். தெற்கே வீரர்கள் இல்லாமலிருந்ததில்லை. அவர்களெல்லாம் ஒரு பக்கத்தில் பிரிட்டிஷாரின் சக்திக்கும் மற்றொரு பக்கத்தில் நம் மக்களுடைய அறியாமைக்கும் இரையாகி சொர்க்கம் அடைந்தார்கள். இவர்களில் கட்டபொம்மனும் ஹைதர் அலியும் திப்பு சுல்தானும் சரித்திரத்தில் இடம் பெற்றவர்கள். திப்பு சுல்தானுடைய குழந்தைகளின் படம்-அவர்கள் அனாதைகளான காலத்தில் வரைந்த படம் - தில்லி ராஷ்டிரபதி பவனத்திலிருந்து வந்தது—சென்னை கோட்டை மியூஸியத்தில் சீக்கிரம் இடம் பெறும். இந்தப் படம் வெள்ளைக்காரன் வரைந்தது. அதற்கும் முந்தி நம்முடைய நாட்டில் படங்கள் ஏது? காளிதாஸன் படம் எங்கே? சங்கரர் படம் எங்கே? ராஜ ராஜ சோழன் படம் எங்கே? எல்லாம் கற்பனையின் மூலமே காண வேண்டும்! படங்கள் இல்லாமற் போனது நஷ்டமேயாயினும் அவர்களுடைய வீரத்தையும் குணத்தையும் நம்முடைய ரத்தத்தில் மூடிக் கிடப்பதை வெளிப்படுத்துவோமாக!



கேவாபான் 33ல், பி.வி. படேல் எடுத்த புகைப்படம்

# அவன் புன்னகை சொல்லுகிறது அமோக விளைச்சலை !




நிலத்தின் வளத்தையும் பயிரின் செழுமையையும் நன்கு உணர்ந்த இளம் விவசாயி எதிர்காலத்தை எண்ணி மகிழ்கிறான். புதிய நீர்ப் பாசனத் திட்டங்கள் என்றோ ஒரு நாள், அவனது வேலையை எளிதாக்கி அதிகப் பயனளிக்கும் என்பதை உணர்ந்தவன். இப் படமே அதன் வரலாற்றை விவரிக்கிறது: அது மகிழ்ச்சியும் பெருமையும் அளிக்கிறது. கேவர்ட் பிலிமினால் எடுக்கப்பட்ட படங்களைக் கண்டு நீங்கள் எவ்வளவு தூரம் ஆனந்தமடைவீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள்.

அவை உங்களுக்கு இனிமையான சம்பவங்களையும் வியக்கத்தக்க நினைவு அலைகளையும் உங்கள் மனத்தில் கொண்டு நிறுத்தும். வீட்டினுள்ளும் வெளிப்புறத்திலும் படங்கள் எடுக்க கேவாபான் 33 அல்லது கேவாபான் 36 உகந்தவை. கேவாபான் 36ல் மந்தமான வெளிச்சத்திலும் பிரகாசமான படங்களை எடுக்கலாம். அற்புதமான வர்ணப் படங்களுக்கும், பெரிய படங்களுக்கும் கேவாகலர் நெகடிவ் பிலிம்(N5) உபயோகியுங்கள். மேலும் உங்களுக்குத் திருப்தியளிக்க உங்கள் பிரிண்டுகளும், என்லார்ஜ்மெண்டுகளும் — சாதாவோ — கலரோ எதுவாகிலும் கேவர்ட் பேப்பரில் செய்யப்பட்டுள்ளனவா என்று பாருங்கள்.

**GEVAERT**

**ALLIED PHOTOGRAPHICS PRIVATE LIMITED**

அல்லீட் போட்டோகிராபிக்ஸ் பிரைவேட் லிமிடெட்

கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1


ஜயப் பிரகாஷ் நாராயண்


அபுல் கலாம் ஆசாத்


வல்லபாய் படேல்


சித்தரஞ்சன் தாஸ்



ஆல்வின் ட்யூபுலர் ஸ்டீலில் உருவாகிய நாற்காலிகள் மற்றும் மேஜைகளை நீங்கள் இதுவரை உபயோகித்திருக்கும் எதனுடனும் ஒப்பிட்டுப் பாருங்கள்! அனுபவ வாயிலாக பரீக்ஷித்து உருவாகிய எந்தவகை டிசைன்கள்! அமைதிகள்! நீடித்த சேவையளிப்பதற்கேற்ற உறுதி! இந்தியாவிலே, நாகரீக

## ஆபீஸ் நாற்காலிகள் மற்றும் மேஜைகள்

பாணியில் பர்னிச்சர் உற்பத்தி செய்பவர்களில் முன்னணியில் நிற்கும் ஒரே ஒரு ஸ்தாபனமான ஆல்வின், நம்பகமான, மதிப்புவாய்ந்த சாதனங்களை அளிப்பதோடு, உங்கள் பணத்தை மிச்சப்படுத்தவும் செய்கிறது! உங்கள் தேவையைத் தீர்த்துக்கொடுக்குமுன், ஆல்வின் சாதனங்களைப் பார்வையிடுங்கள்.

ஸ்பிரிங் மெத்தை ஆசனங்கள், சௌகர்யமான சாய்மானம், செக்கின் துணியில் எடுப்பாக அமையப்பெற்ற ட்யூபுலர் ஸ்டீல் நாற்காலிகள், மற்றும் சுழலும் நாற்காலிகள்.

பாக்ஸ், டிராயர்கள், லினோலியம் மேல்-உறை, ஆட்டோமாடிக் பூட்டு முதலியவைகளுள்ள ட்யூபுலர் ஸ்டீல் டேபிள்கள்.

## ஆல்வின் எனும் பெயர் எப்பொழுதும் பூர்ண திருப்தி தருகிறது



டிசைன் மற்றும் உறுதிக்கு

# ஆல்வின்

புகழ்பெற்ற பர்னிச்சர்



அருகாமையிலுள்ள வியாபாரியைக் கேளுங்கள், அல்லது படம் கொண்ட புத்தகம் பெறுங்கள்.

ஹைதராபாத் ஆல்வின் மெட்டல் ஒர்க்ஸ் லிட்., சநத்நகர், ஹைதராபாத் 18

---

சென்னை கேரளா மற்றும் ஆந்திர ராஜ்யங்களுக்கு ஏஜண்ட்கள்

மெஸர்ஸ் அடிஸன் அண்டு கோ. பிரைவேட் லிட்., 158, மவுண்ட் ரோடு, சென்

விஸ்தரிக்கப்பட்ட மைசூர் ராஜ்யத்திற்கு ஏஜண்ட்கள்

மெஸர்ஸ் அடிஸன் அண்டு கோ. பிரைவேட் லிட்., ஸெயிண்ட் மார்க்ஸ் ரோடு, பெங்க

எல்லா முக்கிய நகரங்களிலும் டீலர்கள் உள்ளனர்

# இதுதானோ ஜனநாயகம்?

**வினோபா அடிகள்**

நமது பாரத நாட்டில் ஜனநாயகம் எவ்வாறு இயங்கி வருகிறது?

நாம் எல்லோரும் ஜனநாயகத்தைப் பற்றி வானளாவப் பேசுகிறோம். ஆனால் உண்மையில் ஜனநாயக ஆட்சியிலே அதிகாரம், பொறுப்பு எல்லாம் உச்ச ஸ்தானத்தில் உள்ள ஒரு சிலரின் கையில் போய்ச் சேர்ந்து விடுகின்றன. இன்று விரல் விட்டு எண்ணக்கூடிய ஒருசிலரிடம் தான் அதிகாரமும் பொறுப்பும் இருக்கின்றன. அத்தகையோரின் தொகை ஐந்து அல்லது ஆறுக்கு மேல் இராது. மற்றவர்கள் யாவரும் 'ஆமாம், ஆமாம்' என்று கூறும் தலையாட்டிகளாக இருந்து வருகிறார்கள். அந்த ஒரு சிலர் செய்யும் சிறிய தவறு, எண்ணிக்கையற்றவர்களுக்கு அழிவையும் துன்பத்தையும் உண்டாக்கிவிடக் கூடும்.



இன்று மக்களின் வாழ்க்கை சம்பந்தப்பட்ட சகல விஷயங்களும் சர்க்கார் அதிகாரத்துக்கு உட்பட்டு இருக்கின்றன. வாழ்க்கையின் எத்துறையிலும் மக்கள் சொந்தமாக, தங்கள் உசிதப்படி எதுவும் செய்ய முடியாத பரிதாபகரமான நிலையில் இருக்கிறார்கள். உண்மையான எஜமானர்களான கோடிக்கணக்கான வாக்காளர்கள் சர்க்கார் என்ன செய்கிறார்கள் என்பதே தெரியாமல் அறியாமையில் ஆழ்ந்திருக்கிறார்கள். சர்க்காரின் நடவடிக்கைகள் பற்றி அவர்களுக்கு அக்கறையும் இல்லை.

நான் ஓர் உண்மையை எடுத்துச் சொன்னால், எல்லோரும் அதிர்ச்சி அடைந்து விடுவார்கள். அதாவது, பண்டைய காலத்து மன்னர்களுக்கு இருந்த அதிகாரத்தையும் சக்தியையும் விட ஜனநாயக ரீதியில் தேர்ந்தெடுக்கப்படும் நவீன ஆட்சியாளர்களின் அதிகாரமும் சக்தியும் மிகவும் ஆபத்தானவை. பண்டைய மன்னர்களின் எதேச்சாதிகாரக் கொடுமையைத் தவிர்ப்பதற்காகவோ, அல்லது அந்தக் கொடுமையின் விளைவாகவோ பெரும்பாலோரின் ஆட்சி முறை வளர்ந்தது. எனினும், பண்டைய மன்னர்களிடமிருந்த பல குற்றம் குறைகளையும் நவீன ஜனநாயக சர்க்கார் கைவிடாமல் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

இன்று சர்க்கார் எல்லாம் வல்லவர்களாக இருக்கிறார்கள். ஆனால் சர்க்காரின் கீழுள்ள தனி நபர்களோ சக்தியற்றவர்களாகவும்கதியற்றவர்களாகவும் இருந்து வருகிறார்கள்.

இந்த நிலை சுயராஜ்யமாகுமா? ஆகவே ஆகாது. இன்றைய நவீன உலகில் உண்மையான சுதந்திரம் மருந்துக்குக்கூடக் கிடைப்பது அரிதாக இருக்கிறது.

○★○

தீர்க்கதரிசன வாக்கு

சுயராஜ்யம் வந்தவுடன் நல்ல அரசாங்கம் ஏற்பட்டுவிடும் என்றோ, மக்கள் இப்பொழுதைவிட அதிக சந்தோஷமாக வாழ்வார்கள் என்றோ எண்ணக்கூடாது. இவையெல்லாம் ஏற்பட வெகுநாட்கள் பிடிக்கும். சுயராஜ்யம் வந்தவுடன் தேர்தல்களும் அதோடு கூடிய ஊழல்களும் தாண்டவமாடும். அநியாயமும் அதிகார வெறியும், பணத்திமிரும் வாழ்க்கையை நரகமாக்கிவிடும். பலர் மிகுந்த வருத்தத்தோடு பின்னோக்கிப் பார்ப்பார்கள்: பழைய ஆட்சியே, அடிமை வாழ்வே தேவலை போலிருக்கிறதே என்று நினைப்பார்கள். பழைய ஆட்சியில் நிறைமையும், அமைதியும் நேர்மையும் இருந்ததே என்று எண்ணுவார்கள். சுதந்திரத்தினால் 'அடிமை' என்ற அவமானம் இந்திய இனத்துக்கு நீங்கியது ஒன்றுதான் லாபம் என்று கருதுவார்கள். ஆனாலும் எல்லோரும் சிறுபிராயம் முதல் கல்வியறிவு பெற்று, கல்வியின் காரணமாக நன்னடத்தையும், தெய்வ பக்தியும் அன்பும் கொண்ட மக்களாக வாழ்ந்தால், விமோசனம் ஏற்பட வழியுண்டு. இந்த நற்பண்புகளை வளர்ப்பதில் வெற்றி பெற்றால்தான் சுயராஜ்யம் என்பதற்குச் சந்தோஷ வாழ்வு என்ற பொருள் ஏற்படும். இல்லையேல் சுயராஜ்யம் என்றால் அக்கிரமம், பணத்தின் பேயாட்டம் என்ற பொருள்தான் விளையும். ஒவ்வொருவரும் நேர்மையாகவும் தெய்வ பக்தியோடும், பிறரிடம் அன்பு செலுத்தியும் வாழ்ந்தால் இந்த உலகம் எவ்வளவு அழகாக இருக்கும்! இத்தகைய லட்சிய சமுதாயம் உலகில் இந்தியாவில்தான் உருவாக முடியும்!

[பாரத நாடு சுயராஜ்யம் அடைவதற்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே 1921-ம் ஆண்டில் ராஜாஜி சிறைவாசம் புரிந்தபோது தம் நாட்குறிப்பில் எழுதியது.]



# புதிய சமுதாயம்

## ம.பொ.சிவஞானம்

ஒரு நாட்டின் வரலாற்றில் மிக்க துக்ககரமானது, அந்நாடு அடிமைப்படும் நாள். மிக மிக இன்பகரமானது, அடிமைப்பட்ட நாடு மீண்டும் விடுதலை பெறும் நாள்! பாரத நாட்டின் வாழ்வில், பேரின்பகரமான விடுதலை நாளை, இன்று குமரி முதல் இமயம் வரை கொண்டாடுகிறோம். அத்துடன் இந்திய விடுதலைப் போர் துவங்கிய நாளையும் கொண்டாடத் துடிக்கின்றது நம் எண்ணம். அந்தத் துடிப்பிலே விடுதலைப் போர் என்று - எங்கே துவங்கியது என்ற உண்மையைத் தெரிந்து கொள்ளத் தவறிவிட்டோம்.

இந்திய விடுபலைப் போர் துவங்கியது 1857-ல் அல்ல; 1792-ல் ஆகும். ஆம்; இந்திய விடுதலைப் போர் துவங்கி இன்றைக்கு 165 ஆண்டுகள் ஆகின்றன! துவங்கிய இடம், பாஞ்சாலங் குறிச்சி; துவக்கி வைத்த முதல்வன், வீரபாண்டியக் கட்டபொம்மன்!

ஆங்கில ஆதிக்கத்துக்குக் கப்பம் கட்ட மறுத்து 1792-ல் 'வரி கொடாமைப் போர்' துவக்கினான் பாஞ்சாலங் குறிச்சி மன்னன் கட்டபொம்மன். அப்போர் 1799 அக்டோபர் 16-ல் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்டதோடு முற்றுப் பெற்றது.

அது முதல் கட்டம்!

கட்டம்பொம்மன் தம்பி ஊமைத் துரையின் தலைமையில் 1801-ம் ஆண்டில் அந்த பாஞ்சாலங்குறிச்சியில் திரும்பவும் விடுதலைப் போர் துவங்கியது. அதில் பல்லாயிரம் மாவீரர்கள் மாண்டனர். பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டை தகர்ந்து தரைமட்டமானது. இறுதியில், ஊமைத்துரை தலைமறைவாகத் தப்பியதோடு போராட்டத்தின் இரண்டாவது 'கட்டம் முடிவுற்றது.

தலைமறைவாகத் திரிந்த ஊமைத் துரை 1802-ம் ஆண்டில், மீண்டும் போர்க் கோலங் கொண்டு வெளிப்பட்டான். அவன் தலைமையில் சிவகங்கை மன்னன் மருது பாண்டியன், அவன் தம்பி சின்னமருது ஆகியோர் ஆங்கிலேயரை எதிர்த்து அமர்க்களம் புரிந்தனர். பல மாதங்கள் போர் கடுமையாக நடைபெற்ற பிறகு, வெள்ளையர்கள் வெற்றி பெற்றனர். வீரபாண்டியன் தம்பியும், மருது சகோதரரும் தூக்கிலிடப் பட்டனர். அது மூன்றாவது கட்டம்!

புரட்சிப் புயல் 1806-ம் ஆண்டில் தென் தமிழகத்திலிருந்து வட தமிழகமாம் வேலூரை அடைந்தது. அங்கே, சுதந்திர ஆர்வம் கொண்ட இந்திய சிப்பாய்கள் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போர் புரிந்தனர். அந்தச் 'சிப்பாய்ப் புரட்சி'யும் முளையிலேயே கிள்ளி எறியப்பட்டது.'

அது நான்காவது கட்டமாகும்!

தமிழ் வழங்கும் நாஞ்சில் நாட்டில்- திருவனந்தபுரம் ஆட்சியின் தென் கோடியில் 1808-ம் ஆண்டில், ஒரு மா வீரன் தோன்றி

# அமைப்போம்

னான். அவன் பெயர் தளவாய் வேலுத் தம்பி என்பதாகும். அந்த நாஞ்சில் வீரன் திருவனந்தபுரம் மன்னனிடம் தளவாய் பதவி வகித்தான். அதுகாரணமாகத் திருவிதாங்கூர் ஆட்சியை அடிமைப்படுத்த முயன்ற ஆங்கிலக் கூட்டத்தை எதிர்த்துப் போராடினான். இறுதியில் மாற்றாரிடம் பிடிபடுவது மானத்துக்கு இழுக்கெனக் கருதித் தன் கழுத்தைத் தானே வெட்டிக் கொண்டு மாண்டான்.

அது ஐந்தாவது கட்டம்!

இத்துடன் தென்னகத்தில் ஏகாதிபத்திய எதிர்ப்புப் புயல் அடங்கி விட்டது.

பின்னர், ஐம்பதாண்டுகள் வரை ஆங்கில வர்த்தகக் கூட்டம் தட்டிக் கேட்க ஆளின்றித் தனியாட்சி புரிந்தது. தென்னாட்டில் விடுதலைப் போரில் மாண்ட மன்னர்கள் போக, அவர்களைக் காட்டிக் கொடுத்து வாழ்ந்த சிற்றரசர்கள் எல்லாம் படை வைத்திருக்கும் உரிமையை இழந்தனர். ஆணை செலுத்தி அரசாண்ட அவர்கள் ஆங்கிலக் கம்பெனிக்கு வரி வசூலித்துக் கொடுக்கும் ஏஜெண்டுகள் என்ற இழி நிலையை அடைந்தனர். பொது மக்களும் கையில் தடி, கத்தி போன்ற ஆயுதங்கள் வைத்திருக்கக் கூடாதென்று ஆணை பிறந்தது. சுருங்கச் சொன்னால் தமிழ் மறக்குல மைந்தர்கள், வாள்வலியும் தோள்வலியும் தொலைத்து மண் வெட்டிக் கூலி பெறும் தாழ்நிலையை அடைந்தனர்.

அந்த நிலையில், ஆங்கிலேயர் இழைத்த கொடுமைதாளாமல் வடக்கே ஏகாதிபத்திய எதிர்ப்புப்புரட்சி தோன்றியது. பேரரசர்கள், சிற்



றரசர்கள், சிப்பாய்கள், குடிமக்கள் ஆகிய அனைவருமே ஆங்கிலேயருக்கு எதிராகப் போர் புரிந்தனர். அந்தப் போர், சுமார் பன்னிரண்டு மாதங்கள்வரை மிகப் பெரிய நிலப் பரப்பில் நிகழ்ந்தது. இறுதியில், பல லட்சம் தேச பக்தர்களைப் பலி கொண்ட பின்னர் கிழக்கிந்தியக் கம்பெனியின் வெற்றியோடு முடிந்தது.

அது, இந்திய விடுதலைப் போரின் ஆறுவது கட்டமாகும். அதுவே, ஆயுதப் போரின் கடைசிக் கட்டமாகவும் முடிந்தது! அப்புறம் 1885-ல் காங்கிரஸ் மகாசபை தோன்றி, அறப்போருக்கு வழி வகுத்தது.

இந்திய நாடு 1947 ஆகஸ்ட் 15-ந் தேதி வெள்ளையரிடமிருந்து மட்டும் விடுதலை பெறவில்லை. மன்னர் வழியும் மதவழியும் இயங்கி வந்த குறுகிய தேசபக்தர்களிடமிருந்தும் விடுதலை பெற்றது. 1792—ல் துவங்கி 1947 வரை நடைபெற்ற விடுதலைப் போராட்டம், தேச பக்த இந்தியர்களின் உள்ளங்களை விசாலமாக்கி விட்டது. ஏன்? 'தேச பக்தி' என்னும் பண்புக்கே புதிய இலக்கணம் கண்டு விட்டது.



இன்று நாம் தமிழ் தேச பக்தர்களோ, மராத்திய தேச பக்தர்களோ, அல்லது உத்தரப்பிரதேச தேச பக்தர்களோ அல்லோம். "இந்திய தேச பக்தர்கள்" என்று கூறிக் கொள்ளும் பெருமை பெற்று விட்டோம்.

ஆனால், 'இந்தியர்' என்ற சமுதாய உணர்ச்சி, சாதியாலும், மதத்தாலும் மொழி வழி இனத்தாலும் சிறுபான்மையாக உள்ளவர்களின் நியாயமான உரிமைகளுக்கு எதிராகச் செல்லுமானால், மீண்டும் பழைய உட்பூசல்கள் தலை எடுக்கும். அந்தப் பூசல்கள் போராட்டங்களாகவும் மாறலாம். ஆகவே, மறுமலர்ச்சிபெற்ற தேசபக்தியை எச்சரிக்கையோடு பயன்படுத்த வேண்டும்.

மதவழிக் கொண்டாடும் கிருஷ்ண ஜயந்தியோ, விநாயக சதுர்த்தியோ பக்திக்குரிய விழாக்களாகும். ஆனால், ஆகஸ்ட் 15-ல் நாம் கொண்டாடும் விடுதலைத் திருநாள் பகுத்தறிவோடு சிந்தித்து வருங்கால வாழ்வுக்கு வழிகோல வேண்டிய நன்னாள்.

ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் வியாபாரி லாப நஷ்டக் கணக்கு பார்ப்பது போல, தேசபக்தர்கள் ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்டு 15-ந் தேதி விடுதலை இந்தியா பெற்று வரும் முன்னேற்றத்தை அளந்து பார்க்க வேண்டும். அப்படிச் செய்யாமல், "ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே!" எனப் பாடி மகிழ்வதில் பயனில்லை. அத்தகைய மூடத்தனமான தேசபக்தியால் பெற்ற விடுதலையைப் பேணி வளர்க்க முடியாது.

அந்த நாளில், இந்திய மக்கள் எல்லோருடைய பொது எதிரியாக இருந்தது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். அதனால், வெவ்வேறு நலன்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கும், பல்வேறு தரப்பினரும் ஒன்றுபட்டு விடுதலைப் போரில் பங்குகொள்ள முடிந்தது. சந்தர்ப்பச் சூழ்நிலை, அப்படி ஒன்றுபட்டுத் தீரவேண்டிய நிர்ப்பந்தத்தை உண்டாக்கியது. ஆம், புலியும் பசுவும் ஒரே துறையில் தண்ணீர் குடிப்பது போன்றிருந்தது, அந்த நாளில் காங்கிரஸ்காரர்களிடையே இருந்த உறவு!

ஆனால் வெள்ளையனை வெளியேற்றி அரசியல் விடுதலை பெற்றதும் அந்த நிர்ப்பந்த நிலை அகன்றுவிட்டது. இந்தியாவிலுள்ள பல்வேறு தரப்பினரும் பரஸ்பர நம்பிக்கையின் பேரில் ஒன்றுபட வேண்டிய புதிய சூழ்நிலை உருவாகியுள்ளது. ஏகாதிபத்திய ஆட்சியின் கீழ் வளர்ந்த "கட்டாய தேசபக்தி"யை இன்று வளர்க்கவோ, அதன் மூலம் தேசிய ஐக்கியத்தைக் காக்கவோ முடியாது. சாதிகளின், சமயங்களின் மொழிவழி இனங்களின் உரிமைகளைச் சமப்படுத்துவதன் மூலம்தான் சரிந்து வரும் தேசிய உறவைச் சரிப்படுத்தமுடியும்.

ஆகஸ்டு 15-ல் இந்தியா பெற்றது வெறும் அரசியல் விடுதலைதான். அதாவது ஆளுகின்ற அன்னியரிடமிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றினோம் — அவ்வளவுதான். அதிகாரத்தைக் கைப்பற்றுவது வேறு; கைப்பற்றிய அதிகாரத்தை நேரிய முறையில் நிர்வகிப்பது வேறு. நம்மை அடிமைப்படுத்திய அன்னியர் மீதும் துவேஷம் காட்டக் கூடாதென்ற கருமத்தின் பேரில் நாம் அறவழிப் போராடினோம். அவ்வளவு பண்பு படைத்த மக்களாகிய நாம் நமக்குள்ளே சாதித் துவேஷம், மதத் துவேஷம், இனத் துவேஷம் பாராட்டி அதிகாரம் செலுத்த முயலுவோமானால், கட்டபொம்மன் காலத்திலிருந்து காந்தியடிகள் காலம்வரை தோன்றிய தியாகிகளின் வாரிசுகளாக வாழ்வதற்கு நாம் உரிமையற்றவர்களாவோம்.

நாம் பெற்றுள்ள சுதந்திரம் பிறைச் சந்திரன் போன்றது. அது பூரண சந்திரனாக வளர்ச்சி பெறவேண்டுமானால், சமநீதி அடிப்படையில் ஒரு புதிய சமுதாயம் அமைத்தாக வேண்டும். அந்த லட்சிய சமுதாயத்தை நோக்கி யாத்திரை செய்து கொண்டிருக்கிறோம் என்ற நம்பிக்கையோடு விடுதலை விழாவைக் கொண்டாடுவோமாக!

# சோலைக் குயில்



## முன்னுரை

கராச்சி காதலியைப் படித்து விட்டுப் பல நேயர்கள் என்னைப் படாதபாடு படுத்தி விட்டார்கள். கதையின் முடிவில் மற்றொரு கதைக்கும் ஆரம்பமிருக்கிறதே? ஷியாமா என்ன சொன்னாள்? அவள் கூறிய வரலாற்றையும் எழுதி விடுங்கள் என்று கேட்டுக்கொண்டே இருக்கிறார்கள்.

நேயர்களைப் போலவே எனக்கும் ஷியாமாவைப் பார்த்து அவள் சொல்லும் கதையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டு விட்டது.

அதற்கு ஒரு சரியான சந்தர்ப்பமும் கிடைத்தது. சமீபத்தில் ஒரு முக்கிய காரியமாகப் புதுதில்லிக்குச் சென்றேன். காரியம் முடிந்தவுடன் முதல் காரியமாகக் குமாரையும் ஷியாமாவையும் போய்ப் பார்த்தேன்.

என்னைப் பார்த்த உடனேயே என் ஆவலைப் புரிந்து கொண்ட ஷியாமாவும் அவள் கணவர் குமாரும் தங்கள் கதையைச் சொல்ல ஆரம்பித்து விட்டனர்.

## 1

ஆரம்பிக்கும்போதே, "காஸிம் ரஸ்வி என்ற பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என்று ஒரு கேள்வியைப் போட்டுக் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள் ஷியாமா.

இத்தகைய ஆரம்பத்தை நான் சிறிதும் எதிர்பார்க்கவேயில்லை. என்னுடைய ஆச்சரியம் சிறிது அடங்கியதும், "ஏன் கேள்விப்படவில்லை? நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஹைதராபாத்தில் ரஸாக்கர்கள் கூட்டத்துக்குத் தலைமை வகித்துக் கொலை கொள்ளை முதலிய கொடூரச் செயல்களைப் புரிந்த அரக்கன் அல்லவா அவன்? அவனை மறக்க முடியுமா என்ன?" என்றேன்.

"அவர் என்னுடைய மாமா!"

நான் திடுக்கிட்டுப் போனேன். "தங்கள் மாமா என்று தெரிந்திருந்தால் இப்படிப் பேசியிருக்க மாட்டேன்" என்றேன்.

"பின் எப்படிப் பேசுவீர்கள்? என்னுடைய மாமா என்பதால் அவர் மிக நல்லவர், உத்தமர், யோக்கியர் என்றெல்லாம் சொல்லி விடுவீர்களோ?"

இதென்னடா ஆபத்தில் மாட்டிக் கொண்டோமே என்று எண்ணி, "இல்லை......" என்று இழுத்தேன்.

"அது போகட்டும். கதையைச் சொல்" என்று குமார் என்னுடைய உதவிக்கு வந்தார்.

"குறுக்கே பேசாது இருங்கள், சொல்கிறேன்.

"காஸிம் ரஸ்வி உண்மையில் பொல்லாதவர் தான். மிகக் கொடூர சிந்தை உடையவர்தான். ஆனால் அவர்



பிறக்கும்போதே அப்படிப் பிறந்து விடவில்லை. சந்தர்ப்ப வசத்தால் சூழ்நிலையின் காரணத்தால் அவர் அத்தகைய மனநிலையை அடைந்து விட்டார்.

ரஸ்வியினுடைய மனத்தில் அன்புக்கும் இடமில்லாமல் போக வில்லை. அவர் தம் வாழ்நாளில் ஒரே ஒரு உயிரின் மீது அளவற்ற அன்பு செலுத்தினர். அந்த உயிர் நான்தான். ரஸ்வியின் தமக்கை இறக்கும் தறுவாயில் அவரிட மிருந்து என்னை அன்புடன் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்று வாக்குறுதி பெற்றுக் கொண்டாள். ரஸ்வி தமக்கைக்கு அளித்த வாக்குறுதியை நன்கு நிறைவேற்றினர்.

"உன்னுடைய அம்மாவுக்கு அளித்த வாக்குறுதியை நான் நன்கு நிறைவேற்றியிருக்கிறேன் அல்லவா?" என்று என்னை ஒரு சமயம் ரஸ்வி கேட்டார்.

"அதில் என்ன சந்தேகம்? நன்கு நிறைவேற்றி யிருக்கிறீர்கள்" என்றேன்.

"உனக்கு ஒரு குறைவும் இல்லையே?"

"ஒன்றுமே இல்லை."

"நீ பொய் சொல்கிறாய். கல்யாணம் செய்து கொண்டு இந்த அரக்கனை விட்டுப் போய்விட வேண்டும் என்று நீ ஒருபோதும் நினைத்ததில்லையா?" என்று கேட்டார்.

நான் திடுக்கிட்டுப் போனேன். உண்மையில் அம்மாதிரியே நான் பல தடவைகள் எண்ணியிருக்கிறேன். ஆனல் வெளிப்படையாக "அதெல்லாம் ஒன்றும் இல்லை. உங்களை விட்டுப் பிரிவதற்கு என்னல் ஒருநாளும் முடியாது" என்று சொல்லி வைத்தேன்.

"உண்மையாகவா சொல்கிறாய்? ரஸ்விக்கு இன்று ரொம்ப சந்தோஷத்தை அளித்திருக்கிறாய். அப்படியானல் ஒன்று செய்வோம். நம்முடனேயே இருக்கக் கூடிய பையனைப் பார்த்து உனக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுகிறேன். ரொம்பச் சௌகரியமாகப் போய் விடும்!" என்றார் ரஸ்வி.

## 2

ரஸ்வியின் வாழ்க்கையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. அடிக்கடி அவரைப் பார்ப்பதற்குப் பலர் வரலாயினர். அனைவரும் ரஸ்வியுடன் ஒரு அறையில் கூடி மணிக்கணக்காகப் பேசிக் கொண்டே இருப்பார்கள்.




ஒருநாள் கூட்டம் முடிந்ததும் ரஸ்வி உணவருந்த வந்தார். ஆனல் தனியாக வரவில்லை. அவருடன் மற்றொருவரும் வந்தார். "இரண்டு நபர்கள் உணவருந்த ஏற்பாடு செய்" என்றார் என்னிடம்.

ஒரு சிலரைப் பார்த்தவுடனேயே நமக்கு அன்பும் அபிமானமும் ஏற்படுகின்றன. வேறு சிலரைப் பார்த்தாலே அருவருப்பும் அச்சமும் உண்டாகின்றன. அதே முறையில் தான் எனக்கு ரஸ்வியின் அருகில் அமர்ந்திருந்த மனிதர்மீது வெறுப்பு உண்டாகி ஒவ்வொரு கணமும் வளர்ந்துகொண்டே வந்தது.

"இவர்தான் என்னுடைய சேனதிபதி இப்ராஹிம்" என்றார் ரஸ்வி.

"சேனதிபதியா?" என்று வியப்போடு நான் கேட்டேன். பின்னர் விளையாட்டாகச் சொல்கிறார் என்று எண்ணி, "ஆமாம், அவர் சேனதிபதி, நீங்கள் ராஜா, நான் ராஜகுமாரி அப்படித்தானே?" என்று கேட்டேன்.

ஏதோ பெரிய ஹாஸ்யத்தைக் கேட்டு விட்டதுபோல் இருவரும் சிரித்தனர்.

"ராஜாவின் சம்மதத்துடன் ராஜகுமாரியைச் சேனதிபதி கல்யாணம் செய்து கொள்ளப் போகிறார்" என்றார் ரஸ்வி. பின்னர் அவரே தொடர்ந்து பேசினர்:

"நமது போர் நாளை ஆரம்பமாகிறது. செகந்தராபாதில் இருந்த இந்தியத் துருப்புகளை இந்திய சர்க்கார் வாபஸ் பெற்றுக் கொள்ளும்வரை காத்திருந்தேன். இப்போது இந்தியா - ஹைதராபாத் ஒப்பந்தத்தின்படி இந்திய சர்க்கார் தங்கள் துருப்புகளை வாபஸ் பெற்றுக்கொண்டு விட்டார்கள். இனி ஹைதராபாத் சமஸ்தானத்தில் ரஸ்வியின் ஆட்சி ஆரம்பமாகும்! நைஜாம் சிறிது காலம் நாம் ஆட்டிவைக்கும் பொம்மையாக விளங்குவார். அதன் பின் அவரையும் தொலைத்து விடுவேன். அப்புறம் 'ஹைதராபாத் நைஜாம் காஸிம் ரஸ்வி'யின் மருமகளுக்கும் நைஜாமின் சேனதிபதிக்கும் விமரிசையாகத் திருமணம் நடைபெறும். நீ படுக்கச் செல்லலாம்."

படுக்கையில் விழுந்து விம்மி விம்மி அழுதேன். ஆத்திரம், துக்கம் இவற்றுடன் மனக் குழப்பமும் சேர்ந்து கொண்டது. ரஸ்வி நிறைய ஆட்களையும் ஆயுதங்களையும் சேகரித்திருக்கிறார் என்று ஏற்கனவேயே எனக்குச் சந்தேகம் இருந்தது. ரகசியக் கூட்டங்கள் நடைபெற்ற காரணமும் இப்போது தெரிந்துபோயிற்று. இரவெல்லாம் தூக்கம் இல்லாமல் 'எனக்கு ஏற்படப் போகும் கதியிலிருந்து எப்படித் தப்புவது?' என்று யோசித்தேன். கடைசியில் ரஸ்விக்குத் தெரியாமல் ஓடி விடுவது என்று தீர்மானித்

தேன். ஆனால் நான் தப்பி ஓடுவதற்கு அவசியம் இல்லாமல் என்னுடைய கணவர் செய்து விட்டார்.''

இப்படிச் சொல்லிக் கொண்டே ஷியாமா தன் கணவரைக் காதலும் அன்பும் சொரியும் கண்களால் பார்த்துப் புன்னகை புரிந்தாள்.

## 3

குமார் மெதுவாகத் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, ''கதையைத் தொடர்ந்து இனி நான் சொல்லுகிறேன். கதையின் இந்தக் கட்டத்தை அவளைவிட என்னால் நன்கு கூற முடியும்'' என்று ஆரம்பித்தார்.

'' 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் வல்லபாய் படேலின் ஆற்றலினால் சுதேச சமஸ்தானங்கள் அனைத்தும் பாரதத்துடன் அமைதியான முறையில் ஐக்கியம் அடைந்து விட்டன. இதற்கு விதிவிலக்காக ஹைதராபாத் சமஸ்தானம் மட்டும் நடந்து கொண்டது.

ரஸாக்கர்களின் அட்டூழியம் அதிகமாகவே பாரத மக்கள் சிறிது சஞ்சலம் அடைந்தபோது 'அவசரப் படாதீர்கள். பழுத்தவுடன் ஆபரேஷன் செய்யப்படும்' என்றார் ஸர்தார் படேல். அவர் கூறியது போல், நிலைமை பழுத்தவுடன் இந்திய ராணுவத்துக்குத் தகவல் தெரிவிப்பதற்காக நான் அனுப்பி வைக்கப்பட்டேன்!

என்னுடைய பெயரைக் கேசவ்ராம் என மாற்றி வைத்துக் கொண்டு ரஸ்வியின் கொள்ளைக் கூட்டத்தினருடன் நானும் ஒரு வீரனாகச் சேர்ந்து கொண்டேன்.

ஆனால் இந்த நிலை எனக்கு ஏற்றதாக இல்லை. ரஸ்வியின் அருகில் இருந்து அவன் நன் மதிப்பைப் பெற்று, அவன் இதய அந்தரங்கத்தில் இருக்கும் ஆசைகளை அறிந்து கொள்ள விரும்பினேன். என்னுடைய வேலையும் அதுவே அல்லவா? அந்தச் சந்தர்ப்பம் எனக்கு விரைவில் கிடைத்தது.

அன்று இரவு திறந்தவெளியில் என் சகாக்களுடன் படுத்திருந்தேன். தூரத்தில் எங்கேயோ ஒரு நரி ஊளையிட்டது. அந்தச் சத்தம் கேட்டதும் என் அருகே படுத்திருந்தவர்களில் பலர் எழுந்து சென்றனர். எனக்குச் சந்தேகம் ஏற்படவே நானும் அவர்களைப் பின்தொடர்ந்தேன். அனைவரும் ஒரு கூடாரத்தினுள் நுழைந்தார்கள். கூடாரத் துணியில் இருந்த ஒரு சிறிய இடைவெளி வழியே பார்த்தேன். அங்கு ஏற்கனவேயே சிலர் குழுமியிருந்தனர். அவர்களுக்கு மத்தியில் நடுநாயகமாக ஒருவர் அமர்ந்திருந்தார்.

அவர்களுடைய தலைவரைப்போலத் தோன்றிய அவர் பேசியதிலிருந்து அவர்கள் ரஸ்விக்கு எதிராகச் சதி செய்கிறார்கள் என்று தெரிந்து கொண்டேன்.

''நாளை இரவு சரியாக இரண்டு மணிக்கு ரஸ்வியின் தலை தரையில் உருளும். அதன் பின் உங்கள் விருப்பப்படியும் உங்கள் யோசனைப்படியும் நான் நடந்து கொள்வேன். சுதந்திர ஹைதராபாத்தில் உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு உயர்ந்த பதவி காத்திருக்கிறது. ரஸ்வியின் தலையைத் துண்டிக்கும் மகத்தான காரியத்தைச் செய்பவர் முதன் மந்திரியாக்கப்படுவார்'' என்று தலைவர் கூறி வந்த போது சுற்றிலும் இருந்தவர்களின் கண்கள் ஆர்வத்தினாலும் பேராசையாலும் அகல விரிந்தன.

போட்டி மிகவும் பலமாக இருந்தது. கடைசியில் சீட்டு குலுக்கிப் போட்டு யார் ரஸ்வியைக் கொலை செய்வது என்று தீர்மானம் செய்தார்கள்.

## 4

மறு நாள் இரவு வெகு நேரம் கண்விழித்துப் படுத்திருந்தேன். என்னுடைய கைகடிகாரம் அந்தக் கும்மிருட்டில் மணி பன்னிரண்டு என்று தெரிவித்தது. நான் மெல்ல எழுந்து ரஸ்வி தங்கியிருந்த கட்டடத்தை நோக்கி நடந்தேன். வீட்டின் வாசலில் இரண்டு காவலர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

என்ன செய்வது என்று ஒரு கணம் யோசித்தேன். அடுத்த கணம் திறந்திருந்த ஜன்னல் ஒன்று என் கண்களில் பட்டது. அந்த ஜன்னலில் கம்பிகள் போடப்படவில்லை. சுலபமாக அதன் வழியே உள்ளே நுழைந்தேன்.

என்னுடைய 'டார்ச்லைட்'டின் உதவியால் கீழே இருந்த அறைகளையெல்லாம் தேடிவிட்டு மாடிக்குச் சென்றேன். கடைசிப்படியில் காலை வைத்ததும், 'அப்படியே நில். அசையாதே. இல்லையானால் உன்னைச் சுட்டு விடுவேன்!' என்ற குரல் கேட்டது.

எனக்கு முதலில் கதிகலங்கிப் போய் விட்டது. ஆனால் அது ஒரு பெண்ணின் குரல் என்று தெரிந்துகொண்டதும் சிறிது தைரியம் வந்தது. டார்ச் லைட்டின் ஒளியை அந்தப் பெண்ணின் முகத்தில் செலுத்தினேன். பிரகாசமான அந்த ஒளியைத் தாளாது அப்பெண்ணின் அகன்ற கண்கள் மூடிக் கொண்டன. அவள் கையில் இருந்த பளபளக்கும் துப்பாக்கியின் மீது டார்ச் லைட்டின் ஒளி பட்டு நாலாபக்கமும் சிதறியது. அப்பெண்ணுக்கு அந்தத் துப்பாக்கியை உபயோகிக்கும் எண்ணம் சிறிதளவும் இல்லை என்பது எனக்குத் தெரிந்து போயிற்று.

'' உமக்கு என்ன வேண்டும்?'' என்று அந்தப் பெண் கேட்டாள்.

''ரஸ்வியைப் பார்க்க வேண்டும்.''

''எதற்காக?''

''அதை அவரிடமே நான் தெரிவிக்க விரும்புகிறேன்.''

''அப்படியானால் நீங்கள் அவரைப் பார்க்க முடியாது! மரியாதையாக இங்கிருந்து போய் விடுகிறீர்களா? அல்லது வாசலில் இருக்கும் காவலாளிகளைக் கூப்பிடவா?''

''தங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படியு முன்னர் இவ்வளவு அதிகாரத்துடன் பேசும் தாங்கள் யார் என்று தெரிந்து கொள்வதற்கு விரும்புகிறேன்.''

'' நான் ரஸ்வியின் மருமகள் '' என்றாள் அழகே உருவான அந்தப் பெண்.

அவளிடம் நான் எல்லா விவரங்களையும் தெரியப்படுத்தினேன். கவனமாகக் கேட்டு விட்டு 'என்னோடு வாருங்கள்' என்று சொல்லி என்னை ரஸ்வியிடம் அழைத்துச் சென்றாள்.

நான் சொல்வதையெல்லாம் கேட்டு விட்டு ரஸ்வி தன் மருமகள் ஷியாமாவைப் பார்த்து,

## மழைக்கால ரஸ்தாக்களை சமாளிக்க

# Firestone

## பயர்ஸ்டோன்

## நியூ டீலெக்ஸ் சாம்பியன் ட்யூப்லெஸ் டயர்கள்

### பொருத்த இதுவே தக்க சமயம்

ஸ்டோன் நியூ டீலெக்ஸ் சாம்பியன் ட்யூப்லெஸ் டயர் களுக்கும், உங்கள் குடும்பத்தினருக்கும் வேறெந்த பராலும், எந்த விலையிலும் இதுவரை அளிக்க முடியாத சேஷ பாதுகாப்பை அளிக்கிறது. ஈரமானதும், வழுக்கும் தைகளில், அது சறுக்காமல் செல்லுவதில் இணையற்றது. டிப்புகள் தொல்லை ஏற்படாது. மற்றும் அது அபாய றி. நீடித்த மைல்கள் உழைக்கிறது. மன நிம்மதியுடன் யாணம் செய்வதற்கென்றே தயாரித்த டயர் இது ஒன்றே.

**ன நிம்மதியுடன்' பிரயாணம் செய்வதற்கென்றே பாரித்த முதல்முதலான டயர் இது ஒன்றே!**



# நல்ல தேநீர் தயாரிக்க புதிய நீரை உபயோகியுங்கள்

உபயோகிக்கும் நீர் புதியதாக இல்லாவிட்டால்—தேநீர் அதன் எல்லா நல்ல குணங்களையும் இழந்துவிடும்.

**இந்த முக்கிய விதிகளை பின்பற்றுங்கள்**

1. நம்பகமான வியாபாரியிடம் மட்டுமே தேயிலையை வாங்கவும்.
2. புதிய நீரை எடுத்துக்கொள்ளவும். நீரை நன்கு கொதிக்கும்வரை சூடு செய்து, கெட்டிலை அடுப்பிலிருந்து அகற்றிவிடவும். தேநீர் பாத்திரத்தை வெந்நீரால் நன்கு அலசிக் கழுவவும்.
3. ஒவ்வொரு பேருக்கு ஒரு தேக்கரண்டி வீதமும், தேநீர் பாத்திரத்தை உத்தேசித்து ஒரு தேக்கரண்டி அதிகமாகவும் கணக்கிட்டு தேயிலையை தேநீர் பாத்திரத்தில் சட்டென்று போடவும்.
4. கொதிக்கவைத்த நீரை உடனுக்குடன் தேநீர் பாத்திரத்தில் ஊற்றி, தேயிலையை மூன்று முதல் ஐந்து நிமிஷங்கள் வரை ஊறவைக்கவும்.
5. தேநீரை கோப்பையில் ஊற்றி, பாலையும் சர்க்கரையும் ருசிக்கு ஏற்றவாறு சேர்த்துக்கொள்ளவும். கலக்கி அருந்தவும்.

டீ - நட்பின் சின்னம்



"இதில் உண்மை இருக்கலாம் என்று நம்புகிறீர்களா என்ன?" என்று கேட்டார்.

"ஏன் இருக்கக் கூடாது? ஒரு வேளை உண்மையாக இருந்து, நீங்கள் அலட்சியமாக இருந்து விட்டால், பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொள்வீர்கள். ஆனால் இவர் கூறுவது பொய்யாக இருந்தும், நீங்கள் முன் ஜாக்கிரதையாக இருப்பதால் நஷ்டம் ஒன்றும் இல்லை" என்று ஷியாமா கூறினான்.

ரஸ்வி சிறிது நேரம் யோசித்தார். அவர் முகத்தில் கொடூரமான ஒரு புன்னகை தோன்றியது. என்னைப் பார்த்து, "நீ சிறிது நேரம் காஸிம் ரஸ்வியாக இரு" என்றார்.

## 5

எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் விழிப்பதைப் பார்த்துவிட்டு, "அப்பனே! உன் மூளை ரொம்ப மெதுவாக வேலை செய்கிறது. எனக்குப் பதிலாக நீ இந்தப் படுக்கையில் படுத்துக்கொள் என்கிறேன். நீ சொல்வது போல் இரண்டு மணிக்கு என்னைக் கொல்ல யாராவது வந்தால் என் படுக்கைக்கு வருவான். நான் இந்தத் திரை மறைவில் ஒளிந்திருப்பேன். உன்னை நெருங்கியதும் அவனைக் கொன்று விடுவேன். இரண்டரை மணிவரை இப்படிக் காத்திருப்பேன். அதற்குள் யாரும் என்னைக் கொல்ல வராவிட்டால் ரஸ்வியின் தூக்கத்தைக் கெடுத்ததற்காக உன்னைக் கொன்று விடுவேன். சதிகாரன் தப்பித் தவறி வெற்றி அடைந்தாலும், ரஸ்வி இறக்கமாட்டான். இந்த உலகத்துக்குப் பாரமாக இருக்கும் ஒரு சாதாரண மனிதனே இறந்து போவான். புரிகிறதா?" என்று கேட்டு முடித்தார் ரஸ்வி.

அவரது நல்லெண்ணத்தைப் பெறும் மகத்தான சந்தர்ப்பம் அது என்பதை உணர்ந்தேன். இன்று இரவு எனக்கு வெற்றி கிட்டுமானால் நான் மேற்கொண்ட காரியங்கள் சுலபமாக நிறைவேறி விடும்.

'சரி' என்று ஒப்புக் கொண்டு ரஸ்வியின் படுக்கையில் படுத்துக் கொண்டேன். ரஸ்வியின் கட்டளைப்படி ஷியாமா தன் அறைக்குச் சென்று விட்டான். ரஸ்வி திரை மறைவில் ஒளிந்து கொண்டார். சதிகாரனை எதிர் பார்த்து இரண்டு பேரும் காத்திருந்தோம்.

எங்கேயோ ஒரு கடிகாரம் 'டங் டங்' என்று இரண்டு மணி அடித்தது. திரை மறைவில் இருந்த ரஸ்வி மெல்லக் கனைத்துக் கொண்டார். ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகம் போலக் கழிந்தது. யாரோ மெல்ல மாடிப் படிகளில் ஏறும் சத்தம் கேட்டது. எந்தக் கணமும் படுக்கையிலிருந்து பாய்ந்து அகலச் சென்று விட நான் தயாராக இருந்தேன். சதிகாரன் என் படுக்கையிலிருந்து ஒரு அடி தூரத்தில் இருக்கும்போது அவன் தலையில் பலமான அடி விழுந்தது.

"அவனைக் கொன்று விடுவீர்கள் என்று எண்ணினேன்" என்றேன் நான்.

"கொன்று விட்டால் அவனுடைய சகாக்களைப் பற்றி எப்படித் தெரிந்து கொள்வது?" என்று கேட்டார் ரஸ்வி.

"தன் சகாக்களைப் பற்றி அவன் கூற மறுத்தால்?...."

ரஸ்வி சிரித்தார். "கேட்கிறபடி கேட்டால் பதில் சொல்கிறான்" என்றார்.

மறுநாளிலிருந்து நான் காஸிம் ரஸ்வியின் முதன் மந்திரி!

நாட்கள் சென்றன. ரஸ்விக்கு என்னிடமிருந்த நம்பிக்கையும் அபிமானமும் அதிகரித்துக் கொண்டே இருந்தன. எந்தக் காரியத்தில் இறங்கினாலும் என்னுடைய யோசனையைக் கேட்டார். நானும் அவருக்குத் திருப்தி அளிக்கும் வகையில் பதிலளித்துக் கொண்டு வந்தேன்.

ஆனால் அதே சமயத்தில் என்னுடன் கொண்டு வந்திருந்த சிறிய 'ஒயர்லெஸ்' கருவி மூலம் எல்லாவற்றையும் விவரமாக இந்திய சர்க்காருக்குத் தெரியப்படுத்தி வந்தேன். 'ஸிட்னி காட்டன்' என்ற ஆகாயத் திருடன் மூலமாகவும், போர்த்துக்கீசிய ஆட்சியின் கீழ் இருக்கும் கோவாவிலிருந்தும் ரஸ்விக்கு ஏராளமான ஆயுதங்கள் வந்து சேர்ந்தன. அவை எத்தகையன? அவற்றின் அளவு என்ன? என்பது போன்ற விவரங்களையெல்லாம் உடனுக்குடனே இந்திய சர்க்காருக்குத் தெரியப்படுத்தி வந்தேன்."

## 6

ஷியாமா கதையை மேலே தொடர்ந்து கூறினான். "ரஸ்வியினுடைய வீட்டைச் சுற்றி

ஒரு சோலை இருந்தது. அந்தச் சோலையிலே ஒரு குயில் ஆனந்தமாக இசை எழுப்பிக் கொண்டிருந்தது. அதைக் கேட்கும்போதெல்லாம் என் மனத்தில் இன்பம் சுரக்கும். நானும் அந்தக் குயிலைப்போலவே உற்சாகமாகப் பாட ஆரம்பிப்பேன்.

அந்த உல்லாசமெல்லாம், இப்ராஹிமை நான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று ரஸ்வி சொன்ன பிறகு எங்கேயோ மறைந்து போய் விட்டது. ஆனால் கேவல்ராமைச் சந்தித்த பிறகு மீண்டும் என் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கி அலைபாய்ந்தது. அந்தச் சோலைக் குயிலைத் தேடிப் போனேன். இன்பமாகப் பாடி மகிழ்ந்தேன்.

கேவல்ராம் என் அருகில் நெருங்கி அமர்ந்து தம்மை மறந்து கேட்டுக் கொண்டிருப்பார். பாட்டு முடிந்ததும் நேரம் போவதே தெரியாமல் இருவரும் அன்பு வார்த்தைகளைப் பேசிப் பேசி மகிழ்வோம்.

இப்ராஹிம் என் மீது ஆசைப்பட்டு எந்த நிமிஷமும் என்னை மணப்பதற்குத் தயாராக இருந்தார். கேவல்ராம் தம் மனைவியாகப் போகிறவளிடம் அதிகமாகப் பேசியும் அளவளாவியும் வருவதைப் பார்த்த பின்னர் அவரால் பொறுமையாக இருக்க முடியவில்லை.

எங்களுடைய நடத்தையைப் பற்றி இப்ராஹிம் ரஸ்வியிடம் அவதூறாகப் பேசினார். அதன் பயனாக ரஸ்வி எங்களைக் கூப்பிட்டு அனுப்பினார். நாங்கள் போய்ச் சேர்ந்ததும் ''உங்கள் இருவரையும் பற்றி இப்ராஹிம் அவதூறாகப் பேசுகிறாரே, அது உண்மையா?'' என்று கர்ஜித்தார்.

ரஸ்வியின் முதன்மந்திரி அப்போது சிறிதளவும் பயப்படவில்லை. அசாதாரணமான சமயோசித புத்தியை அவர் காண்பித்தார்.

''நாங்கள் ஒருவரைஒருவர் மனமாரக் காதலிக்கிறோம். ஷியாமாவை மணந்து கொள்ள இப்ராஹிம் விரும்புகிறார் என்றால் முதலில் என்னை வெல்ல வேண்டும். அதன் பின் தான் அவர் ஷியாமாவின் கரத்தைப் பற்ற முடியும்'' என்றார் கேவல்ராம்.

''சபாஷ்! சுத்த வீரனைப்போல் பேசினாய். இப்ராஹிமுக்கு இதில் தடை சொல்வதற்கு ஒன்றும் இல்லை. உமது சவாலை அவர் ஏற்றுக் கொள்வார். இன்று மாலை உங்களுடைய யுத்தம் நடைபெறும். நீங்கள் உபயோகிக்க வேண்டிய ஆயுதங்கள் இதோ இருக்கின்றன'' என்று கூறி ஒரு பெட்டியை எடுத்துத் திறந்தார். அதனுள் இருந்த இருசிறிய கத்திகள் ஜன்னலிலிருந்து வந்த சூரிய ஒளிபட்டுப் 'பளபள'வென்று மின்னின.

## 7

மாலையில் அனைவரும் இப்ராஹிமுக்காகக் காத்திருந்தோம். ஆனால் இப்ராஹிம் வரவேயில்லை. ரஸ்வியின் கட்டளைப்படி அவனை இழுத்துக் கொண்டு வந்தார்கள். இப்ராஹிம் தம்மைத் தயவுசெய்து மன்னித்து விடும்படி கதறி விட்டார். தமக்குக் கல்யாணமே வேண்டாம் என்று பிரலாபித்தார்.

ரஸ்வி ''இந்தக் கோழையைத் தூக்கில் போட்டுக் கொல்லுங்கள்'' என்று உத்தரவிட்டு விட்டுப் போய் விட்டார்.

நான் என்னுடைய காதலரின் கரங்களில் தஞ்சம் அடைந்தேன். ''எப்பேர்ப்பட்ட ஆபத்திலிருந்து தப்பினீர்கள்!'' என்றேன்.

''இந்தக் கோழை இப்ராஹிமிடமிருந்தா எனக்கு ஆபத்து வரப்போகிறது?'' என்று கேட்டு விட்டுக் கேவல்ராம் சிரித்தார்.

ஆனால் அவருடைய சிரிப்பும் சந்தோஷமும் நீடித்து நிற்கவில்லை. ரஸ்விக்கு இப்ராஹிமிடம் ஏற்பட்டிருந்த ஏமாற்றமும் கோபமும் வேறு பக்கம் திரும்பின.

1948ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 15ந் தேதி இந்திய சுதந்திரக் குழந்தைக்கு ஒரு வருஷம் பூர்த்தியாயிற்று. சுதந்திர தினத்தை விமரிசையாகக் கொண்டாடுவதற்கு ரஸ்வி ஏற்பாடுகள் செய்தார். அன்றைய தினம் ரஸ்வியின் கட்டளைப்படி ரஸாக்கர்கள் கிராமங்களில் புகுந்து, வயோதிகர்களைக் கொன்றனர். பெண்களைக் கற்பழித்தனர். குழந்தைகளைக் கொலை செய்தனர். வீடுகளைக் கொளுத்தினர்.

இந்தச் சமயத்தில் கேவல்ராமின் நடத்தை எனக்குப்புரியாத புதிராக இருந்தது. பற்களை நறநறவென்று கடிப்பார். விரல்களை மூடி மூடித் திறப்பார். மேஜையையும் சுவரையும் குத்துவார். ''நான் ஒன்றும் செய்ய இயலாத நிலையில் இருக்கிறேன். இந்த அராஜகத்தை நிறுத்த இப்போது வழியில்லை'' என்று தமக்குத்தாமே சொல்லிக் கொள்வார்.

## 8

சில நாட்களுக்குப் பிறகு ரஸ்வியுடன் சேர்ந்து உணவருந்திக் கொண்டிருக்கும்போது, ''ஷியாமாவை விரைவில் விவாகம் செய்து கொள்ளத் தங்கள் அனுமதி வேண்டும்'' என்றார் கேவல்ராம். அதற்கு ரஸ்வி தம் சம்மதத்தையும் தெரிவித்து விட்டார்.

செப்டம்பர் 13-ந் தேதி எங்கள் திருமணம் நடைபெற விருந்தது. கல்யாணத்துக்கு முதல் நாள் கேவல்ராம் என்னைத் தம்முடைய அறைக்கு அழைத்துத் தம்மைப் பற்றிய முழு விவரங்களையும் என்னிடம் தெரிவிக்காமல் என்னை மணக்க முடியாது என்றும், மணமான பின் நான் அவரை வெறுக்க இடமளிக்க விரும்பவில்லை என்றும் சொன்னார்.



எனக்கு அவருடைய நேர்மையை எண்ணுகையில் கண்ணீர் பெருகிவிட்டது. ஆனந்தக் கண்ணீர் தான். அவர் யார் என்பதைப் பற்றித் தெரிந்து கொண்ட பின் அவரிடம் எனக்கு முன்னை விடப்



பன்மடங்கு அன்பும் மரியாதையும் ஏற்பட்டன.

கேவல்ராம் எங்கள் திருமணம் நடைபெறுவதற்கு அவசரப்பட்ட காரணத்தையும் தெரிந்து கொண்டேன். எங்களுடைய திருமணம் நடைபெறவிருந்த அன்றே இந்திய சர்க்கார் ஹைதராபாத் மீது படையெடுப்பார்கள். ரஸ்வியுடைய தளபதிகளும் நைஜாமின் தளபதிகளும் எங்களது திருமணத்துக்கு வந்திருப்பார்கள். ஆகவே முன்னேறி வரும் இந்தியப் படை வீரர்களை எதிர்த்துப் போராட யாரும் இருக்க மாட்டார்கள்.

## 9

எங்களுக்குத் திருமணம் நடைபெற்ற அன்று இரவு நான் என் கணவரை எதிர்நோக்கிக் காத்திருந்தேன். திடீரென்று அண்ட சராசரங்களும் அதிரும்படியாக இடியோசை கேட்டது. இன்னதென்று தெரியாத ஒரு பீதி என்னை வந்து அடைந்தது. அது இடியோசை அல்ல என்பது மட்டும் என் அறிவுக்குப் புலப்பட்டது. அதன் உண்மைக் காரணத்தை ஊகித்து அறிந்ததும் 'ஐயோ! அவருக்கு ஆபத்து ஏதும் நேராமல் இருக்க வேண்டுமே' என்ற எண்ணம் தோன்றி என் உடலை நடுங்க வைத்தது.

சுமார் ஒரு மணிநேரம் பொறுத்து அவர் வந்தார். ''பயந்து விட்டாயா?'' என்று சிரித்த முகத்துடன் கேட்டுவிட்டுப் படபடப்போடு ''ஹைதராபாத் எல்லைக்குள் பாரதத் துருப்புக்கள் புகுந்து விட்டன. ரஸ்வியின் ஆயுதக் கிடங்குக்கு வெடி வைத்து விட்டேன். அந்தச் சத்தம்தான் நீ கேட்டது'' என்றார்.

என் பதிலுக்குக் காத்திராமல் கேவல்ராம் என் எதிரிலேயே 'ஒயர்லெஸ்' கருவி மூலம் இந்தியத் துருப்புகளுக்குச் செய்தி அனுப்பினார். இப்படி இவர் செய்தி அனுப்பிக் கொண்டிருக்கும்போதே எங்கிருந்தோ ரஸ்வி கோபாவேசத்தோடு வந்தார். ''உன்னை முதன் முதலில் பார்த்ததுமே நீ புத்திகூர்மை உள்ளவன் என்று உணர்ந்தேன். அதே காரணத்தால்தான் உன்னை என் அருகில் வைத்துக் கொள்ள விரும்பினேன். என் மருமகளையும் உனக்குத் திருமணம் செய்து வைத்தேன். ஆனால் நான் உன்னிடம் வைத்த நம்பிக்கையை நீ துஷ்பிரயோகம் செய்து விட்டாய். நீ நம்பிக்கைத் துரோகி. சுத்த வீரன் அல்ல. கீழ்த்தரமான முறையில் என்னைத் தோல்வி அடையச் செய்தாய்'' என்றார்.

என் கணவரின் முகம் அவர் அடைந்த மனவேதனையை எடுத்துக் காட்டியது. ''உண்மைதான். நான் வேதனைப் படுகிறேன். அந்த வேதனையைச் சிறிது தணிக்க வல்லது, அந்த முறைகளை நான் கையாண்டதால் விளையக் கூடிய பயன்களே'' என்றார்.

ரஸ்வி பயங்கரமாகச் சிரித்தார். ''அப்பனே! உன்னுடன் நான் வாதாடத் தயாராக இல்லை. நான் தோல்வியின் எல்லையில் இருக்கிறேன். ஆனால் ஒன்று நிச்சயம். நான் இந்திய சர்க்காரிடம் பிடிபடுவதற்கு முன் உன்னைக் கொல்லாமல் விடமாட்டேன்'' என்று கூறிக் கொண்டே ரஸ்வி மறைத்து வைத்திருந்த ஒரு துப்பாக்கியை உருவி என்னுடைய கணவரை நோக்கிக் குறிபார்த்தார்.

நான் சடார் என்று என் கணவர் முன் போய் நின்று கொண்டேன். ரஸ்வியின் கை தாழ்ந்தது. அவர் மனம் இளகியது என்பதை அவர் முகம் காட்டியது. ''அன்பு என்பது என்ன என்பதே தெரியாத என்னிடம் ஒரு சிறு பெண் அடைக்கலம் புகுந்தாள். வேறு யாரிடமும் நான் காட்டாத அன்பை அந்தப் பெண்ணிடம் சொரிந்தேன். அவளுக்காக ஒரு சாம்ராஜ்யத்தையே ஸ்தாபிக்க முயன்றேன். இதற்கெல்லாம் பிரதியுபகாரமாக அந்தப் பெண் தன் ஆசைநாயகனுடன் சேர்ந்து கொண்டு என்னைக் காட்டிக் கொடுத்து விட்டாள். உண்மையிலேயே நான் துரதிஷ்டசாலிதான்'' என்றார் ரஸ்வி.

நான் விம்மி விம்மி அழுது விட்டேன். ரஸ்வி என்னை அணைத்துக் கொண்டார். ''வருந்தாதே அம்மா. உன்னிடம் நான் கொண்டுள்ள அளவில்லாத அன்பின் அடையாளமாக உன் கணவரை நான் கொல்லாமல் விட்டு விடுகிறேன். நீங்கள் இருவரும் பல்லாண்டுகள் இணைபிரியாது சந்தோஷமாக வாழவேண்டும்'' என்று கூறிவிட்டு நகர்ந்தார்.

1948-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 13-ந் தேதி இந்திய சர்க்கார் ஹைதராபாதின்மீது படையெடுத்தனர். மிக மிகக் குறைந்த அளவு சேதத்துடன் மின்னல் வேகத்தில் அவர்கள் பெற்ற மகத்தான வெற்றியைப் பார்த்து உலகமே வியந்தது. ஆனால் அதற்குக் காரணம் என் கணவர்தான் என்பதை உலகம் அறியாது!''

* * *

''நீங்கள் கேட்ட இரண்டு கதைகளில் எதை நம்புகிறீர்கள்? நான் சொன்னதையா? இல்லை, இந்தச் சோலைக் குயில் கூறியதையா?'' என்று ஷியாமாவைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டு குமார், என்னைக் கேட்டார்.

''இரண்டு வரலாறுகளையும் நான் நம்புகிறேன். இவை இரண்டுமே கட்டுக் கதையென்றும் உண்மையில் நடந்தது வேறு என்றும் கூறி நீங்கள் இருவரும் மீண்டும் எனக்கு இரு கதைகளைச் சொன்னால் அவற்றையும் நம்புவேன்!'' என்று பதிலுரைத்தேன்.

என்னுடைய பதிலைக் கேட்டு ஷியாமாவும் குமாரும் 'கலகல'வென்று சிரித்தார்கள். நானும் அவர்களுடைய சிரிப்பில் கலந்து கொண்டு மகிழ்ந்தேன்.



## முதல் முழக்கம்

**பா**ரத நாட்டில் முதன் முதலில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை எதிர்த்து வீர முழக்கம் செய்தவன் தமிழன். பாரத நாட்டில் வர்த்தகம் செய்யவந்த கிழக்கிந்திய கம்பெனியார் நாடாளும் ஆசையும் கொண்டனர். அப்படி ஆசையோடு பாஞ்சாலங்குறிச்சி மீது பீரங்கிப் படையுடன் ஆங்கிலேயர் போர் தொடுத்தபோது, சீறி எழுந்தான் கட்டபொம்மன்.

1799-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஐந்தாம் தேதி யன்று காலை பாஞ்சாலங்குறிச்சி வீர மண்ணில் பகைவர்களின் பீரங்கிச் சத்தம் கேட்டது.

பீரங்கிச் சத்தம் கேட்டவுடன்—கட்டபொம்முதுரை கோட்டைமீதேறி
ஆரடா கட்ட பொம்மேந்திரன் கோட்டையில் அஞ்சாமல் வாரவன் என்றதட்டி
பாளையம் வாரதைப் பார்த்தனரா மங்கே—பாயும் புலிபோலே சீறினராம்!
வாளை எடுத்துறை விட்டனராம்—கையில் வைத்தபடி வெளிப்பட்டனராம்!

கையில் வாளுடன் வெளிப்பட்டு, பிரிட்டிஷாரின் பீரங்கிப் படையை எதிர்த்து வீரப் போர் புரிந்தான். அந்தச் சம்பவம் நடைபெற்று நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்ட தாயினும் இன்றும் மக்களுக்கு வீரம் புகட்டுகிறது! வாழ்க கட்டபொம்மன் வீரம்!



## மருது பாண்டியர்கள்

கட்டபொம்மனுக்கு அடுத்தாற்போல் கிழக்கிந்திய கம்பெனியாரின் ஆதிக்க வெறியைத் தங்கள் உயிர் போகும்வரை எதிர்த்துப் போராடியவர்கள் சிவகங்கைச் சீமையைச் சேர்ந்த வீரர்களான மருது சகோதரர்கள்.

தங்கள் கோட்டை கொத்தளங்களை இழந்து வனங்களில் ஒளிந்து திரிந்து வந்த காலத்திலும் அவர்கள் வீரம் குலையவில்லை. வெள்ளைக்காரர்களின் வெள்ளிப் பணத்துக்கு ஆசைப்பட்டு நாட்டைக் காட்டிக் கொடுக்கும் கயவர்களைக் கண்டு உள்ளம் பொருமினர்.

ஒரு நாள் வனத்திலே பெரிய மருது வெள்ளைக்காரர்களின் வெள்ளி நாணயங்களைத் தரையில் போட்டு மிதித்து, "இந்த அற்பக் காசுக்கு ஆசைப்பட்டு, வீரர்களே, தாய் நாட்டைக் காட்டிக் கொடாதீர்கள்! துள்ளி எழுந்திருங்கள்! வெள்ளையர்களை விரட்டியடியுங்கள்!" என்று வீரமூட்டினான். கம்பெனியாரை எதிர்த்துப் போராடி வந்தான். தனிப்பட்ட இரண்டு தமிழ் சகோதரர்கள் மிருக பலம் வாய்ந்த அன்னிய சர்க்காரை எதிர்த்து வீர முழக்கம் செய்ததை இப்பொழுது எண்ணிப் பார்த்தால்கூட உள்ளம் சிலிர்க்கிறது.

அவர்களின் உதாரணமானது வாழையடி வாழையாகத் தமிழ் மக்களின் சந்ததிகளுக்குத் தேசபக்தியையும் ஆண்மையையும் அஞ்சா நெஞ்சத்தையும் உண்டுபண்ணுகிறது.



# ஜான்ஸி ராணி

ஜான்ஸியின் மன்னர் அகால மரணமடைந்த போது ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய்க்கு இருபத்துமூன்று வயதுகூட நிரம்பவில்லை. அந்த மன்னருக்கு ஆண் வாரிசு யாருமே இல்லாததால், ஜான்ஸி ராஜ்யத்தைத் தங்களிடம் ஒப்புவித்துவிட வேண்டும் என்று பிரிட்டிஷார் செய்தி அனுப்பினர். தங்கள் மிரட்டலுக்கெல்லாம் யுவதியான லக்ஷ்மிபாய் பணிந்து விடுவாள் என்று அவர்கள் எண்ணினர்.

"ஜான்ஸி ராஜ்யத்தில் உரிமை கொண்டாடுவதற்கு நீங்கள் யார்? உங்களுக்குப் போர் முனையில் என் வாள் பதில் கூறும்" என்று முழங்கினள் லக்ஷ்மிபாய். அவ்வளவு தான்! பல இடங்களிலும் வெள்ளைத் துருப்புகளுக்கும் ஜான்ஸி ராணித் துருப்புகளுக்கும் இடையே பயங்கரமான போர்கள் நடந்தன. ராணியே முன்னணியில் நின்று போரை நடத்தினள். வீராங்கனை ஜான்ஸியின் வீரர்கள் உக்ரமாகச் சண்டையிட்டனர். வெள்ளையர்களின் தலைகள் கணக்கின்றி உருண்டன. போரிட்டவண்ணமே ஜான்ஸிராணி வீர சுவர்க்கம் எய்தினள். போர்க்களத்தில் லக்ஷ்மிபாயின் வீர தீர பராக்கிரமச் செயல்களை ஆங்கில சரித்திராசிரியர்களும் பாராட்டியுள்ளனர். பாரத நாட்டின் சுதந்திரத்துக்காக உயிரைத் துச்சமாக மதித்து உக்ரப் போர் நடத்திய வீரமாதேவி ஜான்ஸி ராணி லக்ஷ்மிபாய்க்கு உவமை கூற உலக சரித்திரத்திலேயே யாரும் இல்லை எனலாம்.



## தாதியா தோபே

ஆங்கிலேயர்களை முறியடித்து இங்கிலாந்தைத் தமது வசப்படுத்திக் கொள்ளுவதற்கு இடையூறாக நெப்போலியனுக்கு இங்கிலீஷ் கால்வாய் அமைந்தது போல், 1857-ல் இந்தியாவில் உள்ள வெள்ளைக்காரர்களுக்கு யமனாக விளங்கிய தாதியா தோபேக்கு நர்மதை நதி இடையூறாக இருந்தது. அப்போது பிரிட்டிஷாரிடம் அதிகத் துருப்புகள் இருந்தன. ஏராளமான ஆயுதங்களும் இருந்தன. தேசத் துரோகிகளான மன்னர்களின் அபரிமிதமான உதவியும் பிரிட்டிஷாருக்குக் கிடைத்தது. அந்நிலையில் ஏழையான தாதியா என்ன செய்ய முடியும்? நர்மதையைத் தாண்டி வந்தாலன்றி அவர் எதுவும் செய்ய முடியாது. பயங்கரமான வெள்ளப் பெருக்குடன் ஓடிய நர்மதையைத் தாண்டுவதற்குப் பால வசதியில்லை; ஓடங்களும் இல்லை. மகாராஷ்டிரப் புலி தாதியா அப்போதும் சோர்வு அடையவில்லை. துருப்புகளுடனும், தளவாளங்களுடனும் நர்மதையில் குதித்து நீந்தி அக்கரை சேர்ந்து, ஆங்கிலேயர்களைப் பல மாதங்கள் வரையில் அலற அடித்தார். "நெப்போலியன்கூடச் செய்யத் துணியாத காரியத்தைச் செய்து, ஆச்சரியகரமான வெற்றி பெற்ற தாதியா தோபேயைப் பாராட்டாமல் இருக்க முடியாது. உலகில் இந்தியர்களைத் தவிர வேறு எவரும் அவ்விதம் நீந்திச் சென்றிருக்க முடியாது" என்று ஆங்கிலச் சரித்திராசிரியர் மாலிசன் புகழ்ந்துள்ளார்.

# பாவை விளக்கு

## முன்னுரை



யாருடைய வாழ்க்கையை இங்கு கதையாக எழுதப் போகிறேனோ, அவன் என்னுடைய நெருங்கிய நண்பன். பல ஆண்டுகள் ஒன்றாகப் பழகியதால் தன்னைப் பற்றிய பல ரகசியங்களை அவன் என்னிடம் வெளியிட்டிருக்கிறான். இப்படி நான் ஒரு கதை எழுதப் போவது அவனுக்குத் தெரிந்திருந்தால் ஒருவேளை எதையுமே என்னிடம் சொல்லாமல் மறைத்திருக்கக் கூடும். நானும் பலமுறை யோசனை செய்த பிறகு தான் இதை எழுத உட்காருகிறேன்.

இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பு நாங்கள் இருவரும் ஆண்டாளின் பாசுரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். உணர்ச்சியும், உருக்கமும், உயிர்த் துடிப்பும் நிறைந்த ஓர் அழகான கவிதைத் துணுக்கை அவன் பாடிக் காண்பித்து, அது எந்த மாதிரி சூழ்நிலையில் ஆண்டாளுக்கு உருவாகியிருக்க வேண்டும் என்பதை என்னிடம் விளக்கினான். விளக்கிக் கொண்

அகிலன்

டிருந்தவனின் பேச்சு திடீரென்று பாதியில் நின்றது; குரல் தழுதழுத்தது; கண்களில் பனித்திரை படர்வதைக் கண்டேன். நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு கண்களை மூடி யோசனையில் ஆழ்ந்தான். ஒன்று, இரண்டு, மூன்று நிமிஷங்கள் சென்றன. மூடிய கண்கள் திறக்கவில்லை. எனக்கு அவன் அப்படி யாரை நினைத்துக் கொண்டு பெருமூச்சு விடுகிறான் என்பது விளங்கி விட்டது.

அப்போது எனக்கு ஓர் அதிசயமான காட்சி தோன்றியது; வியப்பான அநுபவம் ஏற்பட்டது.

எனக்கு எதிரில் இருந்த தனிகாசலத்துக்குப் பதிலாக அந்த இடத்தில் குளுமையான ஒரு விளக்கொளி சுடர் விடுவதைக் கண்டேன். நான்கு பெண்கள் ஒன்று சேர்ந்து அகல் விளக்கொன்றைத் தங்கள் மென்கரங்களில் ஏந்தி நிற்பது போன்ற பிரமை. கண்களை நன்றாகக் கசக்கி விட்டுக் கொண்டு கவனித்தேன். நான்கு பெண்களும் ஒருவரில் ஒருவர் மறைந்து இரண்டு பெண்களானார்கள். பிறகு அந்த இருவருமே ஒருவரில் ஒருவர் ஒன்றி ஒரே உருவாய்ச் சமைந்து பாவை விளக்கானார்கள் — கோயிலின் உட்பிராகார வாயில் முகப்பில், கரங்களில் வண்ணச் சுடரேந்தி, அன்பும், அருளும், பக்தியும் கனியும் கண்களோடு ஒளிபரப்பி நிற்கும் ஐம்பொன் பாவையை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? வண்ணச் சிலைப் பெண்ணழகைக் கண்டு மகிழ்ந்திருக்கிறீர்களா?

எனக்குப் புல்லரித்தது. திரும்பவும் நான் சுய நினைவுக்கு வந்தபோது, முன்போலவே, எதிரில் தனிகாசலம் தான் முன்பு விட்ட இடத்திலிருந்து கவிதை விளக்கத்தைத் தொடங்கினான். இந்த அநுபவத்தைப் பற்றி நான் அவனிடம் ஒன்றும் கூறவில்லை. ஒருவேளை கவிதை மயக்கத்தில், கற்பனைக் குழப்பத்தில், பகற் கனவின் போதையில் இப்படித் தோன்றியிருக்கலாம். ஆனால் மின்னலைப் போல்

நெளிந்த அந்தச் சில விநாடிகள் என்னிடம் அழுத்தமான ஓர் நினைவுக் கிறலை ஏற்படுத்திச் சென்றன. தனிகாசலத்தின் வாழ்க்கையில் ஏதோ ஒரு ஆழ்ந்த பொருள் ஊடுருவி இருக்க வேண்டும். அதைக் கண்டுபிடிக்க முயற்சி செய்து, கண்டு பிடித்த வரையில் தொகுத்து வைத்து, பிறகு மற்றவர்களுக்குச் சொன்னால் என்ன?

நான்கு பெண்கள் ஓர் விளக்கை ஏந்தி நின்றது போல் தெரிந்ததல்லவா? அந்த நான்கு பெண்களையும் நான் அறிவேன். அடுத்தாற்போல் இருவராக மாறிய அந்த நால்வரில் இருவரையும், அதன் பிறகு ஒரே சிலையாய்ச் சமைந்த அந்தப் பெண்ணரசியையும் எனக்குத் தெரியும். தனிகாசலத்தின் உள்ளொளியைச் சுட்டிக்காட்டிய தேவகி, அதைத் தூண்டிவிட்ட செங்கமலம், அதற்கு அகலாக அமைந்த கௌரி, அகலையும் சுடரையும் சேர்த்துத் தாங்கி நின்ற உமா-இந்த நால்வருமே ஏதாவது ஒரு வகையில் அவன் வாழ்வில் பங்கு கொண்டிருந்தார்கள்.

இந்த நான்கு பெண்களால் உருவாக்கப்பெற்ற மனிதன் என்று தனிகாசலத்தைச் சொன்னால் அது தவறில்லை. பெண்களை ஆக்கும் சக்தி என்று சொல்கிறார்கள்; அழிக்கும் சக்தி என்றும் சொல்கிறார்கள். இந்த நான்கு பெண்களும் அவனிடம் ஆக்கியதென்ன? அல்லது அழித்ததென்ன? இவர்களால் அவன் பெற்ற இன்ப-துன்ப அநுபவங்கள் என்னென்ன?

தனி மனித வாழ்க்கையின் வெற்றி தோல்விகளுக்குப் பெண்களை மட்டும் காரணமாகச் சொல்வது அறியாமை. பிறப்பு, வளர்ப்பு, உற்றம், சுற்றம், சூழ்நிலை என்று எத்தனை எத்தனையோ சக்திகள் மனிதனை ஆட்டிப் படைக்கின்றன. தனிகாசலமும் நம்மைப் போல் சாதாரண மனிதன் தான். குறையும், நிறையும், பலமும், பலவீனமும் உள்ளவன். ஆனால் அவனுடைய நட்பிலிருந்து மட்டுமல்லாமல், அவனுடைய சொல், செயல் இவற்றைத் தூண்டிய அவனது உள்ளுணர்வு இவற்றைக்கொண்டு நான் அவனை ஆராய்ச்சி செய்திருக்கிறேன். என் முடிவு (பெண்களால் உருவாக்கப்பெற்ற" மனிதன் என்பது) சரியாகவோ தவறாகவோ இருக்கலாம். ஆனால், அழ



கான கதை ஓட்டம் நிறைந்த 'வாழ்க்கை அவனுடையது என்பதில் சிறிதும் ஐயமில்லை. கூடுமான வரையில் அதை அப்படியே சொல்லுவதற்கு முயலுகிறேன்.

சுமார் பதினைந்து இருபது வருடங்களுக்கு முன்பு அவன் மாணவனாக இருந்த காலம் தொடங்கி, சென்ற ஆண்டில் நிகழ்ந்த, அவன் வாழ்க்கையின் அடித்தளத்தையே ஒரு குலுக்குக் குலுக்கிய நிகழ்ச்சி வரையில் வரிசையாகக் கூற முற்படுகிறேன்.

இந்தப் பதினைந்து இருபது வருடங்களில் நாட்டில் எத்தனை எத்தனையோ மாறுதல்கள். மாறுபட்ட இந்தச் சூழ்நிலையில்தான் தணிகாசலம் இன்னும் வாழ்ந்து வருகிறான். இன்றைய மனிதனை முதன் முதலில் சந்திப்பதை விட, நேற்றைய மனிதனை - இளமைத் துடிப்பும் லட்சியக் கனவும் கொண்ட உலகமறியாத கல்லூரி மாணவனை-இப்போது சந்தித்தால் மிகவும் ருசிகரமாக இருக்குமல்லவா?

முதல் அத்தியாயம்

# அறியாப் பிள்ளை

**கா**லைச் சூரியனின் சிறு கதிர்கள் தெருப் பக்கத்துச் சன்னல் வழியாகத் தணிகாசலத்தின் மாடியறைச் சுவரில் விழுந்து பளபளத்துக் கொண்டிருந்தன. தணிகாசலம் கையில் ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு அறைக்குள் குறுக்கும் நெடுக்கும் நடந்தான். படிப்பைப் பாதியில் தடை செய்வது போல் கீழே சமையலறையிலிருந்து தேவகியின் குரல் எழுந்தது: ''தோசை போட்டுத் தரட்டுமா? சாப்பிட வருகிறாயா?''

''போடுங்கள், அக்கா! இதோ ஐந்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன்'' என்றான் தணிகாசலம்.

நடையும் படிப்பும் ஒன்றாக நடந்தன.

தணிகாசலத்துக்கு அன்றைக்கு பி. ஏ. முதல் வருடப் படிப்பு முடிந்து கடைசித் தேர்வு எழுதும் நாள். அக்கறையுடன் அவன் படிப்பதைப் பார்த்தால் மற்றவர்கள் பரீட்சைக்குப் படிப்பதாக நினைத்துக் கொள்வார்கள். தேவகியும் அப்படித்தான் நினைத்தாள். ஆனால் அவன் படித்துக் கொண்டிருந்ததோ ருஷ்ய ஞானி டால்ஸ்டாய் எழுதிய 'அன்னாகரினினா' என்ற அற்புதமான நாவல்! தேர்வுக்காகச் சரித்திரப் பாடம் படிக்காமல் ருஷ்ய ஞானி டால்ஸ்டாயின் கதா பாத்திரங்களுடன் அவன் மனம் ஒன்றிக் குலவி மகிழ்ந்து கொண்டிருந்தான்.



இதற்காக அவனைப் படிப்பில் சோடை என்று சொல்லிவிட முடியாது. வகுப்பில் சாதாரணமாகக் கவனித்த பாடங்களை வைத்துக் கொண்டே அவன் வழக்கமாக முதல் 'மார்க்கு'கள் வாங்கி விடுவான். சரித்திரப் பாடம் அவனுக்குத் தண்ணீர் பட்ட பாடு.

அடுப்படியிலிருந்துநெய்த்தோசையின் மணம் 'கம்' மென்று காற்றில் மிதந்து மேல் மாடிக்கு வந்து கொண்டிருந்தது. முதல் தோசையை எடுத்தவுடனேயே தேவகி அவனைக் கீழே அழைத்தாள். ''இன்னும் இரண்டே பக்கம்'' என்று சாக்குச் சொல்லி விட்டு அவன் மேலே படித்துக் கொண்டிருந்தான்.

'நல்ல புத்தகப் பூச்சி இவன்!' என்று முணுமுணுத்துக் கொண்டே அவள் தோசையை ஆறி விடாமல் மூடி வைத்தாள். தணிகாசலத்தின் உருவமும் வாழ்வும் ஒரு கணம் அவள் நெஞ்சத் திரையில் மின்னி மறைந்தன.

சிப்புக்கு அடங்காத கலைந்த கிராப்பு, அகன்ற நெற்றி, கூர்மையான கண்கள், நடுத்தர உருவம், உயரம், மாநிறம், அரைக் கைச் சட்டை, ஐந்து முழ வேட்டி... இருபதுக்கு மேல் ஓரிரண்டு வயதுகள் இருக்கலாம். கண்ணபுரம் மன்னர் கல்லூரியில் படித்துக் கொண்டு அவனுடைய தந்தையின் நண்பரான சுப்பையாவின் வீட்டில் தங்கி அவர்கள் வீட்டிலேயே சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

சுப்பையாவின் தங்கைதான் தேவகி.

அந்த வீட்டின் சொந்தக்காரி, சுப்பையாவின் மனைவி சிவகாமி அண்ணி, இப்போது ஊரில் இல்லை. சிவகாமிக்குத் தணிகாசலத்திடம் அன்பு கிடையாது. அவளுடைய வாக்குப்படி 'பிள்ளையாண்டான் தண்டச்சோறு தின்று கொண்டு, இரவல் அறையில் ஒண்டிக் கொண்டு, ஓசிப் படிப்பு படித்து வருகிறான்!'

சிவகாமி ஊரில் இல்லாததற்காக அவளை மனத்துக்குள் வாழ்த்தினாள் தேவகி. தணிகாசலத்தைத் தேவகிக்கு அவனைப் பார்த்த முதல் நாளிலிருந்தே பிடித்து விட்டது. ஆனால் அவன் தன்னை 'அக்கா, அக்கா!' என்று அழைத்து உயிரை வாங்கியதுதான் பிடிக்கவில்லை. 'இவனுக்கு நான் என்ன உடன்பிறந்தவளா? அல்லது சொந்தக்காரியா? அல்லது வயதில் மூத்தவளா?...'

தேவகி அடுக்களையை விட்டு வெளியில் வந்து நின்றுகொண்டு மாடிச் சன்னலைப் பார்த்தாள். "நீ வரப்போகிறாயா, இல்லையா?" என்று கூப்பிட்டாள்.

தணிகாசலம் தலையைச் சொறிந்து கொண்டே, "இன்னும் ஒரே பக்கம், கடைசிப் பக்கம் மட்டும்..." என்று கெஞ்சினான்.



முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே போய் விட்டாள் தேவகி. தணிகாசலம் வேகமாகத் திரும்பி அறைக்குள் நடை போட்டான். நாவலில் வந்த கதாநாயகி அன்று உயிரை விடுவதற்காக ரயில் தண்டவாளத்துக்குப் பக்கத்தில் வந்து விட்டாள். ரயில் வரும் சத்தமும் நன்றாகக் கேட்கிறது. அவள் தண்டவாளத்தில் படுத்து உயிரை விட வேண்டியதுதான் பாக்கி. அதற்குள் இந்தத் தேவகி அக்காள் இப்படி உயிரை வாங்குகிறாளே!

மாடி அறை என்று சொல்லக் கூடிய அந்தப் பெரிய புறாக் கூண்டில் ஒருவர் நடந்து கொண்டே படிக்கலாம்; கால் நீட்டிப் படுத்தும் தூங்கலாம். இரண்டு பேர் உட்காரலாம்; மூன்று பேர் நிற்கலாம்; நாலுபேரானால் வெளியில் போக வேண்டியதுதான். அந்த அறையில் பாதி இடத்தைச் சிறிய மேசை, உடைந்த நாற்காலி, தகரப் பெட்டி, படுக்கைச் சுருள், புத்தகக் குவியல் இத்தனையும் அடைத்துக் கொண்டிருந்தன. தலைக்கு மேல் வலதுபுறத்தில் தெருவைப் பார்க்க ஒரு சிறு சன்னல், இடது பக்கத்தில் வீட்டின் உள் முற்றத்தைப் பார்க்க மற்றொரு பெரிய சன்னல். தெருச் சன்னல் வழியே காலைச் சூரியன், தெருப் புழுதி, ஊர்ச் சத்தம் இவ்வளவும் புகுந்து உள் சன்னல் வழியே வீட்டை எட்டிப் பார்ப்பதுண்டு.

தேவகிக்குக் கோபம் வந்து விட்டது. பாத்திரங்களைப் போட்டுக் கடாமுடா வென்று உருட்டி விட்டு, "நீ வந்து சாப்பிடப் போகிறாயா? இல்லை, உன்னைப் பட்டினியோடு அனுப்பி வைக்கட்டுமா?" என்று கத்தினாள்.

"அக்கா! அக்கா!..."

"அக்காளாம் அக்காள், மண்ணாங் கட்டி!"

"இதோ முடிந்து விட்டது, அக்கா!" புத்தகத்தை மூடினான்.

"சிவகாமி அண்ணி வீட்டிலிருந்தால் நீ இப்படி அலட்சியம் செய்வாயா? என்னிடம் உனக்குப் பிரியமும் இல்லை; மதிப்பும் இல்லை."

"அப்படிச் சொல்லாதீர்கள், அக்கா!... தப்பு! தப்பு!" என்று சிரித்துக் கொண்டே கன்னத்தில் போட்டுக் கொண்டான் தணிகாசலம். "இப்படியே சன்னல் வழியாய்க் குதித்து விடட்டுமா?" என்றான்.

தேவகி இந்தக் காட்சியைக் கண்டு கலகலவென்று சிரித்தாள். "இத்தனை குறும்புத்தனத்தையும் நீ இவ்வளவு நாள் எங்கே ஒளித்துவைத்திருந்தாய்? நீ நல்லவன் என்றுநினைத்தேன்..., அங்கேயே இரு; இதோ நானே கொண்டு வந்து விடுகிறேன்."

தேவகி மாடிக்கே பலகாரத் தட்டை எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தாள். தனித் தனிக் கிண்ணங்களில் நெய், மிளகாய்ப் பொடி, தேங்காய்ச் சட்டினி எல்லாம் இருந்தன. கூஜாவில் தண்ணீரும் வந்தது. இந்த வீட்டுக்கு வந்து இத்தனை மாதங்களில் இன்றைக்குத் தான் சாப்பாடு அவனைத் தேடிக் கொண்டு மாடிக்கு வருகிறது.

தேவகியைப் பார்த்தால் தணிகாசலத்தை விட வயதில் மூத்தவள் என்றோ, அவன் அக்காள் என்றோ சொல்ல முடியாது. இவ்விருவருக்கும் ஒரே வயது, அல்லது அவனுக்கு அவனை விட ஓரிரு மாதங்கள் குறைவாக இருக்கலாம். குளித்து முழுகி விட்டு அவள் மாற்றுடையில் பளிச்சென்று காட்சியளித்தாள். ஈரத் தலை இறுக்கமாக முடிந்துவிடப் படாமல் நுனியில் சிறு முடிச்சுடன் தொளதொள வென்று தொங்கியது. நெற்றியில் குங்குமமில்லை; திருநீர்க்கோடு இரு புருவங்களையும் நன்றாக இணைத்திருந்தது.

"ராஜாமாதிரி நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொள்."

"இல்லை, அக்கா! தரையில் உட்கார்ந்து கொள்கிறேன்."

தேவகி அவனை வேண்டுமென்றே வம்புக்கு இழுத்தாள். ''நீ இன்னும் எம்.ஏ. படித்துக் கல்லூரி ஆசிரியராக வேலை பார்க்கப் போகிறேன் என்றாயே?''

''ஆமாம்.''

''இப்படி ஒரு பெண்ணிடம் வெட்கப் படுகிறவன் நாளைக்கு எப்படி நூறு பையன்களைக் கட்டி மேய்க்கப் போகிறாய்? அதிலும் இந்தக் காலத்துப் பையன்கள் வம்புக்காரர்களாயிற்றே?''



பையன்கள் வம்புக்காரர்களோ இல்லையோ, தேவகி வம்புக்காரி என்பது மட்டும் புரிந்தது.

உடைந்த நாற்காலியில் பையன் பயபக்தியுடன் உட்காரப் போனான். அது கிரீச்சிட்டு ஒரு ஆட்டம் ஆடி நின்றது. அதில் பழக்கப் பட்டவர்கள் தான் உட்கார முடியும். முதுகை ஒரு மாதிரி கோணலாக வளைத்துக் கொண்டு அடக்க ஒடுக்கமாக உட்கார வேண்டும். இல்லாவிட்டால் சட்டை நுனியையோ, வேட்டித் தலைப்பையோ பதம் பார்த்து விடும். உலகத்தில் மூளைத்த முதல் தேக்கு மரத்தில் செய்த நாற்காலியாக இருக்க வேண்டும் அது.

தேவகி மளமளவென்று பரிமாறினாள். மிளகாய்ப் பொடியிலும் சட்டினியிலும் வழிய வழிய நெய் வார்த்தாள். அருகில் நின்றுகொண்டு குனிந்த தலை நிமிராமல் சாப்பிடுகிறவனை உற்றுப் பார்த்தாள். தூரத்தில் அவள் நின்ற போது குறும்புத்தனமாகப் பேசியவன் அருகில் வந்தவுடன் கட்டுப்பெட்டியாகி விட்டான். இரண்டாவது தோசையில் இன்னும் பாதி இருந்தது.

''கொஞ்சம் பொறு; கல்லில் ஒரு தோசை போட்டிருக்கிறேன். சுடச்சுடச் சாப்பிடலாம்.''

''வேண்டாம், அக்கா!''

''மூச்சு விடக் கூடாது!''

''பரீட்சை எழுதும்போது நன்றாகத் தூக்கம் வரும்.''

''நல்ல ஆண்பிள்ளை நீ!'' என்று சிரித்தாள் தேவகி. ''நாளைக்கு என்னை விட்டுவிட்டு ஊருக்குப் போகப் போகிறாய். இன்றைக்கு மாத்திரமாவது நான் சொல்வதைக் கேட்டு நட. நாளைக்கு நானா உன்னோடு பொன்வயலுக்கு வந்து பரிமாறப் போகிறேன்?''

ஓட்டமும் நடையுமாய்க் கீழே அடுத்த தோசையை எடுத்து வரப் போனாள் தேவகி. அதற்குள் தணிகாசலத்தின் மனம் அவளையும் அவனுடைய அண்ணி சிவகாமியையும் ஒப்பிட்டுப் பார்த்தது. சிவகாமி இந்த ஒரு மாதமாக வீட்டில் இல்லை. பிரசவத்துக்காகத் தஞ்சாவூரில் தன் தாயார் வீட்டுக்குப்போயிருந்தாள்.

அவள் இல்லாத சமயத்தில், இந்த ஒன்பது மாதங்களாக அவனுக்கு நடக்காத உபசாரம், இந்த ஒரு மாதமாய் நடக்கிறது. தன் அண்ணியின் உதாசீனத்துக்குத் தேவகி பிராயச்சித்தம் செய்கிறாளா? ஓடி ஓடிக் கவனிக்கிறாள்; விழுந்து விழுந்து உபசரிக்கிறாள்; சிரித்துச் சிரித்துப் பேசி அவனை உற்சாகப் படுத்துகிறாள். சிலசமயங்களில் தேவகியின் செய்கை அவனுக்குத் தர்மசங்கடமாகத் தோன்றியதுண்டு. ஆனால் அவனுக்கு அதில் இன்பம் இருப்பதைக் கண்டு உள்ளூற மகிழ்ந்தான். அண்ணியின் முன்னால் கட்டுப்பெட்டியாய்க் காட்சியளித்த தேவகிக்கு இத்தனை துணிவு எப்படிப் பிறந்தது? ஏன் பிறந்தது? பூனை இல்லாத வீட்டில் துள்ளித் திரியும் சின்னஞ் சிறு சுண்டெலிக் குஞ்சு இவள்.

அடுத்த தோசையும் காப்பியும் முடிந்தன. கீழே இறங்கிக் கை கழுவுவதற்குப் போன தணிகாசலத்தைத் தடுத்து நிறுத்தினாள் தேவகி.

''தட்டிலேயே கை கழுவு!''

''இல்லேயக்கா, வேண்டாம்.''

''நீ கழுவுகிறாயா, இல்லே, நானே கழுவி விடட்டுமா?''

கலகலவென்று அவள் சிரித்தாள்.

முன்பொரு நாள் எங்கோ நினைவாகத் தட்டில் கை கழுவி விட்டதற்குத் தணிகாசலம் சிவகாமியிடம் படாதபாடு பட்டான். அப்போது தேவகி அவனுக்குப் பரிந்து கொண்டு குறுக்கிட்டாள். சிவகாமியின் கோபம் தேவகியின் மீது திரும்பியது. நன்றாக அவளை வறுத்துக் கொட்டி விட்டாள். வாயில் வந்தபடியெல்லாம் திட்டினாள்.

இன்றைக்கு இருவருக்குமே அந்த நினைவு வந்தது. கீழே இறங்கப் போனவனிடமிருந்து வெடுக்கென்று கூஜாவைப் பிடுங்கிக் கொண்டு வந்தாள் தேவகி. 'இது என்னுடைய சாம்ராஜ்யம்! நான்தான் ராணி' என்று அவள் சொல்லாமல் சொல்வது போலிருந்தது.

''இல்லேயக்கா, வந்து......''

"இல்லையாவது, அக்காளாவது?— இந்தா, இங்கே வா!" — தட்டில் அவனைக் கை நீட்டச் சொல்லித் தண்ணீரை மெதுவாக ஊற்றினாள். "நான் ஒன்று சொல்வேன், நீ அதைக் கேட்க வேண்டும். தெரியுமா?"

"என்ன?"

தேவகி அவன் கண்களைக் கூர்ந்து நோக்கினாள். "இனிமேல் நீ....இனி மேல் நீ என்னை அக்கா என்று கூப்பிடக் கூடாது!" என்றாள்.

"ஏன் அக்கா?"

"நீ ஒரு மண்டு! உன்னிடம் ஒருத்தி பேச வருகிறாள், பார்!"

தணிகாசலத்துக்கு ரோஸம் பொங்கியது. பள்ளிக்கூடத்தில் முதல் 'மார்க்' வாங்குகிறவனை, நூல்நிலையப் புத்தகங்களில் பாதியைக் கரைத்துக் குடித்தவனை, புத்திசாலிப் பையன் என்று ஆசிரியர்களால் தட்டிக் கொடுக்கப்படுகிறவனை, கேவலம் ஒரு பெண்பிள்ளை மண்டு என்று சொல்வதா?

தேவகியின் கண்களில் அவன் கோபத்தைக் கண்டு பரிகாசம் துள்ளியது. "நான் என்ன உன் உடன்பிறந்தவளா கெட்டுப் போகிறேன்? உன்னை விட உருவத்தில், உயரத்தில், வயதில் பெரியவளானால் நீ சொல்வது சரிதான்."

"அண்ணி இந்த வீட்டுக்கு நான் வந்த அன்றைக்கே சொல்லவில்லையா?"

"அண்ணி சொன்னது அண்ணியோடு போகட்டும்!"

"வேறே எப்படிக் கூப்பிடுவது?"

"நீ ஒன்றும் என்னைக் கூப்பிடவும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்!" என்று அவனிடம் எரிந்து விழுந்தாள் தேவகி. பிறகு, "எனக்கு அப்பா—அம்மா வைத்த பெயர் ஒன்று இருக்கிறது உனக்குத் தெரியுமா? பெயர் சொல்லிக் கூப்பிடேன். ஏன், தேவகி என்ற பெயர் உனக்குப் பிடிக்க வில்லையா?" என்றாள்.

"ஊஹூம்; மாட்டேன்!"

"என்ன ஊஹூம்? அக்கா என்றால் இனி நானும் பேச மாட்டேன்!"

"அக்கா! அக்கா...!"

தேவகி பதில் சொல்லாமல் சாப்பாட்டுப் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு விடுவிடென்று கீழே இறங்கினாள்.



தணிகாசலத்துக்குக் கல்லூரிக்குப் புறப்படும் நாழியாகி விட்டது. டால்ஸ்டாயை மூடிவைத்து விட்டு, தலை வாரிக் கொண்டு, அறையைப் பூட்டிக்கொண்டு கிளம்பினான். தேவகியின் கோபத்தை அவனால் தாங்க முடியவில்லை. அதற்குள் அவள் சமையல் அறையில் புகுந்து அரிவாள்மனையை எடுத்து வைத்துக் கொண்டு வெண்டைக்காயை வேகமாக நறுக்கத் தொடங்கினாள்.

மெல்ல அவள் அருகில் போய் நின்று கொண்டு, "நான் போய் வருகிறேன், அக்கா!" என்றான்.

தேவகி ஆத்திரத்துடன் கத்தினாள்: "நான் பேச மாட்டேன், பேச மாட்டேன், பேச மாட்டேன்!"

அவள் அவனைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. தணிகாசலம் அதே இடத்தில் நின்றான். இரண்டு நிமிஷங்கள் சென்றன. வெண்டைக்காய் நறுக்கும் வேகத்தில் அவள் தன்னுடைய மென்தளிர் விரல்களையே நறுக்கிக் கொள்வாள்போல் தோன்றியது. 'பெண்களின் விரல்' என்று வெள்ளைக்காரன் வெண்டைக்காய்க்குப் பெயர் வைத்தது இப்போது அவனுடைய நினைவுக்கு வந்து விட்டது.

"நான் வந்து......"—தணிகாசலம் மேலே சொல்லத் தயங்கினான்.

"நான் போய் வருகிறேன் அக்.... இல்லை, இல்லை.....தேவகி!..... போய் வரட்டுமா தேவகி?" என்றான்.

தேவகி குதித்துக் கொண்டு எழுந்தாள். கண்ணீர் நிறைந்த முகத்தில் களி நகை பொங்கியது. எத்தனை அழகாகச் சிரிக்கிறாள்!

தணிகாசலத்தின் சட்டைப் பையில் இருந்த பேனாவைச் சரியாகச் செருகி வைத்தாள். சட்டையின் கழுத்து மடிப்பை நன்றாக எடுத்து விட்டாள். முதலில் ஆனந்தத்தில் வாய்ச் சொற்கள் வெளிவர முடியாமல் தடுமாறி நின்றன. பிறகு, "மகராஜனாய்ப் போய் வா!" என்றாள். "வழக்கம் போல் முதல் 'மார்க்' வாங்க வேண்டும். மத்தியானச் சாப்பாடு அனுப்பி வைக்கிறேன். விளையாடாமல் சாப்பிட்டு விட்டு மாலையில் நேரே வீடு திரும்ப வேண்டும். நான் உனக்காகக் காத்துக் கொண்டே இருப்பேன். ஐந்து மணிக்கெல்லாம் வருகிறாயா?"



"சரி" என்று பலமாகத் தலையாட்டினான் தணிகாசலம்.

"அண்ணா வீடு திரும்புவதற்கு ஒன்பது மணியாகும். அதற்குள் உன்னிடம் நிறையப் பேச வேண்டும். முக்கியமான விஷயம் பேச வேண்டும்."

அவன் தெருவில் இறங்கிச் செல்லும் வரை அவனைப் பின்தொடர்ந்து வழியனுப்பினாள் தேவகி. தெருமுனைக்குச் சென்றபிறகு தணிகாசலம் திரும்பிப் பார்த்தான். இன்னும் அவள் நின்ற இடத்தைவிட்டு அசையவில்லை. தணிகாசலத்துக்கு அவளுடைய செய்கை வியப்பாக, வேதனையாக, ஒருபக்கம் பெருமையாகக்கூட இருந்தது. அவள் யாரோ, அவன் யாரோ, தூரத்து உறவும் இல்லை. 'இந்தத் தேவகி அக்காள் ஏன் என் மீது உயிரையே வைத்திருக்கிறாள்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டு கல்லூரிக்கு நடந்தான் அவன்.

### அத்தியாயம் 2

## அன்புச் சோதனை

சுதேச சமஸ்தானங்கள் என்று பல சுய ஆட்சித் திட்டுகள் இந்த நாட்டில் வெள்ளைக்காரர்கள் ஆட்சி செய்த காலத்தில் இருக்கவில்லையா? அவற்றில் ஒன்று கண்ணபுரம் சமஸ்தானம். பரம்பரை பரம்பரையாக அதை ஆட்சி செய்த சிற்றரசர்கள் தங்கள் குடும்பத்தைப் போலவே அதைக் கண்காணித்து வந்தார்கள். நாட்டின் பிறபகுதிகளுடன் ஒப்பிடும் போது கண்ணபுரத்தின் ஆட்சி முறை ஒழுங்காகத்தான் நடந்தது. மன்னர்கள் ஆங்கிலம் படித்தார்கள், வெளிச் சீமைகளில் சுற்றினார்கள். வேட்டைகள் ஆடினார்கள், வெள்ளைக் கவர்னர்களுக்கு விருந்துகள் வைத்தார்கள். என்றாலும் தங்கள் மக்களை அறவே மறந்து விடவில்லை. முடிந்தவரையில் வசதிகள் செய்து கொடுத்தார்கள். சமஸ்தானத்தின் கீழ் வட்டங்களில் லஞ்ச ஊழல் தாண்டவமாடியது என்னவோ உண்மைதான். ஆனால் அது நாட்டின் பிற பகுதிகளில் இருந்தது போல் அவ்வளவு மோசமாக இல்லை.

கண்ணபுரத்தின் ஒரே கல்லூரியான மன்னர் கல்லூரி மத்தியான உணவுக்காக இடைவேளையில் கலைந்தது. வீடுகளுக்குச் செல்லும் மாணவர்கள் சென்றார்கள். மற்றவர்கள் சாப்பிடும் இடத்

தில் கூடினார்கள். தணிகாசலத்துக்குத் தேவகி சாப்பாடு அனுப்பியிருந்தாள். பாத்திரம் கனமாக இருந்தது. நாலைந்து வகைக் காய்கறிகள், பருப்பு, அப்பளம், வறுவல், நெய் எல்லாமாகச் சேர்ந்து தணிகாசலத்தின் பசியை மிகைப்படுத்தின. தேவகியின் கைப்பட்ட சமையலுக்குத்தான் எத்தனை ருசி! வயிறு நிறையச் சாப்பிட்ட பின்பும் பாத்திரத்தில் பாதிக்கு மேல் மீதியிருந்தது. தணிகாசலத்தால் தேவகியின் அன்பை நினைக்காமல் இருக்க முடியவில்லை.

சிவகாமி அண்ணியுந்தான் சாப்பாடு அனுப்பி வந்தாள். சாப்பாடா அது? ஏதோ கடன். 'தெண்டக் கட'னுக்கு அனுப்புகிற அலட்சியமும் வெறுப்பும் அந்தப் பாத்திரத்தில் தெரிந்தன. அண்ணியைச் சொல்லிக் குற்றமில்லை. தனக்குக் கொட்டி அழ வேண்டுமென்று அவளுக்கு என்ன அக்கறை? பாத்திரத்தைப் பாலிஷ் போட்ட மாதிரி திருப்பி அனுப்புவான். பாதிப் பட்டினிக்கு வயிறு பழக்கப்பட்டு விட்டது.

மாலைத் தேர்வையும் எழுதி விட்டுக் கைகளை உதறிக் கொண்டு எழுந்தான் தணிகாசலம். பி. ஏ. முதல் வகுப்பு என்கிற அரைக் கிணறு தாண்டியாயிற்று. இன்னும் இரண்டு மாதங்களுக்கு அவனையும் அவனைப் போன்ற பலரையும் கட்டின்றி அவிழ்த்து விட்டார்கள். மறுநாள் பொன்வயலுக்குக் கிளம்ப வேண்டும். தாயார், தங்கை, பாட்டி என்கிற மற்றொரு உலகத்தில் வாசம் செய்ய வேண்டும்.

தேவகியின் அழைப்பு தணிகாசலத்தின் நினைவுக்கு வந்தது. நேரே வீட்டுக்குப் போகவேண்டுமென்றுதான் முதலில் எண்ணினான். ஆனால் இடையில் சற்று நேரம் தங்கி அதைப் பற்றிச் சிந்தனை செய்ய வேண்டுமென்று அடுத்தாற் போல் தோன்றியது. சிந்தனைக்கேற்ற இடமும் வெகு தொலைவில் இல்லை.

கல்லூரிக்கு நேர் எதிரில் அற்புதமான பூங்கா ஒன்றைச் சமஸ்தானத்தார் அமைத்திருந்தார்கள். பல நாட்டுச் செடி கொடிகள், மரங்கள், மலர்கள் அங்கு மலிந்திருந்தன. நடு மையத்தில் அழகான குளம் வெட்டிப் பளிங்கு போன்ற நீர் நிரப்பியிருந்தார்கள். அதன் கரையில் கிடந்த மரப் பலகையில் உட்கார்ந்தான் தணிகாசலம். நினைவு பின்னோக்கிச் சென்றது.

**ப**த்து மாதங்களுக்கு முன்பாக, முதன் முதலில் சுப்பையாவின் வீட்டில் நுழைந்தபோது, அவன் வரவைச் சுப்பையாவுக்குச் சொல்லி அவரை வெளியே அழைத்து வந்தாள் தேவகி. சுப்பையா அவனை அன்போடு வரவேற்றார். தம்முடைய தங்கைக்கும் மனைவிக்கும் அறிமுகப்படுத்தினார். பார்வை மங்கிச் செயல் இழந்து படுக்கையில் கிடந்த தம் தாயாரிடம் அழைத்துச் சென்று காண்பித்தார். பிறகு, ''சிவகாமியிடம் உன்னைப் பற்றி முன்பே சொல்லியிருக்கிறேன்; சொந்த வீடு போல் நினைத்துக் கொள்; மாடி அறையில் உன் சாமான்களையெல்லாம் வைத்துக் கொள்ளலாம்'' என்று சொன்னார்.



சுப்பையாவின் ஆபீஸ் அறை வெளி முகப்பில் இருந்தது. ஆபீஸ் சென்று வந்த நேரம் போக மற்ற மற்ற நேரங்களிலும் அவர் காகிதக் கட்டுக்களை வைத்துக் கொண்டு போராடினார். தாலூக்கா ஆபீஸில் ஏதோ ஒரு பிரிவுக்குக் குட்டித் தலைவர் அவர். கூட்டல் கழித்தல் என்னும் கணக்கு விவகாரம் வரும் போது மாத்திரம் அவர் தேவகியைத் துணைக்குக் கூப்பிடுவார்.

வந்து சேர்ந்த ஒரு வாரத்தில் சிவகாமியைப் பொறுத்த மட்டில் தான் வேண்டாத விருந்தாளி என்பதை அவன் தெரிந்து கொண்டான். தேவகி முதலில் அவனிடம் பேசவில்லை; பார்வையில் கனிவும் உதட்டில் பரிவும் அவனிடம் கண்டான். பேச விரும்பினாள் என்று தெரிந்தது: ஆனால் பேசவில்லை. சுப்பையாவோ தமது மனைவியைக் காணாத நேரங்களில் அவனிடம் தட்டிக் கொடுத்துப் பேசினார். மனைவியின் முன்னால் பராமுகமாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது. ஒல்லியாக, குட்டையாக உழக்குப் போலிருந்த சிவகாமியின் செல்வாக்கைத் தெரிந்துகொள்ள அவனுக்கு ஒரு வாரம் கூடத் தேவையாக இருக்கவில்லை. சுப்பையா உருவத்திலும் உள்ளத்திலும் பெரியவராக இருந்தும் தம்முடைய சிறிய மனைவியின் சிறிய உள்ளத்துக்குள் ஐக்கியமாகி யிருந்தார்.



கல்யாணம் நடந்து பத்து வருஷங்களுக்கு மேலாகியும் அவர்களுக்கு என்னவோ குழந்தை பிறக்கவில்லை.

இரண்டாவது வாரத்தில் தேவகியும் தணிகாசலமும் பேசிக் கொண்டார்கள். ஒரு நாள் தணிகாசலம் தன்னுடைய அறைக்குச் சென்று கொண்டிருந்த போது, அவன் பின்னால் தயங்கித் தயங்கிப் படியேறி வந்தாள் தேவகி. கொல்லைப்புறத்திலிருந்து வந்த அண்ணி இதைக் கண்டு விட்டாள்.

''தேவகி! உனக்கு அவனிடம் என்ன வேலை? இங்கே வா!''

தேவகி திடுக்கிட்டு நின்று விட்டுத் திரும்பி வந்தாள்.

''ஏதாவது படிப்பதற்குப் புத்தகம் வாங்கலாம் என்றுபோனேன் அண்ணி!''

''இனி நீ படித்து என்ன கிழிக்கப் போகிறாய்? அவன் வயது வந்த பிள்ளை. சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை. நாளைக்கு நாலு பேர்கள் நாலைச் சொல்வார்கள். உன் வேலையை நீ பார்; அவன் படிப்பை அவன் கவனிக்கட்டும்.''

தணிகாசலத்துக்கும் இந்த எச்சரிக்கை அச்சத்தைத் தந்தது.

சிவகாமி அன்றைக்கே தணிகாசலத்தையும் தனியாக அழைத்து இதைக் காதில் போட்டு வைத்தாள்: ''தேவகி உனக்கு அக்காள் மாதிரி. அவள் நெற்றியைப் பார்த்தாயா? அவளுக்குக் கல்யாணம், கல்லெடுப்பு எல்லாம் முடிந்து விட்டன. எங்கள் குடும்பத்தின் கௌரவத்தைக் கவனித்து நடந்து கொள். உன்னை வீட்டில் வைத்துக் கொள்ள நான் ஒப்புக் கொண்டதே அவருடைய தொந்தரவுக்காகத்தான்.''

அன்றிலிருந்து அவன் தேவகியை அக்காள் என்று அழைத்தான். மிகவும் அவசியமான வேலைகளில் தவிர அவளுடன் பேசுவதில்லை. பேசினாலும் ஓரிரண்டு வார்த்தைகளுடன் சரி. இயல்பாகவே வெட்கம் நிறைந்த பிராணி அவன். இப்போது வெட்கத்துடன் பயமும் சேர்ந்து கொண்டது.

சிவகாமியின் சொல்லைக் கேட்க அங்கே சுப்பையாவின் ஆபீஸ் சேவகன் காத்துக் கிடந்தான். ஆனால் அவள் தணிகாசலத்தையே எதற்கெடுத்தாலும் வேலைக்கு ஏவினாள். கடைகண்ணிக்குப் போக, காய்கறி வாங்க, வாங்கி வந்த சாமான்களைக் குறை சொல்லித் திருப்பி அனுப்ப, எடுபிடி வேலைகள் செய்ய எல்லாவற்றுக்கும் தணிகாசலத்தையே வைத்துக் கொண்டாள். நாளடைவில் அவன் தன்னை அந்தக் குற்றேவல்களுக்குப் பழக்கப்படுத்திக் கொண்டான்.

சிவகாமியின்கட்டுப்பாட்டுக்கு அடங்க மறுத்துப் புரட்சிசெய்யும் மனப்பான்மை தேவகிக்கு இருந்ததை அவன் நாளடைவில் தெரிந்து கொண்டான். தணிகா

சலத்துடன் நெருங்கிப்பழகாத ஒன்றைத் தவிர அவள் மற்ற விஷயங்களில் தன் போக்குப்படி நடந்து கொண்டாள். தன் விருப்பப்படி துணிமணிகள் வாங்கினாள். வயோதிகத் தாயாருக்கு வசதிகள் செய்து கொடுத்தாள். அடுத்த வீட்டுப் பெண்களை அழைத்து வைத்துக்கொண்டு கொட்டமடித்தாள்.

தணிகாசலம் தனக்குத் தெரியாமல் தன்னைத் தேவகி இரக்கத்துடன் கவனித்து வருகிறாள் என்பதைக் கவனித்துக் கொண்டான். இது அவனுக்குப் பிடிக்கவில்லை. எவ்வளவு தூரம் தன்னை மறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவும் முயற்சி செய்தான். அண்ணிக்குத் தெரியாமல் அவள் சில்லறை உதவிகள் செய்ய முன்வந்திருக்கிறாள். எதையும் அவன் ஏற்றுக் கொண்டதில்லை.

ஒருநாள் கல்லூரியிலிருந்து திரும்பியவுடன், காலையில் துவைத்து உலரப் போட்ட சட்டைத் துணியை எடுப்பதற்காகக் கிணற்றடிக்குச் சென்றான். சட்டையை எடுத்துப் பார்த்தபோது அவனுக்குக் கோபம் வந்தது. தோள் பட்டையில் நீண்டு கிழிந்திருந்த பகுதியை இப்போது காணவில்லை. யந்திரத்தில் தைத்த மாதிரி சுத்தமாகத் தைத்து வைக்கப்பட்டிருந்தது. அண்ணிக்குத் தெரியாமல் அவள்தான் செய்திருக்க வேண்டும். யார் அவளைச் செய்யச் சொன்னது என்று ஆத்திரப்பட்டான்.

அதற்கு ஏற்றாற்போல் அவளைத் தனியே சந்தித்துப் பேச அன்றைக்கு வசதி கிடைத்தது. அண்ணி இந்தப் பத்து வருஷங்களாக இல்லாமல் இப்போது தாயாகிக் கொண்டு வந்ததால் வெள்ளிக்கிழமைதோறும் கோயிலுக்குச் சென்றாள். அன்றைக்கும் வெள்ளிக்கிழமை; சிவகாமி வீட்டில் இல்லை.

''நீங்கள்தான் இந்தச் சட்டையைத் தைத்தீர்களா?'' என்று தேவகியிடம் கேட்டான் தணிகாசலம்.

''நானும் உன்னிடம் ஒன்று சொல்ல நினைத்தேன்'' என்று சிரித்தாள் தேவகி. ''எதற்காக இரண்டு சட்டைகளையே திருப்பித் திருப்பிப் போட்டுக் கொண்டிருக்கிறாய்? நான் சொல்வதைக் கேள். இன்னும் இரண்டு தைத்துக் கொள். — இந்தா, தப்பாக நினைக்காதே!'' என்று பத்து ரூபாய் நோட்டு ஒன்றை அவனிடம் மெல்ல நீட்டினாள்.

''இப்போது எனக்கு இரண்டு போதும். தேவையானால் உங்களிடம் கேட்டு வாங்கிக் கொள்கிறேன்.''

தேவகி வாங்கிக் கொள்ளச் சொல்லி அவனிடம் கெஞ்சினாள். அவள் கெஞ்சக் கெஞ்ச அவனுக்குக் கோபம் பொங்கியது. கண்டிப்பாக மறுத்து விட்டான்.

தேவகி கண்ணீரும் கம்பலையுமாய்த் திரும்பினாள். ஒரு வாரம் அவனிடம் அவள் முகம் கொடுத்துப் பேசவில்லை. அடுத்த வெள்ளிக்கிழமை அதே நேரத்தில் அவனிடம் வம்புக்கு இழுத்தாள்.

''உனக்கு அண்ணிதான் சரி; வேலைக்காரனை விடக் கேவலமாய் நடத்தும் அண்ணியின் பேச்சைத்தான் நீ கேட்பாய். உன்னை மனிதனாய் மதிக்கிறேன் பார், எனக்கு இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும்'' என்றாள் தேவகி.

''எனக்கு அண்ணியும் நீங்களும் ஒன்றுதான்'' என்றான் தணிகாசலம்.

கண்களைக் கோபமாக உருட்டி விழித்தாள் தேவகி. என்ன அலட்சியம்!

''அண்ணியும் நானும் உனக்கு ஒன்றுதானா? எங்கே உன் நெஞ்சில் கையை வைத்துச் சொல். உன்னிடம் இரக்கம் காட்டுகிறேன் பார், அது பெரிய தப்பு!''

''சந்தேகமில்லாமல் தப்புத்தான்! ஆயிரம் தடவைகள் சொல்கிறேன்; தப்பு, தப்பு, தப்பு!''

பொங்கும் நெருப்பைப் போல் அவளுடைய உருவம் அவன் கண்களுக்குத் தெரிந்தது. மூச்சு விடாமல் பேசினான்:

''என்னிடம் யாரும் இரக்கம் காட்ட வேண்டாம். இது எனக்குப் பிடிக்கவே



இல்லை. நான் ஏழையாக இருந்தால் யாருக்கென்ன? தண்டச் சோறு தின்ருல் யாருக்கு என்ன? காசில்லாதவனை யாரும் மனிதனுக மதிப்பதில்லை. அவன் ஒரு அற்பத் துரும்பு. சின்னஞ் சிறு நாய்க்குட்டி. சிலர் நாய்க்குட்டியுடன் சீண்டி விளையாடுகிருர்கள் ; சிலர் சிரித்து விளையாடுகிருர்கள். அண்ணியின் வெறுப்பும் சரி, உங்கள் இரக்கமும் சரி, எனக்கு இரண்டும் ஒன்றுதான். நீங்கள் என்னை மதிக்கவில்லை. என் ஏழைமையைக் குத்திக் காட்டுகிறீர்கள் !''

'' இல்லை, இல்லை, இல்லவே இல்லை!'' என்று கதறி யழுதாள் தேவகி. அவளுடைய உடல் பதறியது. சேலைத் தலைப்பை வாயில் வைத்துக் கடித்து அழுகையை நிறுத்தப் பார்த்தாள். '' தணிகாசலம் ! என்னைத் தப்பாக நினைக்காதே ! என் மனம் உனக்குத் தெரியாது. நீ இன்னும் சிறு பிள்ளை. ....ஆனால் நான் உன்னை என்னைவிட எல்லாவிதத்திலும் பெரியவனுகவே மதிக்கிறேன்'' என்ருள்.

அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. இருவரும் தனித்தனியே பிரிந்து போய்ப் பொருமினுர்கள்.

தணிகாசலம் இப்படியே பல நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்த்தான். தன்னைத் தானே மனத் தராசில் எடை போட்டும் பார்த்துக் கொண்டான். அப்படியொன்றும் விவரம் தெரியாத பிள்ளையில்லை. இந்த வயதில் மற்ற மாணவர்கள் அனுபவித்ததை விட அவன் இன்ப துன்பங்களை அநுபவித்திருக்கிருன். பன்னிரண்டு வயது வரையில் சுகபோக வாழ்க்கை ; சமஸ்தான மன்னரின் விருந்துகளுக்குத் தன் தகப்பனுருடன் போயிருக்கிருன். ஆனுல் அதற்குப் பிறகு அநுபவித்த வறுமைத் தொல்லையிருக்கிறதே, அது மிக மிகப் பயங்கரமானது. ஏழைமைச் சேற்றின் அதல பாதாளத்தில் நெளியும் மண்புழுப் போல இந்த மனிதப் புழு நெளிந்திருக்கிறது. பள்ளிக்கூடப் பாடங்களால் பெற்ற அறிவை விடப் பசியும் பட்டினியும் கொடுத்த அறிவே அவனுக்கு அதிகம். என்ருலும் ஒரு விஷயத்தில் அவனுக்குப் பழக்கமே இல்லை. தாய், தங்கை தவிர மற்றப் பெண்களிடம் அவன் பழகியதில்லை. தேவகி பழகிய விதம் அவனுக்குப் புதுமையாகவும் புதிராகவும் இருந்தது.

தணிகாசலம் எழுந்து நடந்தான். கையில் கொஞ்சம் பணம் இருந்தது. வழியில் இருந்த பழைய புத்தகக் கடைக்குச் சென்று குறைந்த விலையில் சில உயர்ந்த புத்தகங்களை வாங்கிக் கொண்டான். பொன்வயலுக்குப் போனுல் பொழுது போக வேண்டுமல்லவா?

தெருவின் திருப்பத்துக்கு வந்தவுடனேயே அவனுக்காகத் தேவகி திண்ணையின் அருகில் வந்து நிற்பது தெரிந்தது. வழியில் கடிகாரத்தில் மணி பார்த்தான். சரியாக ஆறு மணி. ஒரு மணி தாமதமாக வந்ததற்கு அவளுக்கு என்ன சமாதானம் கூறுவது என்று கற்பனை செய்து கொண்டே நடந்தான்.

அவன் எதிர்பார்த்தபடி அவள் அவனைத் திட்டவில்லை. ஆனுல் அவளுடைய வெளித் தோற்றத்தில் தெரிந்த மாற்றம் அவனைப் பிரமிக்க வைத்தது. வழவழவென்ற கருங்கூந்தலை வாரி விட்டு முடிந்து கொண்டிருந்தாள். முகத்தை அப்போதுதான் கழுவித் துடைத்துக் கொண்டதுபோல் அதில் புது மெருகு பளிச்சிட்டது. அடர்த்தியான புருவங்களுக்குக் கீழே அன்றலர்ந்த தாமரை இதழ்களைப் போன்ற கண்ணிமைகள் அகலமாக விரிந்து அவனைப் பரிவுடன் நோக்கின. மெல்ல ஓர் சிரிப்பை உதிர்த்து விட்டு உள்ளே ஓடினுள்.

தணிகாசலம் கைகால் கழுவிச் சுத்தம் செய்து கொண்டு தன் அறைக்குச் சென்ருன். அடுக்களையிலிருந்து லேசான ராகம் எழுந்தது. எங்கோ நிலவொளியின் தனிமையில் தொலைதூரத்திலிருந்து ஒலிப்பது போன்ற இன்னிசை. தணிகாசலம் சன்னலருகில் வந்து நின்று கொண்டு கீழே பார்த்தபோது, தேவகி காப்பியும் கையுமாக அவனைப் பார்த்துச் சிரித்தாள். காலைப் பனியில் மலர்ந்த புது ரோஜாச் செண்டுபோல் அவள் உருவம் வந்து கொண்டிருந்தது.

ஆயிரம் ஆயிரம் எண்ணங்கள் ஒரே கணத்தில் அவனிடம் அலை மோதின. ஏன் அவள் தன்னுடைய தமக்கை என்ற உறவை அப்படி உதறித் தள்ள வேண்டும்? ஏன் அவள் தனக்காக வழி மீது விழி வைத்துக் காத்திருக்க வேண்டும்? ஏன் அவள் தனக்காக அழ வேண்டும்? சிரிக்க வேண்டும்? ஏன் இன்றைக்கு இப்படி அவளுடைய பொல்லாத அழகின் ஜ்வாலை கொழுந்து விட்டுக் குபீரென்று எரிய வேண்டும்? அவளுடைய உதட்டில் இந்தப் பாட்டு ஏன்? குரலில் இந்தக் குழைவு ஏன்? நடையில் இந்தத் துள்ளல் ஏன்? ஏன், ஏன், ஏன்?

தணிகாசலம்! இன்னுமா உனக்குத் தெரியவில்லை? ஆனந்தம், அச்சம், பரவசம், பயம், இன்பம், துன்பம், வேதனை, வெட்கம், வேட்கை இன்னும் எத்தனை எத்தனையோ உணர்ச்சிகள் அவனை அந்த மின்வெட்டும் நேரத்தில் ஆட்டிப் படைத்தன.

தேவகியின் கிறங்கும் விழிகளை அவன் நினைத்துப் பார்ப்பதற்குள் அவளே அவன் முன்வந்து நின்ருள். (தொடரும்)

# ஹிந்த்—ஒரு வாழ்நாள் நண்பன்

ஹிந்த் ஸைக்கிள் அனாயாசமாக உழைக்கும் ஒரு உற்ற நண்பன். அது வாழ்நாள் முழுவதும், சுகமான, தொந்தரவில்லாத சேவை அளிக்கிறது.

மிகச்சிறந்த மூலப்பொருள்கள் மற்றும் தொழில் நுட்ப வேலைப்பாடு இவைகளே ஹிந்த் ஸைக்கிள்களின் இணையற்ற உழைப்பிற்கும் உன்னத தரத்திற்கும் சான்று.



**ஹிந்த் ஸைக்கிள்ஸ் லிமிடெட், 250, வொர்லி, பம்பாய் 18.**

ASF/HC.119


கோபால கிருஷ்ண கோகலே


லோகமான்ய திலகர்


தாதாபாய் நௌரோஜி


மதன் மோஹன் மாளவியா


வ.உ.சிதம்பரம் பிள்ளை


சத்திய மூர்த்தி


வ.வே.சு.அய்யர்


எஸ்.சீனிவாச ஐயங்கார்


சேலம் விஜயராகவாச்சாரி






லோமா ஹேர் டானிக்கை உபயோகித்து இழந்த இயற்கை அழகை திரும்பப் பெறுங்கள்.

**லோமா,** கேசத்தை இயற்கையாக கருமை நிற மாகச் செய்யும் தன்மை வாய்ந்தது. இது உலகப் பிரசித்திப்பெற்றது. இது பிரத்தியேகமாக தயார் செய்யப்பட்ட பாட்டிலில் சீல் செய்த மூடியுடன் இப்பொழுது கிடைக்கிறது.




**ஸோல் ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்டாவாலா—ஆமதாபாத்.**

ஏஜெண்டுகள் : ஸி. நரோட்டம் அண்ட் கோ., பம்பாய்-2 போன் : 30575

சென்னை ஏஜெண்டுகள் : ஜே பாலபாய [illegible], எஸ்பிளனேட், மதராஸ்-1

இலங்கை ஏஜெண்டுகள் : சிர்ருல் கதிர் & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11



### அத்தியாயம் 45

## யார் குற்றவாளி?

**மா**தவியின் கேள்விக்கு அச்சுதன் நேரடியாகப் பதில் சொல்லவில்லை. ஒரு வறண்ட புன்னகையுடன், ''உன்னை இன்ஸ்பெக்டர் அனுப்பி வைத்தாரா, மாதவி அக்கா?'' என்று கேட்டான்.

''சே! சத்தியமாகச் சொல்லுகிறேன். நானாகத்தான் வந்தேன்.''

''சரி; பின் ஏன் கோவிந்தனை அழைத்துக்கொண்டு வந்தாய்?'' என்று கேட்டான் அச்சுதன். கோவிந்தன் மாதவியை

# மழைச்சாரல் மாதவி

மட்டும் உள்ளே விட்டு விட்டு உடனே வெளியே போய் விட்டார்.

''கோவிந்தன்தான் என்னை இங்கே அழைத்துக்கொண்டு வந்தார். எனக்குத் தனியாக வர முடியுமா?''

இவ்வாறு சம்பந்தமில்லாமல் சிறிது நேரம் பேசிய பிறகு கடைசியாக அச்சுதன், ''அக்கா! இதைப் பற்றி யார் கேட்டாலும் நான் எதுவும் சொல்லத் தயாராக இல்லை. பல சமயங்களில் நாம் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் இருப்பதே நல்லது. உண்மை என்பது ரொம்பக் கசப்பான விஷயம். 'ஒன்றும் தெரியாமலிருப்பதே இன்பம்' என்ற ஆங்கிலப் பழமொழியை நீ கேட்ட தில்லையா? ஒன்றும் கூறாமல் இருப்பதால், நான் உனக்கு ஒரு துரோகமும் செய்யவில்லை. இதை நீ நிச்சயமாக நம்பலாம்'' என்று கூறினான்.

மாதவிக்குத் திடீரென்று ரோஷம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது.

''எதை நம்பலாம், எதை நம்பக் கூடாது என்று உபதேசம் கேட்க நான் வரவில்லை. கருணாகரன் இறந்துபோன பிறகுகூட உனக்கு அவன்மீது வன்மம் வேண்டியதில்லை. குற்றவாளி யாரென்பதை மறைக்க விரும்பினால் அப்படியே செய்துகொள். குற்றவாளியைக் கண்டு பிடித்தாலும், கருணாகரனுக்கு அதனால் என்ன பிரயோசனம்? அவன் வந்து விடப் போகிறானா? உன்னிடம் நான் இதைக் கேட்க வந்ததே முட்டாள்தனம். மன்னித்து விடு'' என்று கூறிவிட்டு 'விடு விடு' என்று வெளியே சென்றாள் மாதவி.

மாதவி சென்ற பிறகு அச்சுதன் அந்தச் சிறிய அறையில் குறுக்கும் நெடுக்குமாகச் சிறிது நேரம் உலாவினான். தனக்குத்தானே ஒரு புன்னகை புரிந்து கொண்டான்.

'உண்மையைச் சொல்லவேண்டுமாம். அழகாய்த்தானிருக்கிறது. சொன்னால் ரொம்ப சந்தோஷப் பட்டு விடுவாள்' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

மாதவி கோபமாக வெளியே சென்றாளே தவிர உடனே அவளுடைய கோபம் தணிந்து விட்டது. அச்சுதனின் புன்னகை அவள் உள்ளத்தில் ஒரு கலக்கத்தை ஏற்படுத்தி விட்டது. அதன் பொருள் என்னவாக இருக்கும் என்பது அவளுக்குப் புரியவில்லை. 'உண்மை தெரியாமல் இருப்பதே இன்பம் என்று ஏன் அவன் சொல்ல வேண்டும்? மொத்தத்தில் அவன் குற்றவாளி இல்லை என்பது நிச்சயம். அச்சுதனைப் பார்த்தாலே அவன் குற்றம் செய்யவில்லை என்பது எனக்கு இவ்வளவு தெளிவாகத் தெரிகிறதே. குற்றம் செய்தவன் இவ்வளவு அமைதியாகப் பேச முடியுமா? இவ்வளவு நிதானமாக நடந்து கொள்ள முடியுமா? இவ்வளவு நிம்மதியாகப் புன்னகை தான் புரிய முடியுமா? மாதவிக்கு அதன் பொருள் விளங்கினாற் போலவும் இருந்தது. அதே சமயத்தில் அதை ஏதோ ஒரு மாய வஸ்து விளங்காமலும் செய்து விட்டது. எதையோ வைத்து மறந்துவிட்டு ஞாபகப் படுத்திக் கொள்ளத் திண்டாடுவது போல மாதவி மிகவும்வேதனைப்பட்டாள்.

அச்சுதனின் புன்னகை அவள் மனத்தைக் குடைந்து கொண்டே இருந்தது. அவளுடைய அலட்சிய பாவம் மாதவியின் நெஞ்சை உறுத்தியது. 'ஏன் என்னிடம் அச்சுதன்

ஆனந்தி

சரியாகப் பேசவில்லே?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

அவளுக்குக் கோவிந்தன் கூறிய இன்னெரு விஷயமும் ஞாபகம் வந்தது.

தொழிலாளர் சங்க வழக்கு முடிவதற்கு முதல்நாள் கருணுகரன் அச்சுதனைத் தேடிக் கொண்டு சென்ருனம். அச்சுதன் பாலகோபால் வீட்டில் சில நண்பர்களுடன் சீட்டாடிக் கொண்டிருந்தானும். கருணுகரன் புயற் காற்று மாதிரி உள்ளே நுழைந்து ஒரே ஆக்ரோஷமாகப் பேசினனும்.

"சிவசங்கரனை உன் கைக்குள் போட்டுக் கொண்டு விடலாம் என்று பார்க்கிருயா? அவரைக் கூப்பிட்டு விருந்து வைத்து வஞ்சம் கொடுத்து ஏமாற்றப் பார்க்காதே நான் அதற்கெல்லாம் ஏமாற மாட்டேன்" என்று கத்தினனும்.

முதலில் சாந்தமாக இருக்க முயற்சித்த அச்சுதனுக்குப் போகப் போகக் கோபம் வந்து விட்டது. வார்த்தை தடித்துப்



போய் இருவரும் கை கலக்கும் அளவுக்கு விஷயம் முற்றிவிட்டது.

கருணுகரன் அச்சுதனை ஓங்கி அடித்தான். அச்சுதன் ஆத்திரம் தாள முடியாமல், "நீ இந்த வழக்கிலும் தோற்கப் போகிருய். நான் உன் மீது மானநஷ்ட வழக்கு போடப் போகிறேன். அதிலும் தோற்றுப் போகப் போகிருய்" என்று உரக்கக் கத்தினன்.

கருணுகரனின் ஆத்திரம் மிதமிஞ்சிப் போய், "உன்னைக் கொன்று விடுகிறேன், பார்" என்ருன்.

"உன்னை வேரோடு ஒழித்து விடுகிறேன் பார்! நீ என்ன வேண்டுமானுலும் பேசினல் நான் கேட்டுக் கொண்டிருப்பேன் என்று நினைத்தாயா? நான் இன்னும் அவ்வளவு மானங் கெட்டுப் போய்விடவில்லே" என்ருன் அச்சுதன்.

"இன்னும் வேறு மானங் கெட்டுப் போவதற்குப் பாக்கியிருக்கிறதா உனக்கு?" என்று கேட்டுக் கொண்டே மறுபடியும் கையை ஓங்கினன் கருணுகரன். பாலகோபால் அவன் கையைப் பிடித்துக் கொண்டான்.

கருணுகரன் திமிறிக் கொண்டே வசை மாரி பொழிந்தான்.

அச்சுதன் அதைப் பொறுக்க முடியாமல், "நிறுத்து, கருணுகரா! நீதான் மானங் கெட்டுப் போயிருக்கிருய். உன்னுடைய நடத்தை இவ்வளவு அழகாக இருப்பதால்தான் ஜயந்தியைச் சிவசங்கரனுக்குக் கொடுக்கப் போகிருர் விஜயராகவன். நீங்கள் இரண்டு பேரும் ஏமாந்து நிற்கப் போகிறீர்கள். அப்போது தெரியும் உனக்கு" என்ருன்.

கருணுகரனின் கோபத்தை இது எவ்வளவு தூரம் அதிகப்படுத்தி யிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லே. எரிகிற நெருப்பில் பெட்ரோலே ஊற்றின மாதிரி ஆயிற்று. அவனுல் பேசவே முடியாமல் மூச்சை அடைத்தது. அவனை அங்கிருந்த மற்ற ஐந்து பேருமாகச் சேர்ந்து பிடித்துக் கொண்டிருக்காவிட்டால் அன்றே ஒருவேளே அச்சுதனின் ஆயுள் முடிந்து போயிருக்கும்.

அவர்கள் அவனை இழுத்துக் கொண்டு போய் வெளியே தள்ள முயற்சித்தார்கள். அவர்களுக்கு ஈடு கொடுத்துக் கொண்டே கருணுகரன் அச்சுதனையும், அவன் தந்தை முகுந்தனையும் பற்றி வாயில் வந்தபடியெல்லாம் நிந்தனை செய்தான். "நீ நடத்தை கெட்டவன். அதனுல் தான் வாயில் வந்தபடி பேசுகிருய்" என்று கருணுகரன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே எல்லாருமாக அவனை வெளியே தள்ளிக் கதவைச் சாத்திக் கொண்டார்கள்.

கீழே விழுந்த கருணுகரன் கறுவிக் கொண்டே சென்ருன்.

போலீஸார் இந்த ஐந்து பேரையும் தனித் தனியாக விசாரித்த போதும், எல்லாரும் ஒரே மாதிரிதான் சொன்னுர்கள். எல்லாரும் கருணுகரன்மீதே குற்றத்தை ஏற்றி வைத்துப் பேசினுர்கள். இன்ஸ்பெக்டருக்கு இது அவ்வளவு சரியாகப் படவில்லே. எல்லாரும் அச்சுதனுடைய நண்பர்களாதலால் கருணுகரன் மீதே குற்றம் சுமத்துகிருர்கள் என்று நினைத்தார்.

இதையும் தவிர குற்றம் நடந்த தினத்தன்று காலையில் அச்சுதன் தன் வீட்டிலிருந்ததற்கும், பிற்பகல் பாலகோபால் வீட்டுக்குச் சென்றதற்கும், மாலே சுமார் ஐந்து மணிக்குச் சிவசங்கரன் வீடு சென்றதற்கும் சாட்சியங்கள் இருந்தன. மாலே ஐந்து மணிக்கு அச்சுதன் சிவசங்கரன் வீட்டுக்கு வந்ததாகவும், "சிவசங்கரன் வீட்டில் இருக்கிருரா?" என்று கேட்டதாகவும் சொன்னுன்

சிவசங்கரன் வீட்டுச் சமையல்காரன் கேசவன். அப்போது அச்சுதனின் கையில் துப்பாக்கி இருந்ததைப் பார்த்த தாகவும் சாட்சி கூறியிருந்தான்.

அதன் பிறகு அவன் இரவு ஒன்பது மணிக்கு வீட்டில் இருந்தான் என்பதற் குச் சாட்சிகள் இருந்தனர். மாலை ஐந்தி லிருந்து இரவு ஒன்பது மணி வரையில் அவன் என்ன செய்து கொண்டிருந்தான் என்பது யாருக்கும் தெரியவில்லை. அச் சுதனும் அதைக் கூற மறுத்தான்.

மற்ற எல்லாவற்றையும் விட இதுவே அவன்மீது, சந்தேகம் ஏற்பட முக்கிய காரணமாக இருந்தது. அவன் மனம் வைத்திருந்தால் அவனுடைய வீட்டு ஆட்களைப் பொய்ச் சாட்சி சொல்ல வைத்திருக்கலாம். அந்தச் சமயத்தில் தான் வீட்டில் இருந்ததாகச் சொல்லச் செய்திருக்கலாம். அல்லது அவனுடைய நண்பர்கள் யார் வேண்டுமானாலும் அப் படிக்கூறி அவனைக் காப்பாற்றத் தயா ராக இருந்திருப்பார்கள். அவன் ஏன் அப்படி ஒன்றும் ஏற்பாடு செய்து கொள்ள வில்லை என்பது இன்ஸ்பெக்டர் அமர்நாத்துக்குப் புரியவில்லை.

ஒருவேளை உண்மை வெளியாகி விட் டால் தன்மீது குற்றம் ருசுவாகி விட லாம் என்ற எண்ணத்தில் அவன் பொய்ச் சாட்சி தயார் செய்யவில்லை என்ற முடி வுக்குத்தான் அவர் வரவேண்டியிருந்தது.

மாதவிக்கு இதையெல்லாம் நினைக்க நினைக்கப் பைத்தியம் பிடித்துவிடும் போல் இருந்தது. இப்படித் தன் மூளை யைக் குழப்பிக் கொள்வதால் என்ன பயன்? நடப்பது நடந்தே தீரும் என்று ஒரு சமயம் நினைத்துக் கொள்வாள். உடனே அதை மறந்து விடுவாள். இந்த அநியாயத்துக்கு ஒரு பரிகாரம் தேடா விட்டால் தான் உயிரோடிருந்து என்ன பிரயோசனம் என்று நினைப்பாள்.

குற்றவாளியை எப்படியாவது கண்டு பிடித்துத் தண்டித்து விடவேண்டும் என்று ஒரு சமயம் ஆத்திரம் உண்டா கும். உடனேயே குற்றவாளியைத் தண்டித்து விட்டால் தம்பி திரும்பி வந்துவிடப் போகிறானா? என்று மனச் சோர்வு உண்டாகும். மறுபடியும், குற்றவாளிகளைத் தண்டிப்பது என்று ஒரு சட்டம் இல்லாவிட்டால் உலகத்தின் கதி என்ன ஆகும்? யார் வேண்டு மானாலும் என்ன வேண்டுமானாலும் பயமின்றிச் செய்யலாம் என்று ஆகி விடும். ஆகவே நிச்சயமாகக் குற்றவாளி தண்டிக்கப்பட்டே ஆகவேண்டும் என்று தீர்மானம் செய்வாள்.

இப்படியெல்லாம் மனம் குழம்பினா லும் அச்சுதன் குற்றவாளியாக இருக்க முடியாது என்று அவளுக்குத் திடமாகத் தோன்றிக் கொண்டிருந்தது.

## அத்தியாயம் 46

# அபகீர்த்தி

மாதவி சிவசங்கரனைப் பார்த்துப் பல நாட்கள் ஆகிவிட்டன. அச்சுதனைப் போய்ப் பார்த்து விட்டு வந்த பிறகு அவள் அதிகமாக எங்கும் செல்லவில்லை. கோவிந்தன் தம்முடைய ஊருக்குப் போயிருந்தபடியால் ஜயந்தியையும் மாதவியையும் வந்து பார்த்துப் பேச யாரும் இல்லை. அது அவர்களுக்கு நிம்மதியையே அளித்தது.

விஜயராகவனின் உடல்நிலை தேறி, அவர் ஆலை சம்பந்தமான வேலைகளில் ஈடுபட்டார். கருணாகரன் இல்லாதது அவருக்குக் கஷ்டமாகவே இருந்தது.

புதிதாக நியமிக்கப்பட்ட ஆலை மானேஜர் கருணாகரனைப்போல் சுயமாக எதுவும் செய்யச் சக்தியும், சிந்தனையும் அற்றவராக இருந்தார். ஆகவே விஜய ராகவனே ஒவ்வொன்றையும் கவனிக்க வேண்டி யிருந்தது. இந்தச் சமயத்தில் கோவிந்தனும் ஊருக்குப் போய் விடவே அவர் சிரமப்பட்டுப் போனார்.

ஒரு நாள் தம் மனைவியிடம் மாத்திரம் கருணாகரன் இல்லாமல் தாம் திண்டாடு வதைக் குறித்து அங்கலாய்த்தார்.

"அந்தக் கருணாகரன் இருந்தபோது கூட இவ்வளவு கெட்டிக்காரன் என்பது எனக்குத் தெரியவில்லை. இப்போதுதான் தெரிகிறது. சுயமாக எத்தனை விஷயங் களைக் கவனித்துச் செய்ய வேண்டிய வற்றைச் சரியான சமயத்தில் செய்திருக் கிறான் தெரியுமா?" என்று வருந்தினார்.

"நீங்கள் வருத்தப்படாதீர்கள். என்ன செய்வது? அல்பாயுஸாகப் போக வேண் டும் என்பது அவன் தலையெழுத்து" என்று கூறினாள் அவரது பத்தினி.

"என்னதான் தேடினாலும் இனிமேல் அவனைப் போன்றவன் யாரும் கிடைக்கப் போவதில்லை. முதலில் உழைப்புக்கு அஞ்சாமல் அவன் மாதிரி வேலை செய்ய யார் முன்வரப் போகிறார்கள்? இந்தப் பிள்ளை கோவிந்தன் இருக்கிறானே, இவன் கூடப் புத்திசாலிதான். யோசனைகள் எல்லாம் நன்றாகத்தான் சொல்கிறான்.

ஆனால் உழைக்க முடியுமா? நாள் முழுவதும் மில்லில் தொழிலாளிகளுடனேயே நின்று, அவனால் கவனித்துக் கொள்ள முடியுமா? மேஜைமேல் காலைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து, எல்லாருக்கும் யோசனை சொல்லுவான். வேறு என்ன செய்ய முடியும்? ஏட்டுப் படிப்பு எதற்கு உபயோகம்?''

''இப்போது மாத்திரம் இப்படிச் சொல்கிறீர்கள். நான் ஜயந்தியைப் படிக்க வைக்க வேண்டாம். 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது' என்று எவ்வளவோ சொன்னேன். ஆனால் நீங்கள் என்னுடைய பேச்சைக் கேட்காமல் படிக்க வைத்தீர்கள். அதன் பலனைப் பாருங்கள்.''

''நான் ஏதோ சொன்னால் நீ வேறொன்றைச் சொல்கிறாயே. ஜயந்தியைப் படிக்க வைத்ததனால் இப்போது என்ன கஷ்டம் வந்து விட்டது?''

''என்ன வரவில்லை? முதலில் அந்தப் பெண் படித்துப் படித்து உடம்பைக் கெடுத்துக் கொண்டாள். படிக்க வைக்காமல் இருந்திருந்தால் நாம் சொன்னபடி கேட்டு, நாம் பார்த்துச் சொல்லும் பிள்ளையைக் கல்யாணம் செய்து கொள்வாள். அவளுக்குக் கருணாகரனைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டிருக்குமா? இப்போது அவள் கஷ்டப்படுவதைப் பார்த்துத்தான் நாம் சகிக்க வேண்டியிருந்திருக்குமா?''



''ஜயந்தியைப் படிக்க வைத்ததனால் தான் அவனிடம் பிரியம் ஏற்பட்டது என்று நீ நிஜமாகவே நினைக்கிறாயா? அதற்கு நானல்லவா இடம் கொடுத்தேன். படிப்பு என்ன செய்யும்?''

''ரொம்ப அழகாக இருக்கிறது. நீங்கள் என்ன செய்வீர்கள்? பாவம், அந்தப் பிள்ளைக்கு ஆயுள் போதவில்லை. அதற்கு யார் என்ன செய்ய முடியும்? ஆனால் ஊரார் அப்படி நினைப்பார்களா? 'ஜயந்தியின் ஜாதக தோஷம்' என்பார்கள். ஏதாவது கதை கட்டி விடுவதே நம் ஊரில் வழக்கம். இனிமேல் அவளுக்குக் கல்யாணம் செய்துவைப்பது பிரும்மப் பிரயத்தனமாக ஆகிவிடும்.''

''ஏன்? ஜயந்தி கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டுமா? எனக்குப் பிள்ளையாக இருந்து விட்டுப் போகிறாள். உனக்கு அதில் என்ன கஷ்டம்?'' என்றார்.

''ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது, நீங்கள் சொல்வது. அவளே இப்போது தான் கொஞ்சம் மனம் தேறி வருகிறாள். இந்த மாதிரி ஏதாவது அவளிடம் சொல்லி மனத்தைக் கெடுத்து விடாதீர்கள். ஜயந்தி ரொம்பவும் பிடிவாதக்காரி. ஏதாவது நினைத்து விட்டால் எப்படியாவது சாதித்துக் கொண்டு விடுவாள்'' என்று எச்சரிக்கை செய்தார் ஜயந்தியின் சின்னம்மா.

''அந்தப் பெண் மாதவி எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டார் விஜயராகவன் அனுதாபத்துடன்.

''ஐயோ, பாவம்! அந்தப் பெண் தன்னுடைய மன வருத்தத்தைக் கூட மறைத்துக்கொண்டு ஜயந்தியைத் தேற்றிக்கொண்டு வருகிறாள். மாதவி இங்கில்லாவிட்டால் என்னால் ஜயந்தியைச் சமாதானம் செய்து சமாளித்திருக்கவே முடியாது'' என்றாள் சின்னம்மா.

''பாவம்! இறந்து போனவனும் அவளுடைய அருமைத் தம்பி. குற்றம் சாட்டப் பட்டிருப்பவனும் தம்பிதானே. அவளுடைய மனம் எவ்வளவு வேதனைப் படும்?'' என்று வருந்தினார் அவர்.

''சிவசங்கரன் இந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வாரா?''

''பேஷாகச் செய்து கொள்வார்.''

''எனக்கென்னமோ அப்படித்தோன்றவில்லை. இப்படியெல்லாம் அபகீர்த்தி ஏற்பட்ட குடும்பத்தில் உள்ள பெண்ணை அவர் மணந்து கொள்ள மாட்டாரென்றே தோன்றுகிறது.''

''நீ ஏதாவது உளறிக் கொண்டிருக்காதே. அவர் ரொம்ப நேர்மையான மனிதர். அவருக்கு இப்படி யெல்லாம் குறுகிய புத்தி கிடையாது. கருணாகரன் இறந்து போனதற்கும், அச்சுதன் மீது பழி ஏற்பட்டதற்கும் மாதவியா பொறுப்பாளி? நீ இப்படி ஏதாவது அவளுடைய காது கேட்கும்படி பேசி வைக்காதே. வருத்தப்படப் போகிறாள்.''

''நான் ஏன் அவளிடம் சொல்கிறேன்?'' என்று கூறிவிட்டு எழுந்து தன் காரியங்களைக் கவனிக்கச் சென்றாள் ஜயந்தியின் சின்னம்மா.

வெளியே சென்றவள் உடனே திரும்ப உள்ளே வந்து, ''ஒரு அதிசயம் பாருங்களேன். இப்போதுதான் சிவசங்கரனைப் பற்றிப் பேசி வாய் மூடவில்லை. அதற்குள் அவரே வருகிறார். வேறு யாரோ



# உங்கள் சேவையே எமது ஊழியர்களின் நோக்கம்!

உங்கள் விமானப் பிரயாணத்தை முற்றிலும் ஆனந்தகரமாக்குவதற்காக இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன், அதன் ஊழியர்களுக்கு விசேஷ பயிற்சி அளிக்கிறது.

பிரயாணத்தின் பொழுது உங்கள் சௌகரியத்தைப் பேணி பணியாற்றும் ஏர் ஹோஸ்டெஸ் ஜுஎனி அளிக்கும் மேன்மையான சேவைக்கு ஒரு சிறந்த உதாரணம். கருணையாயும், விநயத்துடனும், எப்பொழுதும் உங்களுக்கு வேண்டுவன செய்ய சித்தமாயிருக்கும் அவள் சேவை உங்களுக்கு மிகுந்த திருப்தி அளிக்கும். யாதொரு படோடோபமுமின்றி திறமையுடன், பணியாற்ற அவளுக்கு விசேஷ பயிற்சி அளிக்கப் பட்டுள்ளது. அவள் பிரயாணிகளின் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொள்ளத் தயாரே யென்றாலும், அவர்களின் பேச்சில் வலுவில் குறுக்கிடமாட்டாள்.

ஜுஎனி ஏர் ஹோஸ்டெஸ் புன்முறுவலுடன் திறமையாக வேலை செய்கிறாள். ஐந்து பேர்களாயினும் சரி, ஐம்பது பேர்களாயினும் சரி, ஒவ்வொருவர் குறிப்பறிந்து உணவு வழங்க, அவளுக்குத் தெரியும். எங்கும் எப்பொழுதும் தன் வேலையில் கண்ணும் கருத்துமாயிருக்கும் ஜுஎனியின், ஏர் ஹோஸ்டெஸ் உங்களுக்கு உதவியளிக்கவும் திறமையுடன் பணியாற்றவும் காத்திருக்கிறாள்

ஜுஎனியின் திறமை வாய்ந்த ஊழியர்களில் இவள் ஒருவள்.

உங்கள் சேவையே எமது ஊழியர்களின் நோக்கம்.




**இந்தியன் ஏர்லைன்ஸ்**
கார்ப்பரேஷன்

5 & 6, மௌண்ட் ரோடு,
மதராஸ்
டெலிபோன் :
86433-6 ( 4 லைன்கள் )

ஒருவரும் கூட வருகிறார்'' என்று அவசரமாகக் கூறி விட்டுச் சென்றார்.

சிவசங்கரனை வரவேற்க விஜயராகவன் ஆவலுடன் முன்னால் வந்தார். சிவசங்கரனின் சோர்ந்த முகத்தைக் கண்டதும் அவருக்கும் வருத்தமாக இருந்தது. 'அவருடன்கூட வருபவர் யாராக இருக்கும்?' என்று எண்ணமிட்டார்.

விஜயராகவன் அருகில் வந்தவுடன் அவர் கையைப் பிடித்துக் குலுக்கி விட்டு, ''இவர் என்னுடைய அத்யந்த நண்பர் சீனிவாசமூர்த்தி. இவருடன் தான் நான் இத்தனை நாட்கள் இருந்தேன்'' என்று தம் நண்பரை அறிமுகம் செய்து வைத்தார் சிவசங்கரன்.

''ரொம்ப சந்தோஷம். உட்காருங்கள்'' என்று தம்முடைய மேஜைக்கருகே இருந்த நாற்காலிகளைக் காட்டினார் விஜயராகவன்.

சிறிது நேரம் மௌனம் நிலவியது.

''மிஸ்டர் சிவசங்கரன்! நீங்கள் ஊருக்குப்போன தினத்திலிருந்து இங்கே எதுவுமே சரியாக நடக்கவில்லை. ஏதேதோகோளாறுகள் நடந்துவிட்டன. மாதவியும், ஜயந்தியும் மனம் ஒடிந்து விட்டனர்'' என்றார் விஜயராகவன்.

''மாதவி இங்கே இருப்பதாகக் கேள்விப்பட்டேன்'' என்றார் சிவசங்கரன்.

''ஆமாம்! நீங்களும் இல்லாத சமயத்தில் அவள் அந்தப் பங்களாவில் இருப்பது உசிதமாகப்படவில்லை எனக்கு. அதனால் இங்கு இருக்கும்படி சொன்னேன். அவளை மிகவும் வற்புறுத்திச் சம்மதிக்கச் செய்ய வேண்டியிருந்தது.''

''இருந்தாலும் நினைப்பதற்கே முடியாத பயங்கரமான சம்பவம் நடந்துவிட்டது'' என்றார் சிவசங்கரன். தாம் அப்படிப் பேசுவதைக் குறித்து அவருக்கே ஆச்சரியம் ஏற்பட்டது.

சீனிவாசமூர்த்தி விஜயராகவனைப் பார்த்து, ''உங்களுக்கு முழு விவரங்களும் தெரிந்திருக்க வேண்டுமே. நாங்கள் பலவிதமாகத் தகவல்கள் கேள்விப்பட்டோம். எதை நம்புவதென்றே தெரியவில்லை'' என்றார்.

''ஆமாம்! ஆமாம்! இந்தக் காலத்தில் ஒன்றுமில்லாமலேயே ஆயிரம் விதமான கதைகள் கட்டி விடுகிறார்கள். இந்த மாதிரி ஒரு சம்பவத்தைப் பற்றிப் பேசாமல் இருந்து விடுவார்களா? ஆனால் எனக்கும் மற்றவர்கள் சொல்லித்தான் விவரங்கள் தெரியும்.''

''மற்றவர்கள் என்றால்....?'' என்று இடைமறித்தார் சீனிவாசமூர்த்தி.

''இங்கே எனக்குக் கோவிந்தன் என்று ஒரு உறவினர் இருந்தார். அவர் அச்சுதனுக்கு வேண்டியவர். ஏன்! சிவசங்கரனுக்கும் அவரை நன்றாகத் தெரியும். அவர்தான் எல்லா விவரங்களையும் விசாரித்துக் கொண்டு வந்து எனக்குச் சொன்னார். நான் உடம்பு சரியில்லாமல் படுத்துக் கொண்டிருந்தேன். நான்கு நாட்களாகத்தான் வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்திருக்கிறேன்.''

''அப்படியா? கோவிந்தன் இப்போது இங்கே இல்லையா?''

''இல்லை. ஊருக்குப் போயிருக்கிறார். ஒரு வாரத்தில் திரும்பி வரலாம்.''

''உங்களுக்குத் தெரிந்தவரை நடந்ததைச் சொல்லுங்களேன்'' என்றார் சீனிவாசமூர்த்தி.

விஜயராகவன் தமக்குத் தெரிந்த அளவு விவரங்களைக் கூறினார். இருவரும்



அவற்றை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவர் கூறி முடித்தபிறகு இருவரும் புறப்பட்டார்கள். மாதவியைப் பார்க்க வேண்டுமென்று சிவசங்கரன் கூறுவார் என்று விஜயராகவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவ்வாறு அவர் சொல்லாமல் புறப்படவே வியப்பு உண்டாயிற்று.

''மாதவியைப் பார்த்து விட்டுப் போகிறீர்களா?' என்று கேட்க வாயெடுத்தவர், உடனே அதைக் கட்டுப்படுத்திக் கொண்டார். அவர் பார்க்க விரும்பாததற்கு ஏதாவது காரணம் இருக்கும், நாம் ஏன் கேட்க வேண்டும் என்று எண்ணினார். உடனே தம் மனைவி கூறியது அவருக்கு நினைவு வந்தது. 'அவள் சொன்னது உண்மையாகி விடுமோ?' என்று கவலையடைந்தார். (தொடரும்)




சின்னஞ் சிறுவர் சிறுமியரே - இந்தத்
தேசத்தின் உயரிய செல்வங்களே!
இன்றுநான் ஓர்கதை கூறிடுவேன் - அதை
எல்லாரும் கூடியே கேளுங்களே.

கள்ளிக் கோட்டை எனும் ஊர்ப்பெயரை - நீங்கள்
காதாலே நிச்சயம் கேட்டிருப்பீர்.
வெள்ளைக் காரர்அந்த ஊரினிலே - வந்து
வியாபாரம் செய்திடக் காலைவைத்தார்.

பாய்மரக் கப்பலில் ஏறிவந்தார் - அவர்
பல்லாயி ரம்மைல் தாண்டிவந்தார்.
ஆயிரம் ஆயிரம் குதிரைகளை - இங்கு
அதிகப் பணத்திற்கு விற்றுவந்தார்.

குதிரைகள் விற்பதும், வாசனைப் பொருள்களைக்
கொள்முதல் செய்வதும் அவர் தொழிலாம்.
அதிகமாய்த் தொழிலும் நடந்திடவே - பல
அந்நியரும் இங்கே வந்தனராம்.

அப்படி இந்தியா வந்தவரே - இந்த
ஆங்கி லேயர்எனும் வெள்ளையராம்.
கப்பலில் ஏறியே வந்த அவர்களும்
கம்பெனி ஒன்றை அமைத்தனராம்.

செல்வம் திரட்டினர் கம்பெனியார் - இந்தச்
சென்னை நகரையும் வாங்கினராம்.
மெல்ல மெல்ல இந்த நாட்டினிலே - அவர்
மிகுந்த பலத்தினைப் பெற்றனராம்

இமயமலை முதல் குமரி முனைவரை
எல்லா வளமும் நிரம்பியதாய்
நமது நன்னாடு இருந்ததனால் - அவர்
நாட்டின்மேல் ஆசையும் கொண்டனராம்.

அந்தச் சமயத்தில் இந்தியா தேசத்தை
அரசர்கள் பற்பலர் ஆண்டுவந்தார்
அந்த அரசர்கள் தங்களுக்குள்ளேயே
அடிக்கடி சண்டைகள் போட்டு வந்தார்.

அரசர் இருவர்கள் சண்டையிட்டால் - உடன்
ஆனந்தங் கொள்ளுவர் ஆங்கிலேயர்.
ஒருவர்மேல் ஒருவரை ஏவிவிட்டே - அவர்
ஒற்றுமை தன்னைக் கெடுத்து வந்தார்.

ஒற்றுமை தன்னைக் கெடுப்பதுவும் - பகை
ஓங்கிடச் சூழ்ச்சிகள் செய்வதுவும்
மற்றவர் சொத்தை விழுங்குவதும் - நல்ல
வழக்கமாய்ப் போனது வெள்ளையர்க்கே!

தராசு பிடித்திட வந்தவர்கள் - கையில்
சண்டைத் துப்பாக்கி பிடித்தனராம்.
இராஜ்ஜிய மெல்லாம் கவர்ந்தனராம் - இந்த
நாட்டை அடிமைப் படுத்தினராம்!



அழ. வள்ளியப்பா

சுதந்தி ரத்தை இழந்த மக்கள்
துன்பம் பெரிதும் அடைந்தனர்
தொழில்கள் யாவும் நசித்த தாலே
சோறும் இன்றி வாடினர்.
அதர்ம மாக வரிகள் பலவும்
அந்நி யர்கள் விதித்தனர்.
அரசர் கூடக் கப்பம் கட்டி
அடங்கி ஒடுங்கி வாழ்ந்தனர்.

''அடிமையாக நம்மை வைத்து
அந்நி யர்கள் ஆள்வதோ ?
அரட்டி உருட்டி வரிகள் கேட்க
அமைதி யாக வாழ்வதோ ?
உடனே இந்தக் கொடுமை தன்னை
உறுதி யோடு நானுமே
உயிர் இருக்கும் வரை எதிர்ப்பேன்
ஒருவ ருக்கும் அஞ்சிடேன்.''

என்று கூறிச் சிங்கம் போலே
எதிர்த்த கட்ட பொம்மனை
அன்று நமது அரசன் ஒருவன்
ஐயோ, காட்டிக் கொடுத்தனன்!
கண்ணைப் போலச் சுதந்தி ரத்தைக்
கருதும் கட்ட பொம்மனின்
கழுத்தில் கயிறு மாட்டிக் கொன்ற
கதையைக் கேட்பின் உருகுவீர்.

அதற்குப் பிறகு ஐம்ப தாண்டு
ஆன பிறகே நாட்டினில்
ஆங்கி லேயர் தமை எதிர்த்து
அனைவ ருமங்கு எழும்பினர்.
இதற்குப் பெயரே சுதந்தி ரப்போர்
என்று கூறி வருகிறோம்.
இது நடந்து நூறு ஆண்டு
இன்று முடிவு பெற்றதாம்.

இந்தப் போரின் காரணங்கள்
யாவை என்று நானுமே
எடுத்துக் கூற விரும்பு கிறேன்.
இச்சை யோடு கேளுங்கள்.
'' இந்தியாவில் நூறு ஆண்டு
எங்கள் ஆட்சி நிலைத்ததே !''
என்று வெள்ளைக் காரர் உலகில்
எடுத்துக் காட்ட விரும்பினர்.

சிறந்த முறையில் விழா நடத்தத்
திட்டம் போட்டு வந்தனர்.
தேச மக்கள் இதை யறிந்து
சீற்றம் கொள்ள லாயினர்.
'பிறந்த நாட்டில் மக்கள் வாடப்
பெருமை கொள்ளும் இவர்களைத்
துரத்தி அடிக்க வேண்டும்' என்று
துணிந்து முடிவு கட்டினர்.

மகன் இல்லாமல் அரசர் யாரும்
மடிந்து போனால் உடனேயே
வாரசு நாங்கள் என்றுகூறி
வம்பு செய்தார் வெள்ளையர்.
சுகம் இழந்து, சொத்தி ழந்து
சுதந்தி ரத்தை இழந்ததால்
துடிது டித்து மன்னர் சிலரும்
துணிச்ச லோடு எதிர்த்தனர்.

ஆங்கி லேயர் படையில் சேர்ந்து
அதிக மான இந்தியர்
ஆள்வதற்கு உதவி செய்தார்,
அந்தோ வயிறு வளர்க்கவே !
ஏங்கி நிற்கும் மக்கள் நிலைமை
எடுத்துக் காட்டி அவரிடம்
'எதிர்த்துப் புரட்சி செய்ய வேண்டும்'
என்று சிலரும் தூண்டினர்.

இந்து முஸ்லிம் மக்கள் தம்மை
இழிவு படுத்தி வந்தனர்.
இன்பம் உண்டு கிறிஸ்த வர்க்கே
என்றும் ஆசை காட்டினர்.
இந்த நிலைமை கண்டு மக்கள்
இதயம் கொதிக்க லாயினர்.
இதுவும் சேர்ந்து சுதந்தி ரப்போர்
எழுந்த தந்தச் சமயமே!

ஆணைப் போல உடை தரித்து
அரசி ஒருத்தி வந்தனள்.
அச்ச மின்றிக் குதிரை மீது
அமர்ந்து யுத்தம் செய்தனள்.
ஜான்ஸி ராணி அவளே. வீரச்
சண்டை போட்டும் ஐயகோ!
சமயம் பார்த்து முதுகில் ஒருவன்
தாக்கிக் கொன்று விட்டனன்.

ஜான்ஸி ராணி போலப் பலரும்
சண்டையில் மடிந்தனர்.
தாயைப் போன்ற நாட்டைக் காக்கச்
சகல மும்து றந்தனர்.
ஆண்மை யோடு போர் புரிந்தும்
அரிய புதிய கருவிகள்
அவர்க ளைப்போல் நமக்கு இல்லை.
ஆத லாலே வென்றனர்.

★★★

பெற்ற பொன் னாட்டினிலே—வந்து
பிறநாட்டார் ஆளுவது
முற்றும் அநீதியன்றோ?—நாட்டை
மீட்கவே ண்டுமன்றோ?

அறிஞர்கள் கூடினரே—கூடி
அமைத்தனர் காங்கிரசை
உரிமைகள் கேட்டனரே—சுதந்திர
உணர்ச்சியை ஊட்டினரே.

காங்கிரஸ் மாசபையும்—தோன்றக்
காரண மாயிருந்தார்.
ஆங்கில நல்லறிஞர்—அவரே
ஆக்டேவா உற்யூம் என்பார்.

உயரிய கொள்கையுடன்—பலர்
உழைத்தனர் காங்கிரசில்.
'சுயராஜ்யம்' என்றசொல்லை—முதலில்
சொன்னதே நௌரோஜி.

'இன்பச் சுதந்திரமாம்—அது
எங்கள் பிறப்புரிமை
என்றார் திலகருமே—தட்டி
எழுப்பினர் மக்களையே.

வங்காளி பங்கிம்சந்திரர்—சொன்ன
'வந்தே மாதரமே
எங்கும் ஒலித்ததுவாம்—கேட்டு
எதிரிகள் சீறினராம்.

"நாடு நமக்குச் சொந்தம்—இதில்
நம்மவர் யாவரையும்
ஆடுகள் மாடுகள்போல்—இவர்
அடக்கியே ஆளுவதோ?

அந்நியர் இங்குவந்து—நம்மை
அந்நியர் போல்நடத்த
வெந்ததே உள்ளமெல்லாம்—உடன்
வீறிட்டு நாமெழுவோம்."

என்றார் சிதம்பரனார்—கேட்டு
எழுந்தனர் இளைஞரெல்லாம்.
கனலைப் போன்றதுவாம்—விடுதலை
காணத் துடித்தனராம்.

சுதந்திர உணர்ச்சிதனை—நன்கு
தூண்டிய தலைவர்களை
விதம்விதக் கொடுமைகளால்—ஐயோ!
வெள்ளையர் வாட்டினரே.

அருமைத் தலைவர்களை—அந்தோ!
அடித்து நொறுக்கிவந்தார்
சிறையில் அடைத்துவைத்தார்—அங்கே
சித்திர வதைகள்செய்தார்.

சொந்தமாம் நாட்டினுக்கே—வீர
சுதந்திரம் கேட்டவரை
அந்நியர் தேசத்திலே—கொண்டு
அடைத்துமே வைத்தனரே.

மக்களைச் சுட்டனரே—பலர்
மடியவே செய்தனரே.
அக்கிர மங்கள் செய்தே—இன்னும்
ஆட்சி நடத்தினரே.

★★★

முப்பது கோடியாம் இந்தியரை
மும்முரமாகத் திரட்டிடவே
அப்போது காந்தி புதியதொரு
ஆயுதம் கண்டு பிடித்தனராம்
சத்தியம் சாந்தம் கலந்துசெய்த
சத்தியாக் கிரகமே ஆயுதமாம்
ஒத்துழை யாமை இயக்கமுமே
உறுதியாய்க் காந்தி துவக்கினராம்.

வெள்ளையர் தந்திட்ட பட்டமெல்லாம்
வேண்டாமென் றேசிலர் விட்டனராம்
பள்ளிக்கு மாணவர் செல்வதில்லை.
பாதிப் படிப்போடு நின்றனராம்.
துன்பம் கொடுத்திடும் சட்டமெலாம்
துணிவாக மீறி நடந்தனராம்.
அந்நியத் துணியைக் கொளுத்தினராம்.
அடக்கு முறையை எதிர்த்தினராம்.

சிறையிலே வாடினோர் எத்தனைபேர்!
செல்வம் இழந்தவர் எத்தனைபேர்!
அருமை உயிரையும் தேசத்துக்கே
அர்ப்பணம் செய்தவர் எத்தனைபேர்
அந்நியர் ஆட்சி நம்தேசத்திலே
அடியோ டொழிந்திட வேண்டுமென்றே
எண்ணினர் மக்கள் அனைவருமே
எதிர்த்துப் புரட்சிகள் செய்தனரே.

ஆகஸ்ட் புரட்சி எழுந்ததுவே.
அனைவரும் அதனில் குதித்தனரே.
வேகமாய்க் கூறினர் காந்திமகான்
'வெள்ளையனே வெளியேறு' என்றே.

'வெள்ளையனே வெளியேறு' என்றே
வீதிகள் எங்கும் முழங்கிடவே
பிள்ளைகளும் அதில் சேர்ந்தனரே!
பீதி அடைந்தனர் ஆட்சியினர்

சமரசம் பேசினர் வெள்ளையர்கள்
தலைவர்கள் யாவரும் ஒருமுகமாய்
'எமக்குச் சுதந்திரம் தந்தாலன்றி
எதையும் விரும்பிடோம்' என்றனரே.

இன்னும் அடக்கியே ஆளுவது
இயலாத காரியம் என்பதனை
நன்றாய் உணர்ந்தனர் வெள்ளையர்கள்.
'நாங்களே போகிறோம்' என்றனரே.

''இருநூறு ஆண்டுகள் ஆண்டுவிட்டோம்
இனியும் முடியாது'' என்றே அவர்
அருமைத் தலைவர்கள் கைகளிலே
ஆட்சிப் பொறுப்பையே ஒப்படைத்தார்.

மக்களுள் மாணிக்கம் நேருஜியும்
மதிநுட்பம் மிக்கநம் ராஜாஜியும்
பக்க பலமாக ராஜன்பாபு
பட்டேலுடன் பொறுப் பேற்றனராம்.

'அன்னை விலங்கு முறிந்தது!
அடிமை வாழ்வு அகன்றது!'
என்று எண்ணி நாமுமே
இன்று பெருமை அடைகிறோம்.

சாந்தப் போரின் சக்தியை
தருமப் போரின் வெற்றியை
காந்தி சொன்ன வழிகளில்
கண்டோம் நமது நாளிலே.

மக்க ளுக்கு மக்களால்
மக்கள் ஆளும் நாட்டிலே
தக்க முறையில் வாழுவோம்
தலைநி மிர்ந்து செல்லுவோம்.

ஆட்டம் ஆடி மகிழுவோம்
பாட்டுப் பாடி மகிழுவோம்
கூட்டம் கூட்ட மாகவே
கொடி வணக்கஞ் செய்குவோம்.

தேச நலனை எண்ணிஎண்ணிச்
சிறையிலே கழித்தவர்;
நேரத் தோடு உயிரைக்கூடத்
தியாகம் செய்து சென்றவர்;

பாசம் கொண்டு நாட்டுக்காகப்
பாடு பலவும் பட்டவர்
பலரையும் மனத்தில் வைத்துப்
பக்தியோடு போற்றுவோம்.

சுதந்தி ரத்தை வாங்கித்தந்த
தலைவர் வாழ்கவே!
துணைவ ராக நின்றுழைத்த
தொண்டர் வாழ்கவே!

விதம்வி தமாய்க் கஷ்டமுற்ற
மக்கள் வாழ்கவே!
விடுதலையைப் பெற்ற நாமும்
இனிது வாழ்கவே!



## இருமலின் மூலகாரணத்தை அகற்றுங்கள்




## ஸிரோலின் சாப்பிடுங்கள்

குடும்பத்தினர்
யாவருக்கும்
ஏற்ற
ஔஷதம்

ஸிரோலின் இருமலை நிறுத்து
வதோடு இருமலுக்குக் காரண
மான தீங்கிழைக்கும் கிருமி
களைக் கொல்லவும் செய்கிறது.



சுதந்திரத் திருநாளில்

வெற்றி முரசு கொட்டுவோம்
வீர வணக்கம் செய்குவோம்
எட்டுத் திசையும் கூடிநாம்
இந்தியத் தாயைப் போற்று
—வோம்

கட்டபொம்மன், ஜான்ஸிராணி
காந்தித் தாத்தா, நேதாஜி
பட்டேல் நேரு வ. உ. சி.
படங்கள் வைத்துப் போற்று
—வோம்

பிரங்கிக் குண்டுக் கஞ்சாமல்
பெரிதாய் உயிரை எண்ணாமல்
வீரம் கொண்டு போரிட்ட
தியாகிகளை நாம் வாழ்த்து
—வோம்

பிச்சைக் காரர் இல்லாமல்
பிறர் பொருளைத் திருடாமல்
கட்சிச் சண்டை காணாமல்
களித்து வாழ எண்ணுவோம்!

உலகில் அமைதி தோன்றிட
உண்மை அன்பு பரவிட
கலகக் காரர் திருந்திட
கடவுள் அருளை வேண்டு
வோம்!

ர. தங்கவேலன்



இப்போது தகதகக்கும் மணலின் கானல் அவன் கண்களைக் கூச வைக்கவில்லை. குளிரின் மேல் அவனும் பார்க்கவும் முடிந்தது. ஆகவே பாலைவனத்தில் இறங்கி



நடக்கலானான். நடந்து நடந்து ஓடலானான். ஓடி ஓடி ஒன்பது மைலைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னேறிக் கொண்டிருந்தான் காசிம்.



மூச்சு வாங்கிற்று. ஆனால் நின்று இளைப்பாறவும் பயப்பட்டான். ஏன்? இரவுக்குள் அந்த பயங்கரமான பாலைவனத்தைக் கடந்தாக வேண்டுமே. இல்லையானால் அதுகாலை சூரிய



ஒளியில் அவன் பொசுங்கிச் சாம்பலாக வேண்டியதுதான். ஆகவே நிற்காமல் வேகமாக ஓடினான். நடுநிசி வானத்திலே வெள்ளி வெளிப்படுவதற்கும் காசிமின் கால்கள் மணல்



பரப்பிலிருந்து உறுதியான பாறைகளை மிதிப்பதற்கும் சரியாக இருந்தது. இதற்கு மேல் ஓடியாக ஆகவும் கிளம்பினான். சோர்வில்லாமல் ஓடிய காசிம் நிழல் படர்ந்த ஒரு இடத்தைத் தேடிப்



படுத்துத் தூங்கலானான். இரவு வந்ததும் தான் கண் விழித்தான். உடலில் சோர்வு இருந்தாலும் உள்ளத்திலே தெம்பும் தெளிவும் ஏற்பட்டிருந்தன. (தொடரும்)



"என்ன ஸார்! நீங்கள் எப்போதும் வாயை மூடிண்டே யிருக்கேளே!"
"நகைக்கு வரி போட்டதிலிருந்து வாயைத் திறக்கப் பயமா யிருக்கு. நான் தங்கப் பல் கட்டிண்டிருக்கிறது அதிகாரிகள் கண்ணிலே பட்டுவிடக் கூடாது பாருங்கோ!"



"உங்களுக்கு ஜுரம்னு கேள்விப் பட்டு, பார்க்க ஓடிவந்தேன்! ஆமாம்! என்றையிலிருந்து இதுமாதிரி ஜுரம் இருக்கு?..."
"போன மாசம் சபாவிலே உங்க கச்சேரி கேட்டுவிட்டு வந்தேன்... அன்று படுத்தவன்தான்...!"

# ஹாஸ்ய வெடிகள்



டாக்டர்: (மருந்துச் சீட்டை நீட்டி) இந்தா! இதை மூன்று வேளை சாப்பிடு!
நோயாளி: என்னங்க? கடுதாசைக் கொடுத்து என்னைச் சாப்பிடச் சொல்றீங்க?......



"பெண்களுக்குச் சம உரிமை கொடுக்கவேணும் என்கிறதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீரா?"
"ஓ! நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என் மனைவி அதை ஒப்புக் கொள்ள வேணுமே?"

சிவோ
















## 20. இரண்டு தலை ராட்சதன்!

திருட்டுக் குற்றங்கள் செய்தவர்களை அழைத்துச் செல்வது போல நான்கு ஐந்து அரண்மனைச் சேவகர்கள் மால் கோஷையும், கலாவையும் சூழ்ந்து கொண்டபடியே பிரத்தியேகமாக அமைக்கப் பட்டிருந்த சிறைக்குக்கொண்டுபோனார்கள்.

''இந்த அறைக்குள் இருங்கள். நீங்கள் இந்த அறையிலிருந்து தப்பமுடியாதபடி வாசற் கதவு தாளிடப்படும். இரண்டு சேவகர்கள் இரவும், பகலுமாக உங்களைக் காவல் காத்துக் கொண்டிருப்பார்கள். இந்தச் சிறையைச் சுற்றித் தண்ணீர் நிரம்பிய குளம் இருக்கிறது. அதில் நிறைய முதலைகள் இருக்கின்றன. அதனால் நீங்கள் குதித்துத் தப்பமுடியாது. இப்படியே உட் கார்ந்து கொண்டு காலம் கழிக்கலாம் என்று நினைக்காதீர்கள். அரசன் உங்க ளுக்குத் தகுந்தபடி வேலை கொடுக்க ஏற் பாடு செய்திருக்கிறார். நாளை முதற்கொண்டு நீங்கள் கடுமையான வேலைகளைச் செய்ய வேண்டி இருக்கும். தயாராக இருங்கள்'' என்று சேவகர்கள் சொல்லி விட்டுப் போனார்கள். அவர்கள் இருந்த அறையின் பெரிய கதவு 'தடார்'என்று சாத்தப்பட்டது. இரண்டு காவல்காரர்கள் சிறையின் வாசற் பக்கம் காவல் புரிந்துகொண்டிருந்தார்கள்.

சிறையின் உள்ளே இருந்த மால் கோஷும், கலாவும் தங்களுக்கு எதிர் பாராமல் நேர்ந்த கதியை எண்ணி வருந்தி னார்கள். ''என்ன செய்வது? 'நாம் ஒன்று நினைக்கத்தெய்வம் ஒன்றுநினைக்கும்'என்ற பழமொழி நம்மைப் பொறுத்த வரையில் மிகவும் சரியாக இருக்கிறது. நாம் நல்ல எண்ணத்துடன் பொம்மைப் பட்டணத்தை உயிருள்ள பட்டணமாக்கியதற்குச் சிறை வாசம் கிட்டியது'' என்றாள் கலா.

''ஆமாம், கலா! நீ சொல்லுவது உண் மையே. பொம்மைப் பட்டணத்துக்கு நமது



பந்தின் மூலம் உயிர் கொடுக்கும்பொழுது பொம்மையின் உடைந்திருந்த பாகங்களையும் சரி செய்திருக்கலாம். ஆனால் அப்பொழுது இப்படியெல்லாம் வரும் என்று யார் நினைத்தார்கள்? அந்த மாயப்பந்து இப்பொழுது இருந்தால் பொம்மைப் பட்டணத்துக்குக் கொடுத்த உயிரைத் திரும்பி வாங்கி இருக்கலாம். ஆனால் நம்முடைய விலை மதிப்பில்லாத பொருள்களும் போய், நாம் சிறையில் அடைபட்டு இருக்க வேண்டும் என்று நம் விதி இருக்கும்போது நாம் அதை எப்படி மாற்ற முடியும்? நாம் ஆயுள் காலம் வரையில் சிறையில் இருந்து தவிக்க வேண்டியது தான். இதிலிருந்து தப்ப வழியே இல்லை'' என்றான் மால்கோஷ்.

உடனே கலா, ''அண்ணா! அரசகுமாரி எவ்வளவு நல்லவள் பார்த்தாயா! அவளது அழகிய கை ஒடிந்து போயிருந்தாலும்கூட நமக்குக் கிடைத்திருக்க வேண்டிய மரண தண்டனையை மாற்றினவள் அவள் தானே!'' என்றாள்.

அப்பொழுது அவர்கள் இருந்த சிறையின் கதவு திறக்கப்பட்டது. கலாவைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே அரசகுமாரி உள்ளே நுழைந்தாள். கலாவும் மால்கோஷும் தங்கள் மரியாதையைத் தெரிவிக்கும் பொருட்டு எழுந்து நின்றார்கள். ''முன்பின் தெரியாத எங்களை மரணதண்டனையிலிருந்து காப்பாற்றினீர்களே, அதற்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்'' என்றான் மால்கோஷ்.

உடனே ராஜகுமாரி, ''நான் முதலில் உங்கள் இருவரையும் பார்க்கவில்லை. மாடியிலிருந்து உங்களை மறைவாகப் பார்த்தவுடன் உங்கள்மீது என்னை அறியாமலே அன்பு ஏற்பட்டது. அதனால்தான் சமயத்தில் உங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று அரண்மனையில் ராஜசபை நடந்து கொண்டிருந்தபோது ஓடி வந்தேன். உங்கள் இருவருக்கும் கைகளில் விலங்குகள் போட உத்தரவு கொடுத்திருந்தார் அரசர். உங்களுக்காக நான் மன்றாடி அந்த உத்தரவை மாற்றினேன்'' என்றாள்.

அதைக்கேட்ட மால்கோஷ் சிரித்துக்கொண்டே, ''உங்கள் தகப்பனார் மிகவும் மூர்க்க குணம் படைத்தவராகவே காணப்படுகிறார். ஆனால் அவர் பொம்மையாக இருந்தபோது அவரது முகத்

தில் மூர்க்க குணத்துக்குப் பதிலாகச் சாந்த குணம்தான் தென்பட்டது'' என்றான்.

உடனே அரசகுமாரி, '' அவர் பொம்மையாக இருந்ததைப் பற்றி இப்பொழுது ஞாபகமூட்டாதீர்கள். அது உண்மையாக இருந்தாலும் எனக்கு அதைக் கேட்கப் பிடிக்க வில்லை. உங்களுக்கு என் தகப்பனார் இப்பொழுது இட்டிருக்கும் தண்டனை சற்றுக் கடுமையானதுதான். ஆனால் நீங்கள் உங்கள் வாழ்நாள் முழுவதும் இங்கே இருக்க வேண்டி வருமே என்றுதான் நான் மிகவும் வருத்தப்படுகிறேன். ஒரு வேளை நீங்கள் நன்றாக நல்ல பெயருடன் நடந்து கொண்டீர்களேயானால் உங்களுக்குக் கட்டாயம் ஏதாவது சலுகை காட்டுவார் !'' என்று கூறி விட்டு அரண்மனைக்குப் புறப்பட்டாள்.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை மாயப்பட்டணமே அல்லோல கல்லோலப்பட்டது. இரண்டு தலை ராட்சதன் வருகிறான் என்று எங்கே பார்த்தாலும் எல்லோரும் கூச்சலிட்டார்கள். யாவரும் ஓடித் தங்கள் வீட்டில் ஒளிந்து கொண்டார்கள். பள்ளிக்கூடங்களெல்லாம் மூடப்பட்டன. இரண்டு தலை ராட்சதன் சாதாரணமாக வரவில்லை. இரண்டு வாய்களாலேயும் ஒரே சமயத்தில் பெரிய சத்தத்துடன் பேசிக் கொண்டு பயங்கரத் தோற்றத்துடன் ஒவ்வொரு வீதியிலும் வந்து கொண்டிருந்தான். பிறகு மிகுந்த கோபத்துடன் அரண்மனையை நோக்கிக் கர்ஜனை செய்து கொண்டே வந்து கொண்டிருந்தான். அதைப் பார்த்த அரசன் பயந்து நடுங்கிய வண்ணமாக அரண்மனை வாசலை மூடச் செய்தான். அரசன் அரச குமாரியைக் கூப்பிட்டு, ''இந்த இரண்டு தலை ராட்சதனுக்கும் உயிர்கொடுத்தவர்கள் மால்கோஷும் கலாவும்தானே ? அவர்களுக்குக் கடுந் தண்டனை விதிக்காதபடி என்னைத் தடுத்தாய். இப்பொழுது என் உயிருக்கே அல்லவா ஆபத்து வந்திருக்கிறது?'' என்று கவலைப்பட்டான்.

ஆனால் இரண்டு தலை ராட்சதன் அரண்மனை உள்ளே புகுவதற்கு முயற்சி செய்யவில்லை. அதற்குப் பதிலாகக் கோபத்தினால் தன் முழு பலத்துடன் அரண்மனை மதில் சுவருக்கும் கட்டடத்துக்கும் சேதம் விளைவித்து விட்டுச் சென்றான்.

இரண்டு தலை ராட்சதன் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் ராஜகுமாரி சிறைச் சாலைக்குள் வந்தாள். ''உங்களது மூடத்தனமான செய்கையினால் எனது தகப்பனார் இரண்டு தலை ராட்சதனுக்குப் பயந்து கதி கலங்கி நிற்கிறார். நீங்கள் செய்த செய்கையினால் இரண்டு தலை ராட்சதன் உயிர் பெற்று அரண்மனைக்கு மிகுந்த சேதம் விளைவித்து விட்டுப் போய் விட்டான். நீங்கள் செய்த அநீதி இப்பொழுதாவது உங்களுக்கு விளங்குகிறதா ? ராட்சதன் வந்த சமயத்தில் இந்தச் சிறைக்குக் காவல் புரிந்தவர்கள்கூட பயந்து ஓடிவிட்டார்கள். அவரவர்களுக்கு உயிர்தானே முக்கியம். இனிமேல் தினந்தோறும் அந்த ராட்சதனால் என்ன தீமைகள் வரப்போகின்றனவோ, யாருக்குத் தெரியும் !'' என்று அரசகுமாரி சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது நான்கு அரண்மனைச் சேவகர்கள் சிறைச்சாலைக்குள் வந்தார்கள். உடனே அரசகுமாரி வெளியே சென்றாள்.

வந்த சிப்பந்திகள் மால்கோஷையும் கலாவையும் பார்த்து, '' நாளைக் காலை நீங்கள் இருவரும், ராட்சதனால் அரண்மனைக் கருகில் நாலாபக்கமும் வாரி இறைக்கப் பட்டிருக்கும் கற்களைப் பொறுக்க வேண்டும். சேதமடைந்த சுவரையும் செப்பனிட வேண்டும்'' என்று கூறிப் போனார்கள்.

பல நாட்களுக்கு மால்கோஷுக்கும் கலாவுக்கும் சரியான வேலை. இரண்டு தலை ராட்சதன் ஒரு மணி நேரத்தில் செய்த நாசவேலையைச் சரிப்படுத்துவதற்கு இருவருக்கும் பல நாட்கள் பிடித்தன.

மால்கோஷுக்குச் சிறைவாசம் பிடிக்கவே இல்லை. அதுவும் அல்லாமல் தன்னுடன் கூடத் தனது அருமைச் சகோதரியும் வேலை செய்து வருவதை நினைத்து வருந்தினான். அவன் மனத்தில் அந்த இடத்திலிருந்து எப்படித் தப்புவது என்ற யோசனை தான் குடிகொண்டிருந்தது. (தொடரும்)

*பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் ஒருவர் பகதூர் ஷாவைக் கேலி செய்வதற்காக அவருடைய மகனின் தலையை வெட்டி ஒரு தட்டில் வைத்துக் கொண்டு வந்து அவர் முன் வைத்தார். அப்பொழுது பகதூர்ஷா அதைக் கண்டு புன்னகைபுரிந்தார். பிறகு அவருடைய தோழர்கள் அவர் புன்னகைபுரிந்ததின் காரணத்தை வினவினார்கள். 'எனக்கு வருத்தம் உண்டாக்கவே அப்படிச் செய்தான். நான் வருத்தத்தைக் காட்டினால் அவன் எண்ணம் கைகூடி விடுமல்லவா ?' என்று பகதூர்ஷா பதிலுரைத்தார்.*

*ஆதலால் தனிச் சிறையில் வைத்தாலும் நான் முழுவதும் அடைத்தாலும் அதிக பயமதையில் எர்தவிதமான இன்னல்களை இழைத்தாலும் நாம் அவற்றை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வோமானால் அவர்கள் எண்ணம் கைகூடாது. தோல்வி அடைவார்கள்.*

— ராஜாஜி, சிறையில் தவம்
8 — 1 — 22

★

# எமது வியாபாரம் பெற்ற பேறு தங்கமான மனிதர்களின் ஆதரவே...

இத்தகைய தங்கமான மனிதர்களிடம்—ஆம், உங்களிடம் எமக்கு இதயபூர்வமான பற்றுதல் உண்டு. நீங்கள் எதை விரும்புகிறீர்கள், எதை விரும்புவதில்லை, வாங்குவதன் காரணம் என்ன — அல்லது, வாங்காத காரணம் என்ன என்பனவற்றை அறிந்து கொள்ளும் நோக்கத்தோடு எமது மார்க்கெட் ரிஸர்ச் இலாகா தீவிரமாக முனைந்திருக்கிறது.

எமது பேட்டியாளர்களின் குழுக்கள் நாடெங்கும் சுற்றுப்பிரயாணம் செய்கின்றன. ஆங்காங்கு நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள குடும்பங்களைப் பேட்டி காண்கின்றன; பெருகிவரும் உங்கள் தேவைகளையும் மாறிவரும் உங்கள் ரசனையையும் குறித்துக் கொள்கின்றன. ஏற்கனவே எமது சரக்குகள் பற்பலவும் உங்கள் குடும்ப நண்பர்களாக ஆகியிருக்கக்கூடும்; எமது பேட்டியாளர்கள் தொகுத்து வரும் புள்ளிவிவரப் படங்களிலும் அறிக்கைகளிலும் ஏற்கனவே நீங்கள் இடம் பெற்றுவருகிறீர்கள். புள்ளிவிவர ஏடுகள் ஒருபுறமிருக்கட்டும். எங்களுக்கு அவற்றைவிட முக்கியம், பன்மடங்கு முக்கியம் நீங்களல்லவா? எவ்வித சிரமத்தையும் பொருட்படுத்தாமல் உங்கள் தேவைக்கேற்ற சேவை செய்வதே குறிக்கோளாக, தரத்தில் உயர்ந்த சரக்குகளையே தவறாமல் வழங்கி, நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு உன்னதமான முறையில் ஈடுசெய்ய என்றென்றும் பாடுபடுவோம்.

குடும்பந்தோறும் தழைத்தோங்க
ஊழியம் புரிவது

**ஹிந்துஸ்தான் லீவர்**



HLL 4-X29 TM

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 7

## இதென்ன விந்தை?

அருந்திகைக்கும் பராந்தகனுக்கும் சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது.

"நீங்கள் ஒரு கவிஞராகும் அபாயத்திலிருந்து உங்களையும் உலகத்தையும் மீட்க நான் எதையும் தியாகம் செய்யத் தயாராய் இருக்கிறேன். போகட்டும், வீணாக விளையாடாதீர்கள். நாம் பேசிக் கொண்டிருந்த விஷயம் வேறு. அதை விட்டு இப்படி ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் நீங்கள் ஏதாவது பேசி மழுப்பப் பார்க்காதீர்கள். புலிப்பள்ளியார் சுதமதியிடம் என்ன சொன்னார்? எனக்கு முழு விவரமும் வேண்டும். சாதாரண விஷயத்துக்கே இப்படி ஒரு பெண் மயக்கம் போட்டு விழ நேர்ந்தால், அது கடுமையானதாக இருந்தால் இன்னும் என்ன நேர்ந்திருக்குமோ..?" என்றாள் அருந்திகை.

"அது உண்மை. சுதமதி இவ்வளவு பலஹீனமாய் இருப்பாள் என்று நான் நினைக்கவில்லை. வீண் மிரட்டலுக்கெல்லாம் இப்படிப் பயந்தால்..?"

"உண்மையில் புலிப்பள்ளியாரின் வார்த்தைகள் வீண் மிரட்டலாக இருக்காது. வீண் மிரட்டலுக்கெல்லாம் தன் சகோதரி பயப்படக் கூடியவளல்ல என்று வைகைமாலை சொல்கிறாள். புலிப்பள்ளியார் அவள் இதயத்தையே குலைக்கும் வண்ணம் ஏதோ கடுமையான வார்த்தைகள் சொல்லி இருக்க வேண்டும் என்றுதான் வைகைமாலை நினைக்கிறாள். சுதமதியும் வைகைமாலையிடம் எதையோ சொல்லப் பயப்படுகிறாள் என்று நன்றாகத் தெரிகிறது..."

"பயப்படலாம். ஆனால் சுதமதிதான் புலிப்பள்ளியார் என்ன சொன்னார் என்பதைச் சொல்லி விட்டாளே. நடந்தது அவ்வளவுதான். ஆனால் அந்த வார்த்தைகளையே புலிப்பள்ளியாரின் வாக்கிலிருந்து கேட்டிருந்தால் இன்னும் கொஞ்சம் பயங்கரமாய் இருந்திருக்கும். அவ்வளவுதான். அதிருக்கட்டும். நீ நெற்றியில் இட்டுக் கொண்டிருக்கும் திலகம் இருக்கிறதே, அது இரண்டு வளைந்த புருவங்களிடையே பிரகாசிப்பது இரண்டு வில்லிலிருந்து கிளம்பிய ஒரு அம்புபோல் தோன்றுகிறது. ஆனால் எப்படி இரண்டு வில்லிலிருந்து ஒரு அம்பு கிளம்பும் என்பதுதான் விநோதமாயிருக்கிறது. இமையென்ற நாண் கயிற்றிலிருந்து புறப்பட்ட அந்த அம்பு வேறு எதையோ குறியாகக் கொண்டதாக இருந்தாலும் என் இதயத்தை நோக்கிப் பாய்வது போல இருக்கிறது" என்றான் பராந்தகன்.

கி. ரா. கோபாலன்



''நிம்மதியாகவும் சந்தோஷமாகவும் பேசவேண்டுமென்பதுதான் என் விருப்பமும். ஆனால் புலிப்பள்ளியார் சுதமதியிடம் என்ன சொன்னார் என்று தெரிந்து கொள்ளாத வரையில் என் மனத்தில் நிம்மதியே ஏற்படாது. ஏன் என்னிடம் சொல்வதற்குக் கூடவா உங்களுக்குப் பயம்?'' என்றாள் அருந்திகை.

''உன்னிடம் சொல்லலாம். ஆனால் அதனால் உன் மனத்தில் நிம்மதி ஏற்பட்டுவிடாது. குழப்பமும் கவலையும் தான் அதிகரிக்கும்.''

''அப்படிப்பட்ட விஷயமா அது?''

''உங்களைப்போன்ற பெண்களுக்கெல்லாம் கொஞ்சம் மன அதிர்ச்சியைக் கொடுக்கக் கூடிய விஷயம்தான். வைகை மாலையின் காதலரைப் பற்றி உனக்குத் தெரியுமா?'' என்றான் பராந்தகன்.



''மறுபடியும் கவிதா ரசனையில் இறங்கி விட்டீர்களா? இதென்ன விபரீதம்? நான் போகிறேன்..'' என்று சொல்லிச் சிறிது கோபம் கொண்டவள் போல் கிளம்பினாள் அருந்திகைப் பிராட்டி.

''அடாடா! அதற்குள் இவ்வளவு கோபமா? இதோ நான் உன்னை வர்ணிப்பதை விட்டு விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு, அவளுடைய மெல்லிய கரத்தைத் தொட்டு இழுத்து நிறுத்தினான் பராந்தகன்.

''நீங்கள் புலிப்பள்ளியார் சுதமதியிடம் என்ன சொன்னார் என்ற உண்மையை என்னிடம் சொல்லப் போகிறீர்களா இல்லையா?'' என்றாள் அருந்திகை சிறிது கோபத்துடன்.

''நீ கேட்டதற்குத்தான் முடிவாகப் பதில் சொல்லி விட்டேனே? வீணாக அதைக் கேட்டுக் குழப்பாதே. உன்னோடு கொஞ்சம் நிம்மதியாகவும் சந்தோஷமாகவும் பேசலாமென்று இங்கே வந்தால்....'' என்று இழுத்தான்.

''தெரியும். பெரிய நாஸ்திகவாதியாக விளங்கும் பூதுகர்தான் அவளது காதலர் என்று என்னிடம் சொல்லியிருக்கிறாள்.''

''ஆம்? அந்தப் பூதுகர் கலங்கமாலலரையரின் கையில் சிக்கி இருப்பதாகவும், கலங்கமாலலரையர் இவ்வளவு நேரம் அவரை உயிருடன் வைத்திருப்பதே சந்தேகம் என்றும் புலிப்பள்ளியார் சொல்லிச்சுதமதியின் இருதயத்தில் ஒரு பெரிய அதிர்ச்சியை ஏற்படுத்தி விட்டார்.''

''அப்படியா? அதனால்தான் சுதமதி அப்படி மூர்ச்சையுற்று விழுந்திருக்கிறாளா? இதை வைகை மாலை கேட்டால் நிச்சயம் அவளுடைய நிலையும் கேவலமாகிவிடும்'' என்றாள் அருந்திகை அச்சத்தோடு.

''இதனால்தான் இந்த ரகசியத்தைச் சொல்லாமல் வைத்திருந்தேன். நீயும் இதை வைகை மாலையிடம் சொல்லாமல் இருப்பதுதான் நல்லது. பூதுகருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்பட்டிருக்குமென்று நானும் அருள்மொழியாரும் நம்பவில்லை. நம்முடைய ஏவலாளர்கள் எங்கும் இருக்கிறார்கள். இருக்கட்டும். வைகைமாலை உன்னிடம் ஏதேனும் சொன்னாளா?'' என்று கேட்டான் பராந்தகன்.

''அவள் மூலமாக எனக்கொரு ரகசியம் விளங்கியது. நந்திபுர நகரிலுள்ள இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனி அவருடைய மகளல்ல; சிறந்த நாட்டியக்காரியாக விளங்கிய அலையூர் கக்கை என்பவளின் பேத்தியாகிய மாலவல்லிதான் என்பதைத் தெரிந்து கொண்டேன்.''

''அப்படியா? அவளை ஏன் அங்கு கொண்டு வந்து வைத்திருக்கிறாள்? இதில் ஏதோ காரணம் இருக்கவேண்டும். அவளைக் காவிரிப்பூம் பட்டினத்து புத்த விகாரத்திலிருந்து கடத்திக் கொண்டு வரச் சூழ்ச்சி செய்தவர் கலங்கமாலரையர் என்று தெரிகிறது. அதோடுமட்டுமல்ல; அவளைப் புலிப்பள்ளியாரின் மகன் கோளாந்தகனுக்கு வேறு மணம் முடித்து வைக்க நினைக்கிறார்கள். அது இருக்கட்டும். வைகைமாலை மாலவல்லியைப் பற்றி வேறு ஏதேனும் சொன்னாளா?'' என்றான் பராந்தகன்.

''அவள் வேறு எதுவும் சொல்லவில்லை. அவள் தனக்குத் தெரிந்தவள் என்று மட்டும்தான் சொன்னாள்.''

''மாலவல்லியைப் பற்றி அவளுக்கு இன்னும் ஏதாவது தெரிந்திருக்கும். அதை மெதுவாகக் கேட்டுத் தெரிந்து கொள். அவளிடம் பூதுகரைப் பற்றிச் சொல்லி மனத்தைக் கிளறி விட்டு விடாதே. சுதமதியின் மன நிலையை எண்ணி இன்று மாலை வைத்திருந்த நாட்டியக் கேளிக்கைகளை யெல்லாம் கூட நிறுத்தி விட்டோம்.''

''நான் அவளிடம் அப்படியெல்லாம் எதுவும் சொல்லிவிட மாட்டேன். எனக்குத் தெரியாதா? புலிப்பள்ளியார் சுதமதியிடம் என்ன சொன்னார் என்பதை அவள் அறிந்து கொள்ள வேண்டும் என்றே துடியாக இருக்கிறாள். இருந்தாலும் நான் அவளுக்கு ஏதேனும் சமாதானம் சொல்லிக் கொள்கிறேன். பூதுகர் விஷயத்தில் நீங்கள் கொஞ்சம் கவலை செலுத்துங்கள். பூதுகருக்கு ஆபத்து ஏற்பட்டிருக்கிறது என்கிற செய்தி சுதமதியின் வாயால் வராமல் இருந்தால் நல்லதுதான். அவளுக்குத் தன் தங்கையின் நலனைப் பற்றிக் கவலை இருக்காதா? அவள் சொல்லமாட்டாள் என்றுதான் நினைக்கிறேன். நான் நாளை புறப்பட்டுப் பழையாறை செல்கிறேன். என்னோடு வைகைமாலையையும் சுதமதியையும் அழைத்துக் கொண்டு செல்கிறேன். வைகைமாலை இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனியைப் பார்க்கும் வண்ணம் ஏதேனும் ஏற்பாடு செய்கிறேன். வைகைமாலை அவளைப் பார்த்து விட்டால் அவள்தான் மாலவல்லியா இல்லையா என்பது விளங்கி விடும் அல்லவா?'' என்றாள் அருந்திகை.

பராந்தகன் சிறிது பதற்றம் அடைந்தவனாக, ''அதற்குள் அவசரப்படாதே. வைகைமாலையிடமிருந்து மாலவல்லியைப் பற்றி இன்னும் ஏதேனும் விவரங்கள் கேட்டுத் தெரிந்து கொண்டபின் அதற்குத் தகுந்த வண்ணம் காரியங்கள் செய்ய வேண்டும். நான் இவ்விடத்திலிருந்து புலிப்பள்ளியாருக்குச் சரியான பாடம் கற்பித்து அனுப்பப் போகிறேன். அதோடு அவரிடமிருந்து பூதுகனைப் பற்றிய இன்னும் சில ரகசியங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பது என் ஆவல். நானும் அருண்மொழியாரும் அதை எப்படியாவது தெரிந்துகொள்ள முயற்சி செய்கிறோம்'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது மிகவும் பதற்றத்தோடும் வேகத்தோடும் விஜயன் அங்கே வந்து நின்றான்.

அப்பொழுது அவன் இருந்த கோலம் பராந்தகனுக்குச் சிறிது வியப்பை அளிக்கக்கூடியதாக இருந்தது. அருந்திகைப் பிராட்டியும் விஜயனின் நிலை கண்டு திகைப்புற்றவளாய் நின்றாள். விஜயன் கையேந்திய வாளுடன் நின்றான். அவ்வாளில் படிந்திருந்த ரத்தக்கறை காயாமல் இருந்தது. அவன் மார்பில் ஒரு சிறு காயம்பட்டு அதிலிருந்து உதிரம் வழிந்து கொண்டிருந்தது. இந்நிலையில் அவனைக் கண்ட பராந்தகன் பரபரப்போடு அவனை நெருங்கி அவன் தோளில் கையை வைத்து, ''இதென்ன கோலம்? யாரோடு இப்பொழுது போரிட்டுவிட்டு வருகிறாய்?'' என்றான்.

''ஒன்றுமில்லை. பெரிய போரல்ல. சாதாரணச் சண்டைதான். எதிரிகளின் சூழ்ச்சி அளவுக்கு மீறி விட்டது. புலிப்பள்ளியாரை இன்னமும் இங்கே விட்டு வைத்திருப்பது பிசகு. அவரோடு வந்த நான்கு உளவாளிகளின் கைகளையும் கால்களையும் பதம் பார்த்த என் வாள் புலிப்பள்ளியார் எங்கே என்று தேடிக் கொண்டிருக்கிறது....'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது அருந்திகைப் பிராட்டி அவன் மார்பிலிருந்து கசிந்து கொண்டிருந்த உதிரத்தைத் தன் மேல் ஆடையால் துடைத்தாள்.

பராந்தகன் என்ன நடந்திருக்கும் என்பதை ஒருவிதமாக ஊகித்துக் கொண்டவனாக, ''எனக்குத் தெரியும். பெண் கேட்க வந்திருப்பவர் போல் வந்திருக்கும் புலிப்பள்ளியார் வேறு ஏதோ கருத்துடன்தான் இங்கே வந்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். இந்தக் கொடும்பாளூர் கோட்டையின் மீது எல்லோருக்கும் ஒரு கண். அதனுடைய

மர்மங்களை அறிந்துகொள்ள வேண்டும் என்பதில்தான் எதிராளிகளுக்கு மிகுந்த கவலை. நீ அந்த வஞ்சகர்களை யெல்லாம் எங்கே கண்டாய்? பாவிகள்! உன் கண்ணிலா அவர்கள் அகப்படவேண்டும்? இன்று காலையிலிருந்து உன் உடைவாளுக்குச் சரியான வேலைதான்போலிருக்கிறது'' என்றான்.

''நீங்கள் காலையில் சோலையிலிருந்து கிளம்பிய பொழுது கோட்டைப் பாதுகாப்பாளரை எச்சரிக்கை செய்துவிட்டு வந்தீர்கள். இருப்பினும் எனக்கு அது போதுமென்று படவில்லை. உண்மையாகவே புலிப்பள்ளியார் இக் கொடும்பாளூர்க் கோட்டையின் ரகசியங்களை அறிந்து கொண்டு போகத்தான் வந்திருப்பார் என்று எனக்குத் தோன்றியது. அவர் மாத்திரமல்ல; அவரோடு இன்னும் சிலரும் வந்திருக்க வேண்டுமென்று நான் கருதினேன். அவர் உங்களோடு அரண்மனையில் பேசிக் கொண்டிருக்கும் பொழுது மற்றவர்கள் கோட்டை ரகசியங்களைத் தெரிந்து கொள்ள முற்படலாம் என்று தோன்றியது. கோட்டையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வருவது நல்லது என்று எனக்குப் பட்டது. மேற்குக் கோட்டை வாசலில் நான்கு பேர்கள் கோட்டைக் காவலர்களோடு ஏதோ பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். அவர்கள் உடையிலிருந்து அவர்கள் அன்னியர்கள் என்பது நன்கு விளங்கியது...'' என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டான்.

''சரிதான். அவர்கள் தஞ்சையிலிருந்து வந்த உளவாளிகள் என்று தெரிந்து கொண்டு உடனே அவர்கள் மீது பாய்ந்து சண்டை போடத் துவங்கி இருப்பாய் நீ...'' என்றான் பராந்தகன்.

இதைக் கேட்டதும் அருந்திகை சிறிது கோபம் கொண்டவளாக, ''விஜயனை அவ்வளவு அவசர புத்தியுள்ளவனாக நினைத்து விடாதீர்கள். அவன் சொல்வதை முழுவதும் கேட்பதற்கு முன்னால் நீங்களாக ஒரு முடிவுக்கு வருவது உங்கள் அவசர புத்தியைத்தான் காட்டுகிறது'' என்று கூறினாள்.

''முழுக் கதையும் நான் கேட்கத் தயார். எதிராளியைக் கண்ணால் கண்டபின் ஒரு விநாடிகூட விஜயன் பொறுத்தாலும் அவன் கைவாள் பொறுத்திருக்காதே என்ற காரணத்தால் அப்படிச் சொன்னேன்!'' என்றான் பராந்தகன்.

பராந்தகன் அலட்சியமாகச் சிரித்து விட்டு. ''நீ இவ்வளவு எச்சரிக்கையாக இருந்து காரியங்களை முடித்தவரையில் சந்தோஷம்தான். இதைப்போலப் புலிப் பள்ளியாரையும் செய்துவிட அதிக நேரமாகி விடாது. கொஞ்சம் பதற்றத்தை அடக்கிக் கொள். அவசரப் படாதே. இந் நகருக்குள் அவர் வந்து விட்டார். இந்நகரிலிருந்து நல்ல முறையில் அவர் மீண்டு செல்வது சிரமம்தான். உடனே உன் உடை வாளில் தோய்ந்திருக்கும் ரத்தத்தைக் கழுவி அதை உறையிலிட்டுக் கொண்டு அண்ணாவின் ஆலோசனை மண்டபத்துக்கு வா. வேறு அரசாங்கத்திலிருந்து நமது நகருக்கு விருந்தினராக வந்திருப்பவர்களுக்கு நல்ல விருந்து தயாராகி இருக்கிறது. எல்லோரும் கூடி இருந்து உண்போம். அவ் விருந்தினர்கள் நன்றாக உண்டு திருப்தி அடைந்தபின் நம் விசாரணையை வைத்துக் கொள்வோம். நம்மைப் போன்ற சுத்த வீரர்கள் விருந்தினராக வந்திருக்கும் ஒருவரிடம் அவர் வஞ்சக நெஞ்சம் படைத்தவராயினும் இவ்விடத்தே மன்னித்துப் போர்முகத்தில் சந்திப்பதுதான் சிறந்ததாகும். இப்பொழுது அவருக்கு நல்ல புத்தியைக்



கற்பித்து அனுப்பி விடுவதுதான் நல்லது'' என்றான்.

விஜயன் தன் பதற்றத்தைச் சிறிது அடக்கிக்கொண்டு, ''சரி! இதோ நான் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட யத்தனித்தபோது, அருந்திகைப்பிராட்டி அவன் மார்பிலிருந்து கசிந்து கொண்டிருந்த ரத்தத்தை மறுபடியும் துடைத்தாள். அவனுடைய மேல் அங்கி முழுவதும் ரத்தக் கறை படிந்ததாக இருந்தது.

விஜயன் சிரித்துக் கொண்டே, ''இப்படி இந்த உடலில் எவ்வளவு காயங்கள் படப்போகின்றனவோ? ஆனால் அப்பொழுதெல்லாம் அந்தக் காயங்களிலிருந்து கசியும் உதிரத்தைத் துடைப்பதற்கு உன்னைப்போல் பித்துக் கொண்டவர்கள் ஒருவரும் இருக்கமாட்டார்கள்

என்று தான் நினைக்கிறேன்'' என்று சொல்லி விட்டு வேகமாகச் சென்றான்.

விஜயனின் வார்த்தைகள் அருந்திகையின் மனத்தில் சுருக்கெனப் பாய்ந்தன. அவள் வெட்கமடைந்தவளாகத் தலை குனிந்து பதில் பேசாமல் நின்றாள்.

பராந்தகன் சிரித்துக் கொண்டே, ''உன் சகோதரனின் வீர நெஞ்சம் அப்படி இருக்கிறது. அவன் மார்பில் சிறு காயம் பட்டு உதிரம் கசிவதுகூட உனக்குத் தாளவில்லை. சாதாரணமாகப் பெண்கள் உள்ளமே கொஞ்சம் குறைவானதுதான். விஜயன் சொல்லிய வார்த்தைகளுக்காக நீ வெட்கப்பட வேண்டிய அவசியமே இல்லை. அவன் மார்பில் பட்ட சிறு காயத்துக்கு நீ அனுதாபப்பட்டதினால் நீ வீரர் குலத்துதித்த பெண்ணல்ல என்று அர்த்தமல்ல. சரி! நீ போய் வைகைமாலையையும் சுதமதியையும் பார்த்துக் கொள்.



நான் சொல்லியவைகளை மறந்துபோய் விடாதே. ஜாக்கிரதை!'' என்றான்.

அருந்திகை சிறிது மனச் சமாதானமடைந்தவளாக, ''சரி! நீங்களும் கொஞ்சம் பூதுகர் விஷயமாகக் கவலை செலுத்த மறந்து விடாதீர்கள்'' என்று சொல்லி விட்டுச் சென்றாள்.

பராந்தகன் ஒரு பெருமூச்சு விட்ட வண்ணம் தனக்குள் சிரித்துக் கொண்டே அரண்மனை ஆலோசனை மண்டபத்தை நோக்கிச் சென்றான்.

ஆலோசனை மண்டபத்தில் ஆதித்தனும் அருண்மொழியாரும் புலிப்பள்ளியாருடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். பராந்தகன் அங்கு வந்தபோது புலிப்பள்ளியார் ஏதோ கோபத்தோடும் மன வருத்தத்தோடும் இருப்பவர்போல் தோன்றினார். அவன் மிகவும் அனுதாபமும் அன்பும் கொண்டவன்போல் அவரை நெருங்கி, ''விருந்து தயாராகி விட்டதாக நினைக்கிறேன். பசி நேரத்தில் உங்களோடு பேசிக் கொண்டிருந்தால் அடிக்கடி உங்கள் கோபத்துக்கு இலக்காகத்தான் நேரிடும்...'' என்றான்.

இதைக் கேட்டதும் புலிப்பள்ளியார் ஆசனத்திலிருந்து துள்ளிக் குதித்து, ''நான் அவ்வளவு கோபக்காரனா...?'' என்று கூறினார்.

''நீங்கள் கோபக்காரரில்லை. கொஞ்சம் ஆத்திரக்காரர். சில சமயம் உங்கள் ஆத்திரம் கோபமாக மாறி விடுகிறது. அவ்வளவுதான்'' என்றான் பராந்தகன்.

''இப்படி அடிக்கடி கோபப்படுகிறவர்களோடு பழகுவது கடினமல்ல. பழகப் பழக அவர்களுடைய கோபம் நமக்குச் சகஜமாகி விடும். தஞ்சை அமைச்சர் அவர்கள் அடிக்கடி கோபம் கொள்வதிலும் சில நன்மைகள் ஏற்படுகின்றன. கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் தானே அவர் மனத்திலுள்ளதை வைத்துக்கொள்ள முடியாமல் கொட்டி விடுகிறார். அவர் இப்படிக் கோபப்படாவிட்டால் பூதுகர் கலங்கமாலரையர் கையில் சிக்கியதும், ஆனால் அந்தப் பூதுகரே இப்பொழுது சிம்மவர்மரின் கையில் சிக்கியிருப்பதும் போன்ற உண்மைகள் தெரிய வருமா...? ஒரு கவலை விட்டது. எப்படியோ இனிமேல் பூதுகருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது என்று அருண்மொழியார் சொல்கிறார். இனிமேல் சுதமதியின் மனத்திலும் வைகைமாலையின் மனத்திலும் கொஞ்சம் தைரியத்தை ஏற்படுத்தலாம்'' என்றான் ஆதித்தன்.

''பூதுகர் உயிரோடு இருக்கிறாரா...? அவர் கலங்கமாலரையர் கையிலிருந்து சிம்மவர்மரின் கையில் சிக்கிக் கொண்டதும் நன்மைக்குத்தான். சில சமயங்களில் எதிராளிகளால் சிறைப்படுத்தப் படுவதும் லட்சிய சித்திக்குக் காரணமாகி விடுகிறது'' என்றான் பராந்தகன்.

''தஞ்சை அமைச்சர் அவர்கள் விருந்துக்குப் பின் நமது கோட்டையைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று விரும்புகிறார். நீதான் அவரை அழைத்துக் கொண்டு போய் எல்லா இடங்களையும் காட்டி விட்டு வரவேண்டும்...'' என்றான் ஆதித்தன்.

''அப்படியா..? நான் தயாராக இருக்கிறேன். நான்தான் அமைச்சர் அவர்களை அழைத்துச் செல்ல வேண்டும். நான் அமைச்சரோடு போகாவிட்டால் அமைச்சர் அவர்களுக்கு அபாயம் ஏதேனும் ஏற்படலாம். கோட்டைக் காவலாளர்கள் மிக முரடர்கள். அன்னியர்கள் யாரையும் அனுமதிப்பதில்லை. இன்று காலை தஞ்சை அமைச்சர் அவர்களின் மெய்காப்பாளர்கள் கொஞ்சம் அசட்டுத்தனமாகக் கோட்டைக்குள் பிரவேசிக்க நினைத்தபோது கோட்டைக் காவ

லாளர்களால் கைகால்களை இழந்து நிற்கிறார்கள். அப்படிப்பட்ட அபாயம் அமைச்சர் பெருமானுக்கும் ஏற்படாத வண்ணம் பாதுகாக்க வேண்டாமா...?'' என்றான் பராந்தகன் அலட்சியமாக.

இந்த வார்த்தையைக் கேட்டதும் புலிப்பள்ளியார் துள்ளிக் குதித்து, ''கோட்டையைச் சாதாரணமாகப் பார்த்து விட்டு வரச் சென்ற என்னுடைய மெய்காப்பாளர்களா கையையும் காலையும் இழந்தார்கள்? இதென்ன விந்தை! அவர்களை அப்படிச் செய்யக் கோட்டைக் காவலாளர்களுக்குத்தான் எத்தகைய துணிச்சல்? இது உண்மை தானா?'' என்றார்.

''நாங்கள் பொய் சொல்லும் வழக்கமில்லை. அவர்களைக்கூடக் கோட்டை மேற்கு வாசலில் ஒரு தூணோடு பிணைத்துக் கட்டி வைத்திருப்பதாகத் தெரிகிறது..'' என்றான் பராந்தகன்.

''அப்படியா..?'' என்று துடித்தார் புலிப்பள்ளியார்.

''அப்படியா என்றால்? எப்படி என்று போய்ப் பார்த்தால் விளங்கி விடும்'' என்றான் பராந்தகன்.

ஆதித்தன் மிகவும் மனவருத்தமும் அனுதாபமும் கொண்டவன் போல், ''இப்படி நடந்ததற்காக நான் மிகவும் வருத்தப் படுகிறேன். அவர்கள்தான் ஏதோ புத்தி பிசகாகக் காவலர்களை மீறிக் கோட்டைக்குள் நுழையத் துணிந்தபோது அவர்களைத் தண்டித்த வரையில் சரிதான். ஆனால் அவர்களை ஒன்றாகச் சேர்த்துத் தூணோடு பிணைத்துக் கட்டி வைத்திருப்பது தகாது. விருந்தினர்களாக வந்தவர்களை இப்படி நடத்துவது நமது பெருமைக்குக் குறைவு'' என்றான்.

''ஆம்! நமது பெருமைக்குக் குறைவு ஏற்படாமல் அவர்களை மன்னித்துவிட்டு விடவேண்டியதுதான். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யட்டுமா?'' என்றான் பராந்தகன்.

''அவர்களை விடுதலை செய்வதோடு மட்டுமல்ல; அவர்கள் காயத்துக்குத் தக்க சிகிச்சையும் செய்து அவர்களிடம் ஒழுங்காக அனுப்பவேண்டும். அவர்கள் கோட்டையைப் பார்க்க வேண்டுமென்று நம்மிடம் சொல்லியிருந்தால் வேண்டிய ஏற்பாடுகள் செய்திருக்கலாம். இப்படிக் காவலாளிகளிடம் போய்ச் சிக்கிக் கொண்டிருக்க வேண்டாம்'' என்றான் ஆதித்தன்.

''இதை என்னால் நம்பவே முடியவில்லை. என்னுடைய மெய்காப்பாளர்கள் சாதாரணமானவர்கள் அல்ல. மிகுந்த பராக்கிரமசாலிகள். அவர்களை ஒரு சாதாரணக் கோட்டைக் காவலர்கள் போரில் வெற்றி கொள்வதென்றால்? இதில் ஏதோ சூது இருக்கிறது'' என்றார் புலிப்பள்ளியார்.

''உண்மை. சூது இருக்கத்தானிருக்கிறது. சூதாகத்தானே கோட்டைக்குள் நுழையப் பிரயத்தனப்பட்டார்கள்? கோட்டையைக் காப்பவர்களும் சாதாரண வீரர்கள் அல்ல. மிகுந்த பராக்கிரமசாலிகள்தான்'' என்றான் பராந்தகன் கேலியாக. (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## Ramayana (Rajaji)

''சக்கரவர்த்தித் திருமகனின் தியாக வாழ்விலுள்ள நுட்பமான மன நிலைகளைக் கம்பன் எடுத்துச் சொன்னபோது கூட அவ்வளவாக விளங்கவில்லை. ராஜாஜி அவர்களோடு தொடர்பு ஏற்பட்டு, அவர்கள் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கிய பிறகே எனக்குப் பல உண்மைகள் தெரிய வந்தன'' என்று டி. கே. சி. அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்.

தமிழ் நாட்டின் தவசிரேஷ்டரான ராஜாஜியின் வாழ்க்கையிலே அத்தகைய நெறி முறைகளும் தியாக சீலமும் நிறைந்திருப்பதுதான் அதற்குக் காரணம். ராஜாஜி அவர்கள், வால்மீகி முனிவர் இயற்றிய ராம கதையையும், ஆங்காங்கே கம்ப ராமாயணத்தையும் இணைத்துக் கல்கி வாசகர்களுக்குச் சக்கரவர்த்தித் திருமகனின் புனித கதையைச் சொல்லி வந்தார்கள். அதை வாரந்தோறும் லட்சோப லட்சம் மக்கள் வாசித்து மன நிறைவும் ஆனந்தமும் பெற்றார்கள்.

இந்த அரும் பேற்றைத் தமிழர்கள் மட்டுமன்றி நம் நாட்டிலுள்ள மற்ற மொழியினரும், மற்ற நாட்டினரும் பெறும் வாய்ப்பு இப்போது கிடைத்துள்ளது. சக்கரவர்த்தித் திருமகனை ராஜாஜி அவர்களே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்கள்.

பாரதத்தின் பண்பைப் பாருக்கு எடுத்துக் காட்டும் நல்ல நோக்கத்துடன் திரு கே. எம். முன்ஷியின் ஆதரவில் ஆரம்பிக்கப்பட்ட பாரதீய வித்யாபவனம் இணையற்ற இலக்கிய சேவை செய்து வருகிறது. ராஜாஜியின் வியாசர் விருந்தை 'மகா பாரதம்' என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் மிக மலிவான விலையில் வெளியிட்டு, பல்லாயிரக் கணக்கான ஆங்கில மறிந்தவர்களை மகிழ்வித்த பெருமை பம்பாய் பாரதீய வித்யா பவனத்தாரையே சாரும். இப்போது சக்கரவர்த்தித் திருமகனையும் ராமாயணம் என்று மகுடமிட்டு மிக நேர்த்தியாக வெளியிட்டிருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: பாரதீய வித்யாபவனம், சௌபாத்தி, பம்பாய். விலை: ரூ. 2.

நரஸூ காபி
அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்

நரஸூஸ்
மான்புபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை




மக்ளீன்ஸ் பற்களை
முன்னைவிட அதிவெண்மையாக
சுத்தம் செய்கிறது!





## திப்பு சுல்தான்

**வ**ட இந்தியாவில் வெற்றிக் கொடி நாட்டிவிட்டதாக வெள்ளைக்காரர்கள் இறுமாந்திருந்தனர். இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தத் தங்களுக்குப் போட்டியாக இருந்த பிரஞ்சுக்காரர்களையும் அவர்கள் தோற்கடித்து விட்டதால், இனி இந்தியா முழுதும் ஆதிக்கம் செலுத்தும் காலம் தூரத்தில் இல்லையென அவர்கள் எண்ணினர். போர் செய்யாமலேயே தென் இந்தியா அடிபணிந்து விடும் என்றும் அவர்கள் கனவு கண்டனர். ஆனால், ஆங்கிலேயர்கள் தென் இந்திய பூமியில் காலடி வைத்தபோது, இமயம் போல் ஒரு மலை தங்களுக்குத் தடையாக இருப்பதை உணரலாயினர். பதினெட்டாவது நூற்றாண்டில் மைசூர் மன்னராக விளங்கிய ஹைதர் அலியும் அவரது வீரப் புதல்வரான திப்பு சுல்தானும் அடுக்கடுக்காகப் பல போர்களில் வெள்ளையர்களைப் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்தனர். சென்னைக்கு அருகில் நடந்த சரித்திரப் புகழ் பெற்ற போரில் கர்னல் பெயிலி என்ற பிரிட்டிஷ் தளபதியும் அவனது படைகளும் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டுத் திப்புவிடம் சரண் அடைந்தனர்.

மேற்படி தோல்வியைக் கண்டு இங்கிலாந்து தேசமே அதிர்ச்சி அடைந்தது. பல ஆண்டுகள் பிரிட்டிஷாரைக் கலங்க அடித்த திப்பு சுல்தானிடம் கவர்னர் பெயிலி சரண் அடைந்த சரித்திரம் மறக்க முடியாத அற்புதக் காட்சியை மேலே காணலாம்.



## கப்பலோட்டிய வீரர்

"இப்போது எப்படியிருக்கிறது?" என்று ஏளனமாகச் சிரித்தான் சிறை அதிகாரியான வெள்ளைத் துரை. "ஆனந்தமாக இருக்கிறது!" என்றார் கப்பலோட்டிய தமிழ் வீரர் வ. உ. சிதம்பரம் பிள்ளை. துரை திகைத்து நின்றான். அதற்கு முன் சிறையையும் அதில் உள்ள துன்பங்களையும் கண்டறியாத ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை அப்போது சிறையில் மாடுகளுக்குப் பதிலாகத் தாமே நின்று செக்கு இழுத்துக் கொண்டிருந்தார்! தேசப்பற்று கொண்ட பாவத்துக்காகப் பல வருஷம் கடுங்காவல் தண்டனை அடைந்த ஸ்ரீ வ. உ. சி. அவர்களுக்குச் சிறையில் கொலைக் குற்றம் செய்த கைதிகளைப் போல் செக்கு இழுக்கும் வேலை கொடுத்திருந்தனர். ஆனால், அந்த வேலையைச் சிதம்பரனார் மகிழ்ச்சியுடன் செய்ததைக் கண்டு வெள்ளைத் துரைக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. "சந்தோஷமாக இருக்கிறீர்களே! சிறைக்கு வெளியே இந்த வேலை செய்து உங்களுக்குப் பழக்கமோ?" என்றான் துரை கேலியாக. "ஆமாம், ஆமாம்" என்றார் பிள்ளை. துரைக்குத் தூக்கிவாரிப் போட்டது. "கொடிய அன்னிய ஆட்சியாகிற இரும்பு நுகத்தடியை எப்போதும் கழுத்தில் வைத்துக் கொண்டு இழுத்து வழக்கப்பட்டவர்களுக்கு, இந்தச் செக்கை இழுப்பது என்ன பிரமாதம்? இது சொகுசைச் சுமப்பது போலத்தான்" என்றார் திரு சிதம்பரம் பிள்ளை. திலகர், லாலா லஜபதிராய் முதலிய மாபெரும் தலைவர்களின் வரிசையில் மங்காத சுடராக விளங்கி வருகிறார் சிதம்பரம் பிள்ளை.



## உப்பு சத்தியாக்கிரகம்

உலக சரித்திரத்திலேயே ஒரு புதுமை விளைவித்த வித்தகர் மகாத்மா காந்தியடிகள்.

உலக சரித்திரத்திலே அடிமைப்பட்ட நாடுகள் எல்லாம் புரட்சி செய்து ஹிம்சையைக் கையாண்டே சுதந்திரம் பெற்றுள்ளன. ஆனால் காந்தி மகானோ அஹிம்சா மார்க்கத்தில் புரட்சி செய்து பாரதத்தின் சுதந்திரத்தை ஈட்டித் தந்தார்.

காந்தி மகான் நடத்திய சாத்விக சுதந்திரப் போராட்டங்களில் மிக முக்கியமான போராட்டம் உப்பு சத்தியாக்கிரகம். மக்கள் உணவுடன் கலந்து சாப்பிடும் உப்புக்கு பிரிட்டிஷார் வரி வசூலித்து வந்தனர். இந்த உப்புச் சட்டத்தை மீறி உப்பைக் காய்ச்சுவேன் என்று காந்தி மகான் தொண்டர் படை சூழத் தண்டிக்கு யாத்திரை புறப்பட்டார்.

அதேசமயம் தென்னாட்டிலே நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள் தொண்டர் படைசூழ வேதாரண்யத்துக்கு உப்பு சத்தியாக்கிரகம் செய்ய யாத்திரை புறப்பட்டார்.

இந்தச் சத்தியாக்கிரக நிகழ்ச்சி ஊமையராய், குருடர்களாய் இருந்து வந்த பாரத மக்களை விழிப்படையச் செய்தது. பிரிட்டிஷ் அரசாங்கக் கொடுமையை எதிர்த்துத் தடியடி படவும், சிறை வாசம் செய்யவும் முப்பது கோடி மக்களைத் தயார் செய்து விட்டது!

தியாகம் பல புரிந்து பெற்ற கண்ணினும் இனிய சுதந்திரத்தைப் போற்றுவோம்!



## ஜேய் ஹிந்த்!

மிகுந்த ஆயுத வலிமை பொருந்திய பிரிட்டிஷாரைப் போர்முனையில் முறியடித்து, இந்தியப் புண்ணிய பூமியில் உள்ள கோஹிமாவில் முதன்முதலாகத் தாயின் வெற்றி மணிக் கொடியைக் கம்பீரமாகப் பறக்கவிட்ட பெருமை நேதாஜி சுபாஷ் சந்திர போசுக்கே உரியதாகும். இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்து கொண்டிருந்தபோது வெறும் கையுடன் கிழக்காசியாவுக்குச் சென்ற ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ், தாற்காலிக இந்திய சர்க்காரைச் சிருஷ்டித்தார். பலம் மிகுந்த இந்திய தேசிய இராணுவத்தை உருவாக்கினார். திறமை மிக்க ஜான்ஸி ராணிப் படையை அமைத்தார்.

கிழக்காசியாவில் வசிக்கும் லட்சக்கணக்கான இந்தியர்களிடையே ஒற்றுமை நிலவும்படி செய்தார். ரப்பர் பால் வெட்டிக்கொண்டிருந்த ஏழை இந்தியத் தொழிலாளர்களை அநீதியையும் அதர்மத்தையும் எதிர்த்துப் போர் முழக்கம் செய்யும் வீர சிங்கங்களாக மாற்றினார். இறுதியில் பிரிட்டிஷாரை எதிர்த்துப் படையெடுத்தார். நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் நடத்திய தர்ம யுத்தமும், அவர் உபதேசித்த 'சலோ தில்லி' 'ஜெய் ஹிந்த்!' இவ்விரு தாரக மந்திரங்களும் சரித்திரத்தின் பொன் ஏடுகளில் நிரந்தரமான இடம் பெற்றுள்ளன. இணையற்ற தேச பக்தியும், அஞ்சா நெஞ்சமும், காம்பீர்யமான தோற்றமும் வாய்ந்த நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் வருகையால், கிழக்காசிய நாடுகளில் உள்ள இந்தியர்களின் மதிப்பு மிகவும் உயர்ந்தது. அமரர் நேதாஜி போஸ் நாமம் வாழ்க!

முழு நாவல்



மணியம்

கிருத்திகா

டாக்டர் சாருசீலா ஜன்னலின் அருகில் நின்று கொண்டிருந்தாள். ஐப்பசி மாதம்]; மாலை வேளை. இலேசாகக் குளிர்ந்த தென்றல் வீசிற்று. அவள் தேகம் சிலிர்த்தது. ஆனால் அதை அவள் பொருட்படுத்தியதாகத் தெரிய வில்லை. அவளுடைய கவனமெல்லாம் எதிரே யுள்ள மருதமரத்தில் உறைந்திருந்தது. தினம் அந்த வேளையில் ஜன்னல் அருகில் நின்று கொண்டு அந்த மரத்தின் மேல் லயித்திருப்பது அவளுடைய வழக்கம். காட்டு மைனாக் களும், நாட்டுபுல்புல்களும் கிரீச்சிட்டுக் கூவிக் கொண்டு மரக்கிளைகளிடையே விளையாடின: ஆனால் அவள் கண்கள் வேறு எதையோ தேடிய வண்ணம் இருந்தன. எங்கே? அவளுடைய அருமை மஞ்சள் கிளி எங்கே? ஏன் இன்னும் வரக்காணோம்?

இது ஒரு நாடகம் போல் நாள்தோறும் நடக்கும். மஞ்சள் கிளியை இரண்டே இரண்டு நிமிஷங்களுக்குப் பார்ப்பதற்காக, தினம், தான் ருசி யாகப் போட்டுக் கொடுக்கும் காப்பியைச் சாருசீலா ஆற வைப்பது சுப்பம் மாளுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. இத்தனை நாளையும்விட அன்று சுப்பம்மா ளுக்கு அதிகக் கோபம் வந்து விட்டது.

"நம் ஊருக்குப் புதுக் கலெக்டர் வந்து விட்டாராமே! உனக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

சாருசீலா காதில் இந்தக் கேள்வி விழுந்ததாகத் தெரியவில்லை.

சுப்பம்மாள் சற்று மௌனமாக இருந்தாள். மறுபடியும் அவளுடைய கவனத்தைக் கவரும் முறையில் சொன்னாள்:

"நம்ப செல்லத்தான் பெண்சாதி அங்கே வீடு கூட்டு கிறாள். அவள்தான் சொன்னாள். கலெக்டர் சின்ன வயசாம். அவருக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையாம். தாயார் மாத்திரம் அவர்கூட இருக்கிறாளாம்..." என்றாள். அதற்குச் சாருசீலா "ஊம்" என்றுகூடப் பதில் சொல்லவில்லை.

சுப்பம்மாளுக்கு ஆத்திரமாக வந்தது. "இந்த வீட்டிலே என்னை யார் லட்சியம் செய்கிறார்கள்? தான்பாட்டுக்கு இருக்கிறேன், சுவர் மாதிரி" என்று பொருமிக்கொண்டே சமையலறைக்குப் புறப்பட்டாள்.

அப்பொழுது, நார்ப்பட்டைக் கிழிக்கும் போது கேட்கும் 'தர்ர்' என்ற சத்தத்துடன் 'விர் என்று மஞ்சள் கிளி பறந்து வந்து, மருத மரத்தின் உச்சாணிக் கொப்பில் அமர்ந்தது. அதைக் கண்டவுடன், சாருசீலா, உற்சாகம் மேலிட்டவாறு தோட்டத்துக்குத் துள்ளி ஓடினாள். ஆனால் மஞ்சள் கிளி இரண்டு நிமிஷம்கூட அங்கே தங்கவில்லை. இறக்கைகளைப் 'பட்பட்' என்று அடித்துக் கொண்டு, பறந்து போய் விட்டது.

மஞ்சள்கிளி பறந்து போன அதே நிமிஷத்தில் வாசல் கதவுக்கு அருகில் ஒரு உருவம் தெரிந்தது. சின்னப் பெண்ணைப் போல் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்த சாருசீலா அந்த உருவத்தின் தோற்றத்தைப் பார்த்தவுடன் கல்லாய்ச் சமைந்து விட்டாள். அது யாராக இருக்கக் கூடும்? அதே நடை...அதே பாவனை...அருகில் வந்து முகம் தெரியு முன்பே அது யாரென்று அவள் தெரிந்து கொண்டுவிட்டாள். அவளுடைய மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. ஜயதேவன்! ஆம், அவனேதான்!

இவ்வளவு நாட்களுக்குப் பிறகு அவன் எதற்காகத் தன்னைப் பார்க்க இங்கே வர வேண்டும்? இங்கே எப்படித் திடீரென்று அவன் உதயமானான்? அவள் இவ்விடத்தில் இருக்கிறாள் என்பதை யார் அவனுக்குச் சொன்னார்கள்?

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகும் தன் மனப்புண் ஆறவில்லை என்பதை அவள் அப்பொழுதுதான் திகிலுடன் தெரிந்து கொண்டாள். அவள் உள்ளம் நடுங்கிற்று. ஐயோ! மறுபடியும் அந்த நிகழ்ச்சிகளை நினைவூட்டிக் கொள்ள வேண்டுமா? அவனைச் சந்திக்க வேண்டுமா? வீட்டுப் பின்புறமாக ஓடிப் போய் விட்டால் என்ன? சாருசீலா தப்பித்துக் கொள்ளவேண்டுமென்று தவித்தாள். ஆனால், வந்தவனோ அவள் ஜன்னலண்டை நிற்பதைக் கவனித்து விட்டான். 'விறு விறு' என்று வந்து வாசல் கதவைத் தட்டி விட்டான். சுப்பம்மாள் கதவைத் திறந்து விட்டாள். இதோ அவர்கள் பேசும் அரவம் கேட்கிறது. சாருசீலா ஸ்தம்பித்துப் போய் நின்றாள். சுப்பம்மாள் அவனைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போயிருக்க வேண்டும்.

"என்ன சுப்பம்மாள், என்னை நினைவில்லையா?" என்று கேட்டான்.

அந்தக் குரலையும், அந்தக் கேள்வியில் ஒலித்த சகஜ பாவத்தையும் கேட்டுச் சாருசீலாவுக்குக் 'குப்' பென்று வியர்த்துவிட்டது. அடுத்த விநாடி ஜயதேவன் அவள் முன் நின்றான்.






இத்தனை நாட்கள் கழித்து இப்படி நேருக்கு நேராகச் சந்தித்துக் கொண்ட அதிர்ச்சியினால் இருவரும் ஒரு நிமிஷம் ஒன்றும் பேசவில்லை.

அவன் தான் முதலில் பேசினான்: ''என்ன சாருசீலா, என்னை ஆச்சரியத்துடன் பார்க்கிறாயே? நான் இந்த ஊரில் தான் இருக்கிறேன். இங்கு நான் கலெக்டராய் மாற்றலாகி வந்திருப்பது உனக்குத் தெரியாதா?''

அவன் சுவாதீனத்துடன் பேசினான். அதைக் கண்டு சாருசீலா வியந்தாள். கடைசித் தடவையாக முன்பு அவர்கள் பார்த்துக் கொண்டபோது நடந்த விஷயங்களை நினைத்தவுடன், அவனுக்கு அங்கே வர எப்படித் துணிவு ஏற்பட்டதென்று அவள் மலைத்தாள். அவன் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல அவளுக்கு நா எழவில்லை.

அவன் இலேசாகச் சிரித்தான். ''சுப்பம்மாளை வாசற் படியில் பார்த்தேன். என்னைக் கண்டதும் முன்போலவே அவள் முகத்தைச் சுளித்தாள்.''

''உண்மைதானே, பழைய நினைவுகள் ஞாபகம் வந்தால் அவளுக்கு என்ன, எனக்கும்தான் முகத்தைத் திருப்பிக் கொள்ளத் தோன்றும்'' என்று சொல்ல வாயெடுத்தவள், அவனுடைய அடுத்த கேள்வியைக் கேட்டு உதட்டைக் கடித்து அடக்கிக் கொண்டாள்.

''அப்பா சௌக்கியமா? அவர் எங்கே இருக்கிறார்?''

சாருசீலா மெதுவாகத் தலையை அசைத்தாள். ஜயதேவனுக்கு, அதே சமயத்தில், அவர் சில காலத்துக்கு முன் இறந்து விட்டதாக யாரோ சொன்னது ஞாபகம் வந்தது.

மௌனம் நிலவியது. இருவர் மனத்திலும் பழைய நினைவுகள் சுழன்றன.

ஜயதேவன்தான், மறுபடியும் தன்னைச் சமாளித்துக் கொண்டு பேசினான்: "நான் இந்த ஊருக்குப் புதிது. இந்த ஜில்லாவில் மலைப் பிரதேசங்கள் மிக அழகாய் இருக்குமாம். நீ பார்த்திருக்கிறாயா?"

சாருசீலாவுக்கு, தெறித்து ஓடும் தன்னுடைய உணர்ச்சிகளை அத்தனை வேகமாக அடக்க முடியவில்லை. எப்படி முடியும்? என்றைக்குமே, அவனுடன் இருக்கும் பொழுது, இந்த வேற்றுமைதானே அவளைத் திணற வைத்தது? அதாவது அவனுடைய நிதானமும், அவளுடைய படபடப்பும்!

அவளுடைய குழப்பத்தை மறைக்கவோ, அல்லது அந்தச் சூழ்நிலையின் புழுக்கத்தைக் குறைக்கவோ எண்ணி, அவன் சம்பாஷணையைப் பொது விஷயங்களில் திருப்பப் பார்த்தான். சிரித்தான்; இலேசாக வம்பை வளர்த்தினான்; மழுப்பிக் கொண்டே அவளுடைய தடுமாற்றத்தைத் தீர்ப்பதற்கு முயன்று பார்த்தான். எதுவும் பலிக்கவில்லை.

சாருசீலா அசைவற்று நின்றாள்.

கடைசியில், ஜயதேவன் கண்கள் அவள் கண்களைச் சந்தித்தன. நீண்ட நேரம் பார்த்துக்கொண்டன. அவளுடன் மன்றாடின.

"கப்பம்மாளுக்கு என்மேல் கோபமா?" என்று அவன் கவலையுடன் கேட்டான். ஆனால் அவளுடைய கண்களோ, "உனக்கு என்மேல் கோபமா?" என்று வினவின.

திரை அகன்றது. இப்போது அவன் முகத்தில், முன்பு, ரொம்ப நாட்களுக்கு முன்பு, அவள் கண்ட அதே பரிதாபகரமான சந்தேகமும் சஞ்சலமும் குடிகொண்டிருந்தன. அவனுடைய முகத்தின் தோற்றம் சாருசீலாவுக்கு வேடிக்கையாக இருந்தது. அவள் 'களுக்' கென்று சிரித்து விட்டாள். உடனே, இசை கேடாய் இருந்த நிலைமை திருந்தி விட்டது.

அவள் வேடிக்கையை நிறுத்திக் கொண்டு, தன் இயற்கையான நிதானத்தை அடைந்தாள். அவனோ, தனக்கு இயல்பான உற்சாகத்தைக் காண்பித்தான். பழையமனஸ்தாபங்களைக் காட்டிக் கொள்ளக் கூடாதென்று இருவரும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

அவன் சீமையில் செய்த வாசத்தைப் பற்றி அவள் விசாரித்தாள். அவன் உற்சாகத்துடன் தன் அநுபவங்களை எடுத்துச் சொன்னான். தனக்கு நேர்ந்த சில ஏமாற்றங்களையும் விபத்துக்களையும் நகைச்சுவையுடன் கூறினான்.

ஜயதேவன் எத்தனை உறுதியுடன் பேசினான்! எத்தனை மாறுதல்! இது வெளிநாட்டில் கற்றதா? அல்லது பொறுப்புள்ள உத்தியோகம் வகிப்பதால் உண்டான உறுதிப்பாடா? எவ்வாறானாலும் சரி, இந்த ஆறு வருஷத்தில், ஜயதேவன், உலகத்தை வெல்லும் வித்தையைக் கற்று விட்டான். அந்தத் தயக்கம், அந்தக் கூச்சம் போயே போய்விட்டனவா? அல்லது ஒளிந்து கொண்டிருக்கின்றனவா?

சரளமாகவும் நகைச்சுவை பாவத்துடனும் இருந்த அவன் பேச்சில் சாருசீலா ஈடுபட்டு விட்டாள். சற்றுமுன் அவர்களிடையே மூண்டிருந்த வேற்றுமை மாறிவிட்டது. காப்பி ஆறியதுகூடத் தெரியாமல் அவர்கள் வெகு நேரம் வரையில் பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் அவளிடம் அவன் விடைபெற்றுக் கொண்டு எழுந்தான்.

"வீட்டுக்கு வாயேன், அம்மா உன்னைப் பார்த்தால் சந்தோஷப்படுவாள்" என்றான். ஆனால் மறுகணம் சாருசீலாவின் முகம் கன்றி விட்டதைக் கண்டு, தான் இங்கிதமில்லாமல் பேசிவிட்டதை அவன் உணர்ந்தான். மறுபடியும் அவன் முகத்தில் குழப்பம் உண்டாயிற்று. எப்படியோ சமாளித்துக் கொண்டு வெளியேறினான்.

ஜயதேவன் அகன்றதும் கப்பம்மாள் வாசற் கதவை அறைந்து தாளிட்டு விட்டு முணுமுணுத்துக் கொண்டே உள்ளே போனாள்.

சாருசீலா கப்பம்மாளைக் கவனிக்கவில்லை. பல வருஷங்களுக்கு முன்னால் நிகழ்ந்தவையெல்லாம், அவளுடைய மனத்திரைக்குப் பின் திரண்டு உருண்டு மறைந்தன.

*

துடிதுடிப்பு, அகத்தின் அடித்தளத்திலிருந்து பொங்கி வரும் அன்பு, அடக்க முடியாத ஆர்வம், இவை சாருசீலாவுடன் பிறந்த சுபாவங்கள் என்று சொன்னால் மிகையாகாது. இவ்வித இயற்கை பாவங்கள், சூழ்நிலையின் காரணங்களால் தூண்டிவிடப் பட்டால், அவை அதிகப்படு மென்பதில் என்ன சந்தேகம்? அந்தச் சமயத்தில் தேசாபிமானம் என்னும் ஆவேசம் அவளை ஆட்கொண்டது. அவள் வைராக்கியத்துடன் தேச சேவை புரியலுற்றாள். சர்க்கா சுற்றினாள்; வெளிநாட்டுத் துணிகளை வியாபாரம் செய்யும் கடைகளில் நின்று மறியல் செய்தாள்.

அன்று ஒருநாள் ஒருமணி நேரம் வீதியில் தேசிய கீதங்கள் பாடின அதிர்ச்சியால், அவள் முகம் வேர்வையால் நனைந்திருந்தது; தேகம் துவண்டிருந்தது. ஆனாலும் ஆர்வம் குறையவில்லை. பொங்கும் மகிழ்ச்சியுடன் தன் வீட்டு வாசலுக்கு வந்தவுடன், "அப்பா" என்று உள்ளே ஓடிவந்தாள். ஆனால் அங்கே அப்பாவுடன் ஒரு நவயுவன் உட்கார்ந்திருந்ததைக் கண்டு அவளுடைய ஓட்டம் தடைப்பட்டது.

அந்த யுவன்தான் ஜயதேவன். பதினேழு வயதுப் பெண்ணொருத்தி, சிறு குழந்தையைப் போல் துள்ளிக் குதித்துக் கொண்டு வருவதைக் கண்டு அவன் திகைத்தான்.

அழகிய அவளுடைய அதரங்கள், ஓடிய சிரமத்தினால் சற்று மலர்ந்திருந்தன. அந்த இடைவழியே மெல்லிய மூச்சுக் காற்று வெளி வந்தது. அந்தக் கணத்தில், அந்த இடத்தில், ஜயதேவன் அவளிடம் தன் மனத்தைப் பறிகொடுத்திருக்க வேண்டும்.

சாருசீலாவின் தகப்பனார் அவனைப்பார்த்து, "சாருசீலா! இவன் பேராசிரியர் விசுவநாதனின் பிரிய மாணவன் ஜயதேவன்!" என்று அறிமுகம் செய்து வைத்தார். பிறகு, "ஜயதேவா, இவள் என்னுடைய மகள் சாருசீலா!" என்று சொன்னார்.

சாருசீலா ஜயதேவனை ஒருமுறை நன்றாய்ப் பார்த்தாள்.

அவள் கண்டது மிகவும் அழகு வாய்ந்த வாலிபன் ஒருவனை. நல்ல உயரம்; கட்டுள்ள தேகம்; மாசற்ற முகம். வெண்மையான அவன் முகத்தில், ஒளி படைத்த அழகிய விழிகளிடையே நேரான நாசி பதிந்திருந்தது. கண்கள் அதிக விசாலமாய் இல்லாவிட்டாலும், புருவத்தின் அடர்த்தியினால், அவை எடுப்பாக இருந்தன. அவன் கூச்சத்துடன் சாருசீலாவைப் பார்த்து ஒரு இளம் புன்னகை புரிந்தான். அவ்வளவுதான்; சாருசீலாவின் இருதயத் தந்தியில் மெல்லிய கீதமொன்று தவழ்ந்தது.

ஜயதேவன் பல நாட்கள் அவர்களுடன் தங்கியிருக்க நேர்ந்தது. சாருசீலாதான் தன் உணர்ச்சியை ஒடுக்கக் கற்கவில்லையே! தேசாபிமானத்தில் தன் உள்ளத்தை எப்படிச் செலுத்தினாளோ, அதே தீரா ஆர்வத்தைக் காதலிலும் காட்டினாள். அந்த வேகம்... அந்தக் கொதிப்பு! சீ..சீ தன் மடமையை நினைத்தாலே இப்போது அவளுக்கு மிகவும் வெட்கமாக இருந்தது.

அப்போதெல்லாம் ஜயதேவன் அவளுடைய கண்களுக்கு ஒரு திவ்விய புருஷனாக விளங்கினான். கூச்சமுள்ள அவனது சிரிப்பும், அச்சம் நிறைந்த பார்வையும் அவளுடைய உள்ளத்துக்கு இதமாக இருந்தன.

சாருசீலா உலகத்தை அன்புக் கண்களாலே பார்த்தாள். எங்கும் அவள் அன்பைப் பொழிந்தாள். அதைக் கொட்டிக் கொட்டிக் கொடுத்தாள். எந்தக் காரியத்தில் முனைந்தாலும் அவள் தன்னுடைய எல்லாவற்றையும் அன்புடன் அர்ப்பணம் செய்தாள். தேச சேவையானாலும் சரி, குயிலைக் கண்டாலும் சரி, கடலைப் பார்த்தாலும் சரி, அன்பு சுரந்து வந்தது. அன்பு அவளுடன் பிறந்தது. அவள் முகத்தில் அது பிரதிபலித்தது; கண்களில் பிரகாசித்தது; மொழிகளில் ஒலித்தது.

அழகுள்ள இரு விழிகள் ஆர்வத்துடன் பார்த்தால் எந்த வாலிபன்தான் மயங்க மாட்டான்! ஜயதேவன் என்ன கல்லா? அவன் உள்ளம் பொங்கிற்று.

தன் உடல், பொருள், உயிர் யாவையும் அவனுக்கென்று அர்ப்பணம் செய்து விட்டாள். அவனும் தன்னைப் போல் அன்பு கொண்டுள்ளானா என்று அவள் கேட்கவில்லை. அவனுடைய பெருமிதப் பார்வைகளும் கனிந்த நோக்குகளுமே அவளுக்குப் போதுமானவைகளாய் இருந்தன. அவனை அப்போது கட்டாயப்படுத்தித் தன்னைக் காதலிக்கச் செய்தோமோ என்று நினைத்த போது அவளுடைய தேகம் குன்றியது.

ஜயதேவன் அவர்களுடன் ஒரு மாதம் வசிப்பதற்குள், இருவருக்குமிடையே அழகான காதல் நாடகம் நடந்தது. ஒவ்வொரு சமயம் ஜயதேவன் சற்று அசட்டையாக இருப்பான். அப்போது அவள், காதல் கட்டங்களை அவன் தன்னைப் போல் கொதிப்புடன் ரஸிக்கவில்லையே என்று சிணுங்குவாள்.

இன்னும் சில மாதங்களில் அவன் மேல் படிப்புக்காக அயல் நாட்டுக்குச் செல்ல இருந்தான். அதைப் பற்றி அடிக்கடி பேசுவது இயற்கைதானே! ஆனால் அவன் அந்தப் பேச்சை எடுத்தாலே அவளுக்கு வெறுப்பாக இருக்கும். அவளுக்கு ஜயதேவனே தேவையாக இருந்தது. அவனுக்குச் சீமைப் படிப்பு, பெரிய உத்தியோகம், புகழ், கீர்த்தி, உன்னதக் காதல் இவைகளைப் பற்றிய ஞாபகம்.



இந்தக் காதல் நாடகம் உச்ச நிலையை அடைந்த தினம், இன்று நடந்ததுபோல் அவளுக்கு நினைவிருக்கிறது.

"சாருசீலா!" அன்பு ததும்ப அவன் கூப்பிட்ட குரல் இன்றும் அவள் காதில் ஒலித்தது. அப்போது அதைக் கேட்டவுடன் அவளுக்குக் குப்பென்று வியர்த்து விட்டது. அவன் எதைப் பற்றிப் பேசப் போகிறான் என்று அவள் தெரிந்து கொண்டு விட்டாள். இன்னும் சில நிமிஷங்களில் அவள் அவனுடைய அன்பு அணைப்பில் இருக்கப் போவதை நினைத்து அங்கம் பூரித்தாள். அவன் தயங்கினான். கூச்சம் அவனைத் தடை செய்தது. எதற்கு இத்தனை மூடு மந்திரம் என்று சாருசீலா அவசரப்பட்டாள். "சாருசீலா! உன்னிடம் எனக்கு எத்தனை அன்பு உண்டென்று நான் சொல்லாமலே உனக்குத் தெரியுமல்லவா?" என்று கடைசியில் விருப்பமில்லாமலே அவனுடைய வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவந்தன. அவள் நினைத்துக் கொண்டாள்: "அப்பா! என்ன பெரிய ரகசியம்... அதை இத்தனை நாட்களாக எத்தனை பத்திரப்படுத்தி வைத்திருந்தார். அதனால் அவருடைய காதலைக்கூடச் சந்தேகித்தேனே!"

கவலை நீங்கியதும் அவள் மனம் சாந்தி அடைந்தது. உவகையுடன் அவனை, 'மேலும்

'சொல்லுங்கள்' என்ற தோரணையில் பார்த்தாள். அந்தப் பார்வை அவனை ஏனோ தடுமாறச் செய்து விட்டது.

அவன் சொன்னான்: "அம்மாவிடமிருந்து இன்று பதில் வந்தது. 'சீமைக்குப் போய் விட்டு வந்த பிறகு உனக்குப் பிடித்த பெண்ணை மணந்துகொள். நான் தடை செய்ய வில்லை. இப்போது படிப்புக்கு நடுவில் கல்யாணம் செய்து கொள்வது உசிதமில்லை' என்று எழுதியிருக்கிறாள்."

சாருசீலாவின் முகம் மாறியது. அவள் நடுக்கத்துடன் அவன் முகத்தைப் பார்த்தாள். "கல்யாணத்தை நிச்சயம் செய்து வைத்து விட்டு, இரண்டு, அல்லது மூன்று வருஷங்களுக்குப் பிறகு அதை நடத்த உன் தகப்பனார் சம்மதப்படவில்லை?" என்று அவள் மேலே சொல்லிக் கொண்டு போனாள்.

ஜயதேவனுக்கு மனமாரத் தன்னை மணந்து கொள்ள விருப்பமில்லை. அதனால்தான் அம்மாவைச் சாக்காகச் சொல்லித் தன்னைப் புறக்கணிக்கிறான் என்ற முடிவுக்குச் சாருசீலா வரவேண்டியதாயிற்று.

ஜயதேவன் தன்னை விட்டுச் சென்ற பிறகு அவள் அனுபவித்த துன்பத்தை யெல்லாம் விவரித்துச் சொல்லி முடியாது.

நிலைதவறித் தன் இதயத்தைக் கொட்டி விட்டோமே என்ற வெட்கம் அவளை வருத்தியது. அப்போது அனுபவித்த துன்பத்தை விட, இப்போது உண்டான அதன் நினைவு தான் அவளை அதிகமாக வருத்தியது.



சாருசீலாவை மறுபடியும் சந்தித்த தினத்திலிருந்து ஜயதேவன் மனம் சரியாகவே இல்லை. எப்போதும் மனத்தை வேலையில் செலுத்த முடியவில்லை. காரியாலய அறைக்குள் சென்றால் சாருசீலாவின் இனிய வதனமே அவன் மனக் கண் முன் வந்து நின்றது.

ஜயதேவன் தன் வேலையில் கெட்டிக்காரன் என்று பெயர் வாங்கி விட்டான். சாந்தமாகவும் நிதானமாகவும் மனிதர்களுடைய தராதரத்தைக் கணிப்பதில் அவனுக்கு இயற்கையாகச் சாமர்த்தியம் இருந்தது. இதை அவன் நன்கு உணர்ந்திருந்தான். தனக்குக் கிடைத்திருக்கும் அதிகாரத்தை வகிக்க அவனுக்குத் திறமையுண்டு என்று அவன் எண்ணியதில் தவறில்லை. இனி மேல் ஒரு வாழ்க்கைத் துணைவி தேவை. சாருசீலா அவனது பதவிக்கு ஓர் ஆபரணமாக விளங்குவாள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த டாக்டர் வேலையை....அவன் முகத்தைச் சுளித்தான். சாருசீலாவை 'டாக்டர் அம்மா' என்று ஊரார் அழைப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. அழகான ஆடைகள் அணிந்துகொண்டு, கலெக்டர் பங்களாவுக்கு அலங்காரமாய் விளங்குவதை விட்டு விட்டு...இதைப் பற்றி அவளிடம் கண்டிப்பாகப் பேச வேண்டும் என்று ஜயதேவன் திட்டம் இட்டான். சாருசீலாவுடன் தான் நடத்தப் போகும் இன்ப வாழ்க்கையைப் பற்றிக் கனவு கண்டான்.

காரியாலய அறைக்கு வெளியே பூட்ஸ் உராயும்சத்தம் கேட்டது. டி. எஸ். பி. சீனிவாசலு உள்ளே நுழைந்தார். டக்கென்ற ஓசையுடன் கால்களை அடித்துக் கொண்டு சலாம் செய்தார். ஜயதேவன் உட்காரச் சொல்லிச் சமிக்ஞை செய்ய, எதிரே உள்ள நாற்காலியில் அவர் அமர்ந்தார்.

ஐந்தேமுக்கால் அடி உயரம், அதற்குத் தகுந்த பருமன், முறுக்கு மீசை இவைகளுடன் கனத்த குரலும் சேர்ந்திருந்த டி. எஸ். பி. சீனிவாசலு முரடர், கண்டிப்புக்காரர் என்று ஊரில் வழங்கும் பெயருக்குத் தகுந்தபடி காட்சி அளித்தார். வயது ஓட்டத்தட்ட ஐம்பது ஆகியும் அவருடைய தேகம் வைரம் பாய்ந்ததாயிருந்தது.

"ஊரில் என்ன விசேஷம்? எல்லாம் அமைதியாக இருக்கிறதா-இல்லையா?" என்று கலெக்டர் விசாரித்தார்.

"சின்னமங்கலத்தில்தான் தேசியவாதிகள் அதிகமாயிருக்கிறார்களே! நான் அப்பொழுதே சொன்னேன், (மேஜை மேல் ஒரு குத்து விழுந்தது!) இந்தத் தேசத் தொண்டர்களை அங்கிருந்து அகற்ற வேண்டுமென்று. நீங்கள் கேட்கவில்லை. இப்போ என்ன தெரியுமா நடந்திருக்கிறது? சப்-கலெக்டரை ஊரை விட்டு மாற்றிவிட வேண்டும் என்ற நோக்கத்துடன், அந்த ஊர்வாசிகள், சத்தியாக்கிரகம் செய்கிறார்கள். என்ன சார்! அநியாயம்! (இந்தத் தடவை குத்து வெகு பலமாக விழுந்தது. மேஜை அதிர்ந்தது!) நான் முதலில் ஆட்களை விட்டு எல்லாருக்கும் நல்ல புத்தி சொன்னேன். எல்லாரும் அமைதியாக ஒத்துழையுங்கள் என்று சொல்லிப் பார்த்தேன். நடக்கவில்லை. உடனே விட்டேன் ஆட்களை...பிடித்தேன் ஒன்று இரண்டு ஆசாமிகளை...எலலாம் கப்சிப் என்று அடங்கிப் போச்சு. பேச்சில் ஒன்றும் பலிக்காது என்று பத்து தேசத் தொண்டர்களை லாக் அப்பில் வைத்தேன். அவ்வளவு தான்! சர்க்காரின் பெருமை உயர்ந்தது!"

டி. எஸ். பி. மேஜையைக் குத்திய வண்ணம் ஆர்ப்பாட்டம் பண்ணிப் பேசினார். ஜயதேவனுக்குச்சிரிப்பு வந்ததோ என்னவோ,



அவன் முகம் ஆழ்ந்த கவனத்தையே விளக்கியது. நிதானமாகப் பதில் சொன்னான்:

"அதற்காக இத்தனை கடுமையான தண்டனை விதித்து, அவர்களைக் கைது செய்திருக்க வேண்டியதில்லை. கிராமவாசிகளை ஒன்று சேர்த்து, எச்சரிக்கை செய்திருக்கலாம்!"

"கலெக்டர் அவர்கள் மன்னிக்க வேண்டும். நீங்கள் இப்பக்கத்தைச் சேர்ந்தவர். ஆனாலும்; வயதில் சின்னவர்; அனுபவம் போதாது. கொண்டா புரத்தில் முரடர்கள் அதிகம். தேசத் தொண்டு என்று பெயரில் இவர்கள் புரட்சியில் இறங்குவார்கள்."

"இருக்கட்டும். என்ன இருந்தாலும் நியாயப்படி போக வேண்டும். வரம்புக்கு மீறி நடப்பது சரியில்லை" என்றான் ஜயதேவன்.

"என்னுடைய கடமைப்படி நான் எச்சரித்தாகி விட்டது. இனிமேல் உங்கள் கட்டளைப்படி......" என்று கூறி விட்டு, டி. எஸ். பி. சற்று ஏமாற்றத்துடனும் பதற்றத்துடனும் சலாம் போட்டு விட்டு வெளியே சென்றார். அங்கே சீற்றத்துடன் அவர் பல உத்தரவுகளைப் பல திக்கில் ஒலி பரப்புவது, உள்ளே இருந்த ஜயதேவனுக்குக் கேட்டது.

ஜயதேவன் மெள்ள நகைத்துக் கொண்டான். டி. எஸ். பி. யுடைய அட்டகாசம், அவருடைய குத்து, அடித்து அடித்துப் பேசும் விதம், இவைகளைச் சாருசீலாவிடம் சொல்ல வேண்டும். அவளுக்குள்ள குறும்புத்தனத்துடன் அவள் சீனிவாசலுவைப் போல நடித்துக் காட்டுவாள் என்றெல்லாம், ஜயதேவன் மனத்துக்குள் எண்ணிக் கொண்டான். அப்படி நினைத்தானோ இல்லையோ, சாருசீலாவின் அழகிய விழிகளும், கோமள முகமும், அவன் மனக் கண் முன்னே தோன்றி, அவனை வருத்தி வதைத்தன. இனிமேல் அவளைப் பார்க்காமல் ஒரு கணங்கூட இருக்க முடியாது என்று அவன் தன் இடத்தை விட்டுச் சட்டென்று எழுந்தான்.

கலெக்டர் கார் தன் வீட்டைப் பார்த்து வெகு தொலைவில் வந்து கொண்டிருப்பதை அறியாமல், சாருசீலாவிடம் கப்பம்மாள் சொன்னாள்: "நல்ல வேளை. அந்தக் கலெக்டர் துரை இன்னும் வரல்லே. வந்தால் இந்தத் தடவை சொல்லி விடுகிறேன், பாரு. இங்கே சமுகத்தைக் காட்ட அவருக்கு என்ன தைரியம்!"

சாருசீலாவின் முகம் கன்றி விட்டது. "சரி, போதும், மூடு உன் திருவாயை" என்று எரிந்து விழுந்தாள்.



இந்தச் சமயத்தில் ஜயதேவன் வருவது தெரியவே அவர்கள் பேச்சு நின்றது.

ஜயதேவனைப் பார்த்தவுடன் சாருசீலாவுடைய உள்ளம் இடர்ப்பட ஆரம்பித்தது. 'அடாடா! இத்தனை வருஷங்கள் சென்றும் இந்தப் பாழும் மனம் ஏன் இப்படிச் சஞ்சலமடைகிறது!" என்று அலுத்துக் கொண்டாள். பிறகு அவனை அன்போடு வரவேற்று உபசரித்தாள்.

அவனும், சீமைப் பயிற்சியினாலோ, உத்தியோகம் வகிப்பதினாலோ, லாகவமாகப் பேசக் கற்றுக் கொண்டு விட்டான். இருவரும் சம்பந்தமில்லாத சில்லறை விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சாருசீலாவின் உள்ளத்தில் ஒரு துடிப்பு ஏற்பட்டது. ஜயதேவன் இப்பொழுது மாறி விட்டான். அன்றை விட இன்று, அது பளிச்சென்று தெரிந்தது. பால் முகம் இருந்ததே தவிர, அந்தப் பால் உள்ளம் எங்கே? கூச்சம் கலந்த அந்த அழகான புன்னகை எங்கே? அவன் அவளிடம் பிரியம் கொண்டுள்ள அந்தத் திருட்டு விழியைக் காணோமே! சிறு பிள்ளைத்தனத்துடன் அவன் கொஞ்சுவானே!

இப்போது அவள் முன் இருப்பது கொண்டாபுரம் கலெக்டர் துரையல்லவா?

"இந்த இன்ப நிலையைக் கலைத்துக்கொண்டு கப்பம்மாள் வந்து காப்பி டம்ளர்களை 'டொக்' கென்று மேஜையின் மேல் வைத்தாள். அவளுடைய முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துப் பொரிந்து கொண்டிருந்தன.

ஜயதேவன், தான் முன் செய்த திட்டப்படி அவசரப்படாமல் விஷயத்தை அவளிடம் மெதுவாகத்தான் பிரஸ்தாபிக்க வேண்டுமென்று தீர்மானம் செய்திருந்தான். இருந்

தாலும் அவனுடன் தனிமையில் சிறிது நேரம் பேசிக் கொண்டிருக்க வேண்டுமென்று அவன் மனம் துடி துடித்தது. சுப்பம்மாள் இருக்கும் அந்த இடம் அவனுக்குப் பிடித்தமானதாக இல்லை. சட்டென்று ஒரு யோசனை தோன்றவே, "சாருசீலா! காரில் என்னுடன் கீழ்க்கொண்டாபுரம் வரையில் வருகிறாயா?" என்று ஆவலுடன் கேட்டான். "அந்த ரோடு மிகவும் மோசம். சாதாரணமாக அங்கே ஒருவரும் போக மாட்டார்கள். ஆனால் அங்கே ஒரு ஆலயமும், அழகான குளமும் உண்டு!" என்று அவளைத் தூண்டினான்.

அதைக் கேட்டதும் அவளுக்குச் சிரிப்பதா, அழுவதா என்று தெரியவில்லை.

"ஆமாம், நான் உங்களிடம் தனிமையிலிருக்கவும் பேசவும் துடிக்கிறேன். நீங்களோ எதிரே டிரைவரையும், சேவகனையும் வைத்துக் கொண்டு என்னை வெளியே அழைத்துப் போகிறீர்கள். அங்கே போனால் இன்னும் கலெக்டரைப் பேட்டி காணக் கோவில் பூசாரியும், கிராமத்து அதிகாரிகளும் இன்னும் பலரும் வந்திருப்பார்கள்" என்று சொல்லி விடலாம் போல் இருந்தது சாருசீலாவுக்கு.



ஆனால் அவள் உள்ளத் துடிப்பை அடக்கியது அவளுடைய பகுத்தறிவுதான். கொஞ்ச நாட்களாகப் பதவி அனுபவித்து வந்த ஜயதேவனுக்கு, இந்தச் சிப்பந்திகள் உடன் வருவது சகஜமாக ஆகிவிட்டது. அவன் அவர்களைத் தனியாக வைத்துப் பார்க்கவில்லை. தன்னுடன் சேர்ந்த உருப்படிகளாக எண்ணினான் போலும்! சாருசீலா சரியென்று தலையை அசைத்தாள். குதூகலத்துடன் அவளை வண்டியில் ஏற்றிக் கொண்டு சென்றான் ஜயதேவன்.

கீழ்க்கொண்டாபுரத்து ஸ்ரீதேவி தடாகம் பிரசித்தி பெற்றது. அந்த இடத்தில் உண்டான நிசப்தமும், நிர்மானுஷ்யத் தன்மையும் மனத்துக்குச் சாந்தியைக் கொடுக்கும். நாலா பக்கமும் ஓங்கி வளர்ந்திருந்த மரங்கள், தடாகத்தையும் ஆலயத்தையும் வெளி உலகத்தினிடம் இருந்து ரட்சிப்பது போல், அடர்ந்து நின்றன. இந்த அடர்த்தியினால், அந்த இடத்தில் சூர்ய காந்தி பூமி தேவியை இலேசாகத்தான் அங்கு மிங்கும் தொட்டது. 'மொய்' என்ற வண்டுகளின் சத்தம் சாருசீலாவின் காதுக்கு இனிமையாக இருந்தது. அவர்கள் நடந்துபோன பொழுது, காய்ந்த இலைச் சருகுகள் சல சல என்று மிதிபட்டன.

அவள் நினைத்தது போலவே கிராமத்துக் கர்ணம், பட்டா மணியம், பூசாரி முதலியவர்கள் அங்கே ஆஜராகி இருந்தார்கள். முன்னறிவிப்பின்றி வந்தால்கூட, கலெக்டர் கலெக்டர்தானே? கிராமத்தில் செய்தி பறக்க எத்தனை நேரம் வேணும்? இந்தச் சிறிய பட்டாளம் அவளுடைய துன்பத்தை அதிகரித்தது. தன்னுடைய மெல்லிய நீண்ட விரல்களால் அவனை மெதுவாகத் தொட்டாள். "எல்லோரையும் சற்று விலகிப் போகச் சொல்லுங்கள்" என்று தாழ்ந்த குரலில் சொன்னாள். ஜயதேவன் தன் கைகளால் சேவகனுக்குச் சமிக்ஞை செய்தான். உடனே யாவரும் மறைந்தார்கள். சேவகன் மாத்திரம், தொலைவில் நந்திகேசுவரரைப் போல் மரச்சோலை மறைவில் பதுங்கி நின்றான். அவளுடைய குழப்பத்தைக் கண்டு அவனுக்கு வியப்பாய் இருந்தது.

"என்ன சாருசீலா! உடம்பு சரியாக இல்லையா? கொஞ்சம் உட்கார்ந்துகொள். சேவகனைப் போய்த் தண்ணீர் கொண்டுவரச் சொல்லுகிறேன்" என்றான்.

அவன் கனிவுடன் அவள் மலர்க் கரத்தைப் பற்ற முயன்றான்.

அன்பினால் துடிப்பதா—அல்லது அந்த வேடிக்கையை அநுபவிப்பதா என்று ஒரு நிமிஷம் யோசித்து விட்டு, பிறகு வேடிக்கைதான் தேவலை என்று சாருசீலா தீர்மானம் செய்தாள். தன் கரத்தை மெதுவாக விடுவித்துக் கொண்டு, மெல்ல நகைத்தாள். அவனும் இப்போது சந்தர்ப்பம் சரியாக இல்லை என்று, தன்னுடைய ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு விட்டான்.

அவளோ தன் உள்ளம் நினைக்கும் விகற்பங்களைத் தடுக்கும் பொருட்டு, வேடிக்கைப் போக்கில் பேச ஆரம்பித்தாள் :

"என்ன வேடிக்கை, பரமசிவன் உமையுடன் காதல் புரியும் பொழுது நந்திகேசுவரன் காவலிருப்பது போல், இந்தச் சேவகனும் நிற்கிறானே? எந்தக் காதலனும் தன் காதலிக்குத் தானாகவே, தன் கையாலேயே தான் தண்ணீர் கொடுக்க விரும்புவான். ஆனால், இங்கேயோ கலெக்டர் துரை!" அவள் கடகடவென்று சிரித்து விட்டாள். அதைக் கேட்டு அவன் திடுக்கிட்டான்.

அன்று வீடு சென்ற பிறகு அவள் ஜயதேவனையே நினைத்துக் கொண்டு முன்னைவிட அதிகமாகத் துன்புற்றாள். ஜயதேவனுடைய அன்பு தனக்கு உதவாது என்று பல வருஷங்களுக்கு முன்பே சாருசீலாவுக்குத் தெரியும். தான் அவனிடம் கொண்ட காதலை மிதித்துக் கொன்று விட்டதாக அவள் பூர்ணமாக நம்பியிருந்தாள். ஆனால், கருகிய அந்தக் காதல் கொடி, அவனைப் பார்க்கப் பார்க்க, மறுபடியும் துளிர்க்க ஆரம்பித்து விட்டது.

★

ஜயதேவனின் தாயார் பாகீரதியம்மாள் தான் தேர்ந்தெடுக்கும் பெண்ணை, ஒருவித ஆட்சேபணையும் சொல்லாமல், ஜயதேவன்

மணந்து கொள்வான் என்று கொண்டாபுரம் வரும் வரையில் நினைத்திருந்தாள்.

அவள் அவனிடம் இதுவரையில் விவாகத்தைப் பற்றிப் பேசிய பொழுதெல்லாம் அவன் தட்டியே சொல்லவில்லை. ஆனால் அந்த ஊரில் சாருசீலாவைப் பார்த்தவுடன் அவள் நெஞ்சம் சுருக்கென்று தைத்துக் கொண்டது. அழகு, குணம், பணம் என்று அடுக்கிக் கொண்டே போய், இதுவரையில் விஷயத்தைத் தள்ளிப்போட்டு விட்டோமே என்று அவள் அங்கலாய்த்துக் கொண்டாள். அவன் சாருசீலாவைப் பார்த்துப் பேசியிருப்பானா? கட்டாயம் பார்த்திருப்பான். இப்போது அங்கேதான் போய்க் கொண்டிருக்கிறான் என்று அவள் திடமாகச் சொல்லுவாள்.

பாரதியம்மாளுக்கு விசேஷப் பண்போ, அறிவோ கிடையாது. குறுகுறுவென்று பேசிச் சிரிக்கத் தெரியாது; இயற்கை ஞானமும் போதாது. அவளிடமிருப்பதெல்லாம் ஒன்றே. அதாவது தான் ஒரு கலெக்டர் பிள்ளையைப்பெற்றுவிட்டோமென்ற பெருமிதமே. அது சந்தர்ப்பத்துக்குத் தகுந்தாற்போல் சந்தோஷமாகவோ, துக்கமாகவோ மாறுவது வழக்கம். கணவன் மறைந்த பிறகு கிராமாந்திரத்தில் குறுகிய நிலைமையிலிருந்த அவள், தன் மகன் படித்து முன்னுக்கு வந்தவுடன், இந்த அந்தஸ்துக்குத் தகுந்த விசால நோக்கம் பெற்று விட்டதாகக் கருதினாள். மாதர் சங்கத்துக்குப் போவதிலும், நாலு பேர்களுடன் வார்த்தையாடுவதிலும், தன் கௌரவத்தைக் காப்பாற்றி வருவதாக அவள் எண்ணினாள். பல பேர்கள் முன்னிலையில் அவள் அர்த்தமில்லாமலும், சம்பந்தமில்லாமலும் பேசினாள்.

சாருசீலாவின் தகப்பனாரும் சாருசீலாவும் தன்னை லட்சியம் செய்யாமல் தன் பிள்ளையைப் பிடித்து விட்டார்கள் என்பது அவளுடைய எண்ணம். இதனால் தன்னை அவமதித்து விட்டார்கள் என்று அவள் பூரணமாக நம்பினாள். பிள்ளையை நாசுக்காகத் தன் வழிக்குத் திருப்பி, அந்த சம்பந்தத்தைத் தான் நிறுத்தி விட்டதாக அவள் நினைப்பு. தான் நினைத்தது எவ்வளவு தவறு என்று மாதர் சங்கத்தில் சாருசீலாவைப் பார்க்கும் பொழுதெல்லாம் பாரதியம்மாள் எண்ணுவாள். இப்போதும் அந்தப் பெண் பாரதி அம்மாளை உதாசீனம் தானே செய்கிறாள்! முன்பின் தெரியா விட்டால் என்ன? கலெக்டர் தாயார் என்ற ஹோதாவில் அவளுக்கு மரியாதை செய்து அவளுடன் பேசினால் சாருசீலாவின் மதிப்பு குறைந்து போய் விடுமா? திரும்பிப் பார்க்காமல் அகம்பாவத்துடன் நடந்து போவதை, எத்தனை முறை அவள் பார்த்திருக்கிறாள்.



கொண்டாபுரம் உத்தியோகஸ்தர்கள் சங்கக் கட்டடம் ஆங்கிலேயர் கட்டிய ஒரு பழைய மோஸ்தர் வீடு. உள்ளே விசாலமான அறைகளும், சீட்டாடும் மேசைகளும், வேண்டிய மற்ற வசதிகளும் இருந்தன. வெளித் தாழ்வாரங்கள் அழகான தூண்களுடன் அமைந்திருந்தன. ஓட்டுக் கூரை தாழ்ந்து வந்து தாழ்வாரத்தின் அமைப்புக்கு ஒரு பொலிவு கொடுத்தது. வெளியே புல் தரையில் கட்டியிருந்த அலங்கார மேடைமேல், சங்க அங்கத்தினர்கள் அமர்ந்திருந்தனர்.

நீதிபதி சாம்பமூர்த்தி சிறு சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தார். காட்டிலாகா அதிகாரி விமலன் அப்போது டென்னிஸ் மட்டையுடன் மேடையின் மேல் வந்து சேர்ந்தான். சொற்பொழிவை நிறுத்திக் கொண்டு நீதிபதி சாம்பமூர்த்தி திரும்பிப் பார்த்தார். விமலனுடைய முகத்தைக் கண்டவுடன், அவருடைய முகம் மலர்ந்தது.

''விமலனா, வா!'' என்று அன்புடன் சாம்பமூர்த்தி அழைத்து, அவனைத் தம் பக்கத்தில் அமரச் செய்தார். அவருக்குப் பின்னால், மேடையில் சற்று ஒதுங்கியபடி உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த அவர் மனைவி ராஜமும் ஜயதேவனின் தாயார் பாரதியம்மாளும் அவனைக் கண்டவுடன் ஒதுங்கிக் கொண்டார்கள். தலைப்பை இழுத்துப் போர்த்தியபடி, மரியாதை காண்பிக்கும் மாதிரியில், தங்கள் குரல்களைத் தாழ்த்திக் கொண்டார்கள்.

கலெக்டர் கார் வாசற்படி அருகில் வந்துநின்றது. வில்லை தரித்த சேவகன் ஒருவன், முன்புறத்திலிருந்து அவசரமாகக் குதித்து இறங்கி, வண்டியின் கதவை அவசரமாகத் திறந்தான். ஜயதேவன் — கலெக்டர் — கீழே இறங்கினான். அவனுக்குப் பின் சற்றுத் தள்ளி, டென்னிஸ் மட்டை ஒன்றை ஏதோ ஒரு உயர்ந்த பொருளைப்போல், தெய்வ பக்தியுடன் ஏந்தி வந்தான் சேவகன். அளவெடுத்த மாதிரி, நிதான நடையுடன் ஜயதேவன் கம்பீரமாக முன்னே போக, சேவகன் பயபக்தியுடன் பின்னே சென்றான்.

அந்தச் சமயத்தில் அபர்ணா தாழ்வாரத்தில் வந்து நின்றாள். ஜயதேவன் அவள் பக்கம் திரும்பிப் பார்த்தான். ''வருகிறாயா, விளையாட?'' என்று கேட்டான்.

''இல்லை. நான் விளையாடி முடித்து விட்டேன். நீங்களும் டாக்டரும் ஆடுங்கள்'' என்று அவள் பதில் சொன்னாள்.

''விமலன்!'' என்று கூப்பிட்டான் ஜயதேவன். டி. எஸ். பி.யும் சேர்ந்து கொண்டார். நாலுபேருமாகச் சேர்ந்து டென்னிஸ் கோர்ட்டுப் பக்கம் சென்றார்கள்.

அபர்ணா டென்னிஸ் கோர்ட்டின் எதிர்ப்புறமாகத் தன் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு ஆட்டத்தைக் கவனித்தாள். தகப்பனாருடைய பேச்சுக்கள் அவளுக்கு மனப்பாடமாகி இருந்ததால், அவைகளை அவள் மறுபடியும் கேட்க விரும்பவில்லை. தாயின் பேச்சையும் அப்படியே. ஆட்டத்தை மட்டுமே கவனிக்க முயன்றாள்.

பாகீரதி அம்மாளும் அபர்ணாவின் தாயார் ராஜமும் ஜயதேவனுடைய குணங்களை மாற்றி மாற்றி விஸ்தரித்தார்கள்.

"இன்று கலெக்டருக்கு ரொம்ப வேலையோ?" என்று ராஜம் மிகுந்த அநுதாபத்துடன் விசாரித்தாள்.

"ஆமாம்! அதுதான் என்னை உங்களுடன் கிளப்புக்கு வரும்படி சொல்லி அனுப்பி விட்டு அவன் ஆபீஸிலிருந்து இங்கே நேரே வந்து விட்டான்."

"டாக்டர் சாருசீலாவை அவருக்கு முன்னமே பழக்கமோ?"

இதைக் கேட்டதும் பாகீரதியம்மாளுக்குச் சுருக்கென்றது. வாசற்புறத்தில் அவர்கள் சந்தித்துக் கொண்டதை ராஜம் கவனித்து விட்டாளோ என்று மனத்துக்குள் அங்கலாய்த்துக் கொண்டாள்.

"ஜயதேவன் அவளை எங்கேயாவது சந்தித்திருப்பான். வேலையில் இருக்கும் பெண்களை என் பிள்ளை போலுள்ளவர்கள் சந்திக்காமலும் பேசாமலும் இருக்க முடியுமா?" என்றாள். பிறகு அபர்ணாவை நோக்கிவிட்டு, "அவளுக்குச் சீக்கிரமாக ஒரு கல்யாணத்தைப் பண்ணுங்கள்" என்றாள் பாகீரதியம்மாள்.

"எல்லாம் உங்களைப் போலுள்ள பெரியவர்கள் ஆசீர்வாதப்படி நடக்கும். இவரை வைத்துக் கொண்டு நான் எங்கே போய் வரன் தேடுவது?" என்றாள் ராஜம்.

"ஜயதேவனுக்கும் சாருசீலாவுக்கும் முன்னமேயே பரிச்சயமுண்டா?" என்று ராஜம் கேட்பது அபர்ணாவின் காதில் தெளிவாக விழுந்தது. சட்டென்று அவள் முகத்தைச் சுளித்துக் கொண்டாள்.

ஆட்டங்கள் ஓய்ந்து விட்டன.

இதற்குள், மேடைமேல் இருந்தவர்கள், சொக்கட்டான் காய்கள், ஆடுவோரின் விருப்பப்படி நகர்வதுபோல், தத்தம் அந்தரங்க உந்தலின்பேரில், இடம் பெயர்ந்தார்கள். சீக்கிரத்தில் விமலனும், ஜயதேவனும், சாருசீலாவும் ஒருங்கே சந்தித்தார்கள்.

ஜயதேவன் நினைத்தான். 'இந்தக் காட்டு இலாகா மனிதர்களுக்கே இங்கிதம் குறைவு. ஒருவேளை, வேண்டுமென்றேதான், நாங்கள் இன்புறப் பேசுவதைத் தடுக்க விமலன் இங்கே வந்தானோ? அதுவும் அவர்களுடைய இனத்தின் குணத்துக்குப் பொருத்தமாக இருக்கும். பிறரைச் சற்று இறக்கிப் பார்ப்பதில் காட்டு இலாகா அதிகாரிகளுக்கே ஓர் திருப்தி.'

விமலன் எண்ணினான். 'இவன் கலெக்டராக இருப்பதால் நான் வழிவிட்டுப் பணிய வேண்டும்போலிருக்கிறது. அதை யெல்லாம் ஆபீஸுடன் வைத்துக் கொள்ளட்டும். காதல் விஷயத்தில் சமமாகப் போட்டியிட இவ்வுலகில் யாருக்கும் உரிமை யுண்டு. வா, தோள் தட்டிக் கொள்வோம். சாருசீலா யாரை விரும்புகிறாள் என்று பார்ப்போம்.'

இருவர் மனத்திலும் இவ்வித எண்ணங்கள். ஆயினும் இருவரிடையேயும் இருந்த பிணக்கு வெளியே வரவில்லை.

ஏதோ நினைத்துக் கொண்டவர்கள் போல் இரண்டு பேரும் ஏக காலத்தில் "சாருசீலா!" என்று அழைத்தார்கள். பிறகு இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் தங்கள் பல்லைக் கடித்துக் கொண்டார்கள்.

இந்த நிலைமையின் ஹாஸ்யத்தைக் கண்டு சாருசீலா உரக்கச் சிரித்தாள். அதுதான் சமயமென்று விமலன் நகர்ந்தான்.

கிளப்பை விட்டபிறகு, விமலன் கால் நடையாக, வீடு சென்றான். அவனுடைய கார் அன்று சரியாக இல்லை. பாதி வழியில் நீதிபதியின் கார் அவனருகில் வந்து நின்றது.

"ஏறிக்கொள். போகிற வழிதானே?" என்றார் சாம்பமூர்த்தி.

எட்டு மாதப் பழக்கத்திலேயே அவருக்கு விமலனை மிகவும் பிடித்து விட்டது. விமலன் மௌனமாக டிரைவர் பக்கத்தில் ஏறிக் கொண்டான். கார் அவன் கேட்டண்டை நின்றதும், வந்தனம் சொல்லி விட்டு வீட்டை நோக்கி விரைந்தான்.

விமலன் வீடும் ஜட்ஜ் வீடும் அடுத்தடுத்தாற்போல் இருந்தன. அதாவது இரண்டு பர்லாங்கு தூரத்திலிருந்த அவ்விரண்டு வீடுகளுக்கும் இடையே வேறு வீடு கிடையாது. சாதாரணமாக ஜில்லாக்களில் சர்க்கார் பங்களாக்களை அப்படித்தான் கட்டுவார்கள். அதனால் "அடுத்த வீடு" என்று சொல்லுவது கொஞ்சம் மிகையானாலும், அவர்கள் அப்படியே சொல்லி வந்தார்கள். விமலன் வராந்தாவைத் தாண்டி உள்ளே போனான். சோபாவில் உட்கார்ந்தபடி எதிரேயுள்ள உருண்டைக்கூடையின் மேல் காலை நீட்டினான். எங்கிருந்தோ ஒரு பட்லர் வந்து அவனுடைய டென்னிஸ் மட்டை, மப்ளர் முதலியவைகளை வாங்கிக் கொண்டான்.

'எத்தனை நாட்களுக்கு இது போன்ற தனி வாழ்வு' என்று ஆயிரத்தோராவது தடவையாக அவன் தன்னைக் கேட்டுக் கொண்டான். விமலன் சாருசீலாவை நினைத்துப் பெருமூச்சு விட்டான். அவள் மாத்திரம் அவனை மணக்கச் சம்மதித்திருந்தால்? அவள் மாத்திரம் அன்று சரியென்று சொல்லி யிருந்தால், அவனுடைய கண்கள் திறந்து கொண்டிருக்குமா? இன்றைக்கு உள்ளத்தில் புகுந்திருக்கும் சில புனிதமான எண்ணங்களை அவன் சொப்பனத்திலும் நினைத்திருப்பானா?

மேகத்திரள் போல் அவன் மனத்தில் எழும்பும் உள் உணர்வு அப்போது உண்டா யிருக்குமா? அப்பா! இந்த எட்டு மாதங்களில் அவனிடம் எத்தனை மாறுதல்கள்! நினைத்துப் பார்த்தால் விநோதமாக இருக்கிறது. அவை சாருசீலாவின் திரஸ்கரிப்பால் உண்டாயின என்றால் யார் நம்புவார்கள்?

அப்பொழுதெல்லாம், அவன் நினைப்பில், தான் ஒரு குட்டி ராஜா வென்ற எண்ணம். தந்தையின் முன்னாள் போதனையும், காட்டு இலாகா பதவியும் அவனைத் தனக்குமேல் உயர்ந்தவன் இல்லையென்று நினைக்கச் செய்தன. எட்டு மாதங்களுக்கு முன் இருந்து,

இப்போது மறைந்துபோன அந்த விமலனை நினைத்தவுடன், அவனுக்கு அருவருப்பாய் இருந்தது. அந்தப் போலி வேஷம் தரித்த வாலிபனை நினைத்து வெட்கப்பட்டான்.

விமலனுடைய தகப்பனாரும் ஒரு காட்டு இலாகா அதிகாரிதான். அவருடைய மனைவி விசேஷமான படிப்போ, அறிவோ, இல்லாத ஒரு சாதாரணப் பெண்மணி. ஆனால் கணவ னிடத்தில் அபார அன்பும் பக்தியும் கொண்டவள். அவள் அவருக்குத் தொண்டு செய்த தன் வாழ்நாட்களைக் கழித்துவிட்டாள். அவள் தகப்பனாரோ ஆங்கிலப் படாடோபத்தில் பற்றுக் கொண்டவர். காலமும் அவ்வித நாகரிக ஆடம்பர வாழ்க்கைக்கு மகத்துவம் கொடுத்தது. உலகம் ஆங்கிலேயரைச் சுற்றி வாழுமென்று அவர் எண்ணினார் போலும். தம் வீட்டையும் ஆங்கில நாகரிகத்துக்கு மாற்றினார். அவருடைய மனைவியும், மேஜை மேல் சாப்பிடவும், ஆங்கிலம் பேசவும், சங்கத்தில் பழகவும் கற்றுக் கொண்டாள்.

சிறு வயதில், கிறிஸ்துவ ஆயாக்களாலும், பட்லர்களாலும் விமலன் வளர்க்கப்பட்டான். அவனுடைய தாயார் மனம், அவனை வாரியணைக்க ஏங்கிற்றோ என்னவோ, யார் கண்டார்கள்? தகப்பனாருடைய கடுமையான ஆணைக்கு இணங்கி, அவன் ஆங்கில வழக்கப்படி மாலை வேளையில், ஒருவரும் பக்கத்தில் இல்லாமல், தனிமையில் விடப்பட்டான். "குட் நைட், டியர்" என்ற விடையுடன், அவன் பெற்றோர்கள் அவனைத் தாதியுடன் படுக்கையறைக்கு அனுப்பி விட்டு, கிளப்புக்குச் செல்வார்கள்.

இவ்விதமாக வளர்ந்த விமலன், சாருசீலா முன் என்னமாதிரி தோற்றம் அளித்திருப்பான்? அவன் பேசியது, சிந்தித்தது, ஏன், சொப்பனம் கண்டதுகூட ஆங்கிலத்தில்தான். ஆங்கிலேயர்களைப் போலவே, பலவித ஆட்டங்களைப் பழகுவது, அவர்களைப் போல் ஆடுவது, களிப்பது இதுவே உயர்தர நாகரிகப் பண்பு என்பது அவனுடைய எண்ணம். உணவுப் பழக்கமும், புகை வழக்கமும், அவனுக்கு ஒரு ஆங்கிலோ இந்தியத் தோற்றம் கொடுத்தது. தமிழ்ப் பண்பேறிய சாருசீலா அவனை எப்படி ஏற்பாள்?

ஆனால், அவனுக்கு என்னமோ தன்னைப் பற்றிய சந்தேகமே உண்டாகவில்லை. தன் நடவடிக்கையில், பிறர் போலித் தோற்றத்தைக் காணக் கூடும் என்று அவன் கருதவில்லை. நவநாகரிகமும், பதவியும் மிகுந்த தன்னை, எந்தப் பெண்தான் மணக்க வெறுப்பாள்? தன் சுந்தர உருவத்தை எண்ணி, அவன் சாருசீலாவைப் பேட்டி காணப் போனான். கொண்டாபுரம் வந்ததிலிருந்து, அழகிலும், சிறப்பிலும், சாருசீலா தனக்கேற்றவள் என்று அவன் முடிவு கட்டினான். சின்னக் குழந்தை தனக்கு வேண்டிய பொருளுக்காகக் கை நீட்டுவது போல், அவனும் கையை நீட்டினான். தான் அவளைக் கேட்க வேண்டியதுதான் தாமதம், அவள் சரி என்று சொல்லி விடுவாள் என்பது அவனுடைய தீர்மானம். ஆனால் அவன் கேட்ட கேள்வி, அவளுக்குச் சிரிப்பை மூட்டியது. இதில் சிரிக்க என்ன இருக்கிறது?

"மிகவும் வந்தனம், விமலன். ஆனால் நான் தங்களை விவாகம் செய்துகொள்ளத் தயாராக இல்லை" என்று கூறிவிட்டாள்.

அவனுக்கு அவள் சொன்னது விளங்கவில்லை. அப்போது அவனுடைய மனம் இருந்த நிலைமையில் எப்படி விளங்கும்? இருந்தாலும் ஏனோ, விஷயத்தை ஆராயத் துணிந்தான். அவளைத் தூண்டிக் கேட்டான்.

சாருசீலா சிரிப்பைத் தணித்துக் கொண்டாள். அவன் மேல் அனுதாபம் கொண்டு, "என்னை மன்னித்து விடுங்கள்" என்றாள்.

"என்னுடைய போக்கே ஒரு விதமானது. காதல் மணம் என்ற நாடோடிக் கொள்கைகளில் நான் பங்கு கொள்ள முடியாது. நான் எதையோ ஒன்றை நினைத்துத் தனி வழியில் சென்று கொண்டிருக்கிறேன்."

இதைக் கேட்டு விமலனுடைய வியப்பு அதிகரித்தது. தான் வந்த விஷயத்தை மறந்து, "அந்த வழி எதை நோக்கி என்று நான் தெரிந்து கொள்ளலாமா?" என்றான்.

"அது-தான் என்ற எண்ணமில்லாத, பலனை எதிர்பாராத - அன்பு என்பதை நோக்கி!"

விமலனுடைய அகக் கமலத்தில் சிறிதளவு பனித் தூள் விழுந்தது. அவள் பேசுவது அவனுக்கு விகற்பமாகப் படவில்லை. மெல்லிய மனத் திரையின் ஊடே ஏதோ ஒன்று அவனுக்குப் புலப்பட ஆரம்பித்தது.

விமலன் மனத்தில், தான் என்ற எண்ணம் அவன் வாழ்க்கையிலே முதல் முதலாகக் குறையத் துவங்கியது. மானுபிமானத்துடன் எல்லோரையும் அவன் பார்க்க ஆரம்பித்தான். சாருசீலாவையும் ஒரு தனிப் பெண்ணாக அப்போதுதான் பார்க்கக் கற்றுக்கொண்டான். அவளை மாத்திரமல்ல, எல்லாவற்றையுமே புதுக் கண்களுடன் பார்க்கத் துவங்கினான். அன்றையிலிருந்து அவன் தன் ஆத்ம பரிசோதனையைத் தொடங்கினான். அவனிடம் உள்ளே பதிந்து கிடந்த சில அபூர்வ குணங்கள் வெளிவரத் துவங்கின. அவனுடைய மனத்தில் ஒரு புதிய தெளிவு உண்டாயிற்று. அப்போது தான் அவன், தான் இந்திய தேசத்தில் வாழ்பவன் என்பதையும், நாட்டு மக்களுடன்கூடி வாழப் பழகாததையும் உணர்ந்தான். அதன் பிறகு அவன் சிரமப்பட்டுத் தமிழும், தெலுங்கும் கற்றான். காலையில் வாசல் தெளித்து மெழுகிக் கோலமிடுவதிலிருந்து தமிழ் நாட்டில் வழங்கும் வெவ்வேறு பழக்கங்களையும், சம்பிரதாயங்களையும், பண்பையும் தெரிந்து கொள்ள முயன்றான். வேலை நிமித்தமாக அவனுக்கும் பல பாஷைகளைப் பயிலச் சந்தர்ப்பங்கள் கிடைத்தன. நம் நாடு, நம் அரிய நூல்கள், நம் கலைச் செல்வங்கள் என்று இருப்பதைத் தெரிந்து கொண்டான்.

"பாத் ரெடி, சார்!" என்றான் பட்லர், விமலனுடைய சிந்தனையைக் கலைத்து. கையில் வைத்திருந்த சிகரெட்டைப் பக்கத்திலுள்ள கிண்ணியில் தேய்த்து விட்டு, விமலன் எழுந்து உள்ளே சென்றான்.

★

வேண்டி நகர்ந்ததும் நீதிபதி பேச ஆரம்பித்தார். "உயர்ந்த குணங்கள் படைத்த பிள்ளை!" என்றார் அவர் விமலனைக்குறித்து.

ராஜத்துக்கு அவர் நோக்கம் புரிந்தது.

''குணங்களாம் குணங்கள்! இதென்ன வேஷம்! சட்டைக்காரன் மாதிரி பேச்சும், சதா வாயில் சுருட்டும்...என்னவேண்டியிருக்கிறது?'' என்று சொல்லியபடி தன் மோவாயைத் தோளில் இடித்துக் கொண்டாள்.

நீதிபதி தம் பெண்ணை நோக்கினார். ஆனால் அவளோ, ''இந்தப் பேச்சில் எனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை'' என்ற பாவனையில், கதவோரமாக உட்கார்ந்து கொண்டு தன்னை வெளிப்புறம் திருப்பிக்கொண்டாள்.

நீதிபதி புன்னகை செய்தார்.

''விமலனுடைய தகப்பனாரை எனக்கு நன்ருகத் தெரியும். நல்ல மனிதர், உயர்ந்த லட்சியங்கள் படைத்தவர்!'' என்றார்.

''லட்சியங்களா? சட்டைக்கார டம்பத்தில் அவருக்கு மோகமென்றுசொல்லுங்கள்!''

''இல்லை, அப்படி இல்லை. விமலனுடைய தகப்பனாருக்கு ஆங்கில நாகரிகத்தில நல்ல பயிற்சியுண்டு'' என்றார் நீதிபதி.

''சரி எனக்கென்ன, வேணுமானால் உங்கள் பெண்ணை அந்த ஆங்கிலோ - இந்தியனுக்கு தத்தம் பண்ணுங்கோ!'' என்ருள் ராஜம்.

இதற்குள் வண்டி, வீட்டு வாசலை அடைந்தது. சம்பாஷணை தடைப்பட்டது.

ராஜத்துக்கு அவருடைய வார்த்தைகள் மிகவும் கவலையை அளித்தன. அன்று சாப்பாடான பிறகு, அவர்கள் உட்கார்ந்தார்கள்.

அபர்ணுவும் விசேஷமாக ஒன்றைப்பற்றியும் சிந்தனைசெய்தது கிடையாது. எல்லோரையும்போல் தானும் ஒரு உயர்தர இடத்தில் புக வேண்டும். பிறகு நாடோடியாகக் குதூகலமப்பர் சபையில் சேர்ந்து இன்புற்று வாழ வேண்டும். இவைகளே அவளுடையவாழ்க்கை நோக்கங்கள்.

ராஜம் தன் கவலையை வெளியிட்டாள். ''நீங்கள் பேசுவதைப் பார்த்தால் விமலனை உங்களுக்கு ரொம்பப் பிடித்திருப்பதாகத் தெரிகிறதே! எனக்கென்னமோ ஜயதேவனிடம்தான் சகல குணங்களும் நிரம்பியிருப்பதாயும் அவன்தான் அபர்ணுவுக்கு ஏற்றவனென்றும் தோன்றுகிறது. பாகீரதியம்மாளுக்கு அபர்ணுவை நாட்டுப் பெண்ணுக ஆக்கிக் கொள்ள வேண்டுமென்று ஆசை.''

''உன்னிடம் சொன்னுளோ?''

''இல்லை. அதென்ன? சம்பிரதாயங்களைத் தெரியாததுபோல பேசுகிறீர்கள்? நாமல்லவா முதலில் போய்க் கேட்க வேண்டும்!''

''அப்படியே செய்யேன்!'' என்றார் நீதிபதி சாம்பமூர்த்தி. ராஜம் அவரை மிகுந்த ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

★

விமலன் 'காம்பி'ல் இருந்தான். நகரத்தில் இருப்பதை விடக் 'காம்பி'ல் இருப்பது அவனுக்கு அதிகத் திருப்தியை அளித்தது.

கொண்டாபுரம் ஜில்லாவின் நிலத்தோற்றம் சாதாரணக் கண்களுக்கு எவ்வித அழகையும் காட்டாது. ஜில்லாவின் கிழக்கு மூலையில் ரம்மியமான மலைப்பிரதேசங்கள் இருந்தன; மற்றப்படி அது ஒரு வறண்ட பூமி. ஆனால் விமலனுக்கு மாத்திரம் இந்தப் பூமியை இன்பத்துடன் பார்ப்பதற்கு வேண்டிய நல்லுணர்வு இருந்தது. வெறுமையான அந்தப் பிரதேசத்தில், இவன் ஆனந்தத்தை நுகர்ந்தான். அதைப் பற்றித்தான் அப்போது அவன், சாருசீலாவிடம் சொல்லிக் கொண்டிருந்தான்: ''இந்தப் பூமியை எத்தனையோ பேர்கள் வறட்டுத் தேசம், அழகில்லை என்கிருர்கள். எனக்கென்னவோ இந்தத் திறந்த வெளியில் ஆங்காங்கே தெரியும் சின்னஞ் சிறு இலந்தை முட்புதர்களும், பீப்பா போன்ற குண்டுச் செடிகளும், நீண்ட தங்க நிறப் புற்களும் அழகாகவே தெரிகின்றன!''

சாருசீலா விமலனுடைய வார்த்தைகளைக் கேட்டு மலைத்துவிட்டாள். என்றுமே அவள் உள்ளத்தில் பொருமி நிற்கும் இயற்கை இன்பம், அவளைத் தொட்டது.

முதல்நாள் இரவு டாக்டர் சாருசீலாவுக்கு ஒரு அவசர அழைப்பு வரவே, அவள் அந்த இடத்துக்கு விரைந்து வந்தாள். சிகிச்சை முடிவதற்கு இரவு வெகு நேரம் ஆகிவிட்டதால், அவள் அங்கேயே அருகிலுள்ள 'ஓய்வு விடுதி'யில் தங்கினுள். காலையில்தான், அடுத்த அறையில் விமலன் தங்கியிருப்பதை அவள் தெரிந்துகொண்டாள்.



விமலனுக்கு ஒரே சந்தோஷம். சாருசீலாவிடம் தனிமையில் பேச எத்தனை சரியான சந்தர்ப்பம்! அந்த இடத்தின் சிறப்பை அவளுக்குக் காட்ட வேண்டுமென்றே அவன் அவளை வெளியே உலாவ அழைத்தான். ஒரு காலத்தில் அவன் அவளை விரும்பியவன் என்ற நினைவு போய்விட்டது. இப்போது ஒரு இனிய நட்புடன் அவர்கள் பழகினார்கள்.

''அதோ பார்த்தாயா? அந்தப் பொன்மயமான கோரைக்கிடையே புள்ளிமான் கூட்டங்கள் மின்னலைப் போல் தோன்றி மறைவதை? கலைமான் கொம்புகள் நடுநடுவே தெரிகின்றன. அவை கொம்புகளா அல்லது மரங்களின் கொப்புக் கிளைகளா என்று கூர்ந்து ஆராய்ந்தால்தான்விளங்கும்.'' சாருசீலா நகைப்பதைப் பார்த்து, அவன், ''நான் வேடிக்கை செய்யவில்லை, வாஸ்தவமாகத்தான் சொல்லுகிறேன்'' என்றான்.

''நான் கேலியாகச் சிரிக்கவில்லை. கற்பனா சக்தி உள்ளவர்கள் பாலைவனத்தில் அழகையும், குரூபத்தில் எழிலையும், வறுமையில் திவ்ய தேஜஸையும் காண்பார்கள் என்று எண்ணிக் கொண்டேன்!'' என்றாள்.

இதைக் கேட்டு விமலன் புளகாங்கிதம் அடைந்தான். காதலென்னும் ஒரு பூங்காவனத்தில் இரு ஆத்மாக்கள் பூப்பறித்துக் கொண்டிருப்பதைப் போலுள்ள ஒரு பிரமை அவனுக்கு உண்டாயிற்று.

சுபாவமாகவே விமலனுக்குப் பரிவு அதிகம். அன்று, சாருசீலாவின் உரையாடல் அவன் உள்ளத்தை இன்னும் நெகிழ்த்தியது.

பேசிக் கொண்டே நடந்து. இருவரும் ஒரு சிறிய கிராமத்தை அடைந்தார்கள். தன் இருதயத்தின் எதிரொலி போல் அவன் பேச்சு இருந்ததைக் கேட்டுத் திடுக்கிட்டு விட்டாள்.

அவள் கொண்டாபுரத்துக்குப் புறப்பட்டாள். அவளை வழி அனுப்புவதற்காக, அவன் கார் அருகே வந்தான். அது நகரும் சமயத்தில் விமலன் சொன்னான்: ''சாருசீலா! இந்த இரண்டு நாட்களில் நான் எத்தனை ஆனந்தத்தை அனுபவித்தேன் என்று சொல்ல முடியாது. எனக்கு உன்மேலுள்ள பிரியத்தைப் பற்றி வர்ணித்து, மறுபடியும் உன்னைத் துன்புறுத்த இஷ்டமில்லை. ஆனால் என்னுடைய நிறைந்த உள்ளத்தைப் பற்றி உன்னிடம் சொல்லாமல் இருக்க முடியவில்லை.''

அவனுடைய பதிலைக் கேட்பதற்கு நில்லாமல், அவள் உள்ளே போய்விட்டாள்.

என்ன ஆச்சரியம்! முன்பு விமலன் மிக்க தன்னம்பிக்கையுடன் அவளை அடைய விரும்பிப் பேசினபோது, அவள் அலட்சியமாகச் சிரித்து விட்டாள். இப்போது அவன் மறைமுகமாகத் தன் காதலை வெளியிட்டவுடன் அவள் உருகிவிட்டாள். உண்மையில் அந்த அடக்கம் அவளை வென்றுவிட்டது. ஜயதேவன் மாத்திரம் இதில் நூற்றில் ஒரு பங்கு அன்பைக் காட்டியிருந்தால்? அந்த வித்தியாசத்தை நினைத்தவுடன் அவளுக்கு ஏக்கம் உண்டாயிற்று. தன் ஏமாற்றத்தை மறைப்பதற்காக, உடனே விமலனை வரவழைத்து, அவனுக்கு இணங்கி விடலாமா என்றுகூட யோசித்தாள். இதென்ன விசித்திரம்!



விமலன் தனக்குப் போட்டியாக இருக்கும் விஷயம் ஜயதேவனுக்குத் தெரியாது. அவனும் சாருசீலாவும் இத்தனை நெருங்கிப் பழகுவதும் அவனுக்குத் தெரியாது. தன்னை அவன் கிட்டத்தட்டத் தோற்கடித்து விட்டான் என்பதும் அவனுக்குத் தெரியாது. தெரிய நியாயமில்லை. சாருசீலா தனக்குத்தான் சொந்தம்; அவள் இறுதியில் தன்னைத்தான் தேர்ந்தெடுப்பாள் என்று அவன் பரிபூரணமாக நம்பியிருந்தான். தன்னைப் பற்றி அவனுக்கு அத்தனை நிச்சயம். என்ன அவசரம்! நிதானமாகவே போவோம் என்று எண்ணித்தான் அன்றைக்கும் அவன் சாருசீலாவைக் காண வந்தான்.

அவளைக் கண்டவுடன் அவனுடைய உள்ளம் மறுபடியும் துள்ள ஆரம்பித்தது.

''ஒரு நாள், என் தாயாரை வந்து பாரேன், சாருசீலா!'' என்றான் அவன்.

''ஏன், நான் வரவில்லையென்று புகாரோ?''

அவளுடைய சொல் அவனைத் தடுமாறச் செய்தது. பாகீரதியம்மாள் அவளுடைய இறுமாப்பைப் பற்றியும் அகம்பாவத்தைப் பற்றியும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். தாயாரைத் திருப்தி செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன்தான் அவன் அப்படிச் சொன்னான்.

''என் தாயாரைப் பொறுத்த வரையில் நீ ஒரு தப்பு எண்ணம் கொண்டிருக்கிறாய். அவளுக்கு உன்னிடம் வெறுப்பில்லை.''

சாருசீலா மௌனமாய் இருந்தாள். அவனுக்குச் சுயபுத்தி கிடையாது என்று எண்ணினாள். தாயாருக்குப் பயப்படுகிறான். 'இம்மாதிரி புருஷர்களை எப்படி நம்புவது?' என்று அவனை உதாசீனமாகப் பார்த்தாள்.

''பிரியே, சாருசீலே! கோபித்துக் கொண்டிருக்கிறாயா? உன்னைப்போல் விவேகம் படைத்த பெண்கள் இப்படிக் கோபித்துக் கொள்ளுவார்களா? அப்படி என்மேல் ஆத்திரமானால், எனக்கு வேறு ஏதாவது தண்டனை அளிக்கலாம். இப்படிப் பராமுகமாக மாத்திரம் இராதே!'' என்று ஜயதேவன் சொல்லியிருக்க வேண்டும். அப்படிச் சொல்லியிருந்தால் அவளுடைய மானபங்கத்தின் புண் ஆறியிருக்கும். முன் நடந்ததை மறந்திருப்பாள். அவளுடைய அன்புமிகுந்த மனத்துக்கு இவ்வித இதமான முத்திரைகள் தேவை. ஆனால் ஜயதேவனோ அப்படிச் செய்யத் தவறிவிட்டான். அதுவும் அல்லாமல் எதைச் சொன்னால் அவளுடைய பிடிவாதம் வலுக்குமோ, அதைச் சொல்லி விட்டான்.

இவர்களுடைய தர்க்கத்துக்கு இடையே, ஒரு வேலையாள், தயங்கித் தயங்கி, உள்ளே வந்து, யாரோ டாக்டர் அம்மாவை அவசரமாகக் கூப்பிடுவதாகச் சொன்னான்.

டாக்டர் அம்மா என்ற வார்த்தையைக் கேட்டவுடன் அவன் சொன்னான். ''இந்த டாக்டர் அம்மா வாழ்வே எனக்குப் பிடிக்கவில்லை. சமூகத்துக்கு அணிகலமாக இருக்க வேண்டிய நீ, இட்டடிப் பணிவிடையில் உழலுவது எனக்குப் பிடிக்கவில்லை.''

விவாகம் ஆகும் முன்பே இத்தனை உரிமையுடன் அவன் பேசியது; இங்கிதமில்லாமல் சொன்னது; அவள் நெஞ்சின் கனலை உணராதது; இவை எல்லாமாகச் சேர்ந்து சாருசீலாவை வாட்டின.

ஒரு கணப்பொழுதில் ஏற்பட்ட காதலை வைத்துக் கொண்டு, இரண்டு பேர்கள் முழு வாழ்வையும் நடத்த முடியுமா? ஜயதேவன் தனக்கு இல்லை, வேண்டியதும் இல்லை. அவளுக்கு அது விஷயம் நன்றாகத் தெரியும். ஆனால் அவனுக்கு அது இன்னும் விளங்கவில்லையே. இப்போதுகூட அவளைச் சீக்கிரத்தில் மணக்கப் போகும் மாதிரி அல்லவா அவன் பேசினான்? எப்படியாவது அவன் பிடியிலிருந்து விலகிவிட்டால் போதும் என்று சாருசீலாவுக்குத் தோன்றிற்று. எப்போது தனக்கு விடுதலை கிடைக்கும்? ஜயதேவனுக்காக உண்டாகும் இந்த மனக்கொதிப்பு எப்போது தணியும்? அவனை மனமார வெறுப்பதும், பிறகு அந்தரங்கத்தில் உருகுவதும் எப்போது ஓயும்? தன்னை விட்டு அவன் போக மாட்டானா என்று அவள் மிகவும் ஏங்கினாள்.

டாக்டரம்மாவைச் சிகிச்சை செய்யும் அலுவலில் விட்டு விட்டு, வீடு சென்ற ஜயதேவனின் மனம் ஒரு நிலையில் இல்லை. அபர்ணாவைப் போல் சாருசீலாவுக்கு ஏன் ஒடுக்கமில்லை? எல்லாம் அவளை வளர்த்த அந்தத் தந்தையின் பேரில்தான் குற்றம். பெண்களுக்கு அடக்கம்தான் ஆபரணமாக இருக்கவேண்டும். அபர்ணாவுக்குப் பிறர் மனம் போல் இழைந்து போகத் தெரிகிறது. குழைவுடன் பேசுகிறாள். அவளை மணக்கப் போகிறவன் சுகப்படுவான், கவலையில்லாமல் வாழ்வான். சாருசீலாவைக் கைப்பிடிக்கிறவனோ, எரிமலை என்று வெடிக்குமோ என்று பயந்து கொண்டேதான் வாழ வேண்டும்.

''ஜட்ஜ் சாம்பமூர்த்தியும் அவர் மனைவியும் வந்திருந்தார்கள். அபர்ணாவை உனக்குக் கொடுக்க வேண்டுமென்று அவர்களுக்கு ஆசை. நல்ல பெண்; அழகும், பண்பும் இருக்கின்றன. என்ன சொல்லுகிறாய்?''

தன் எண்ணங்களின் எதிரொலி போல் வந்த இவ்வார்த்தைகளைக் கேட்டு ஜயதேவன் திடுக்கிட்டான். அவன் சிந்தனையில் ஆழ்ந்தபடி உட்கார்ந்திருந்தான். அப்போதுதான், தன் அருமைத் தாயார் பாகீரதியம்மாள் தன் எதிரில் இருப்பதைக் கவனித்தான்.

''என்ன உளறுகிறாய்?'' என்று கேட்டான்.

இப்படியே விட்டு விட்டால், விஷயம் முற்றி விடும்; தினம் அவன் சாருசீலாவின் வீட்டுக்குப் போய் வருகிறான். அதற்குள் அபர்ணாவுக்கும் அவனுக்கும் சேர்ந்து ஒரு முடி போட்டுவிடவேண்டும் என்ற எண்ணத்துடன்தான் அன்று பாகீரதியம்மாள் தைரியமாகப் பேச ஆரம்பித்தாள்.

ஜயதேவனுக்கு ஆச்சரியத்தினால் கண்கள் அகன்றன. அபர்ணாவைத் தன் தாயார் தனக்குத் தேர்ந்தெடுக்கக்கூடும் என்று அவன் கனவிற்கூட நினைக்கவில்லை.

''எனக்குக் கல்யாணமே வேண்டாம்'' என்று கருக்கமாகச் சொல்லிச் சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி வைக்கப் பார்த்தான். பாகீரதியம்மாள் விட்டால்தானே!

''அப்படிச் சொல்லாதே. எனக்கோ வயதாகிக் கொண்டு வருகிறது. நீ சீருடன் குடும்ப வாழ்க்கை நடத்துவதைப் பார்த்து



## மழமழப்பான சுகமான க்ஷவரத்திற்கு...

வாழ்வில் வெற்றி கண்டவர்கள் வேறெந்த தயாரிப்பையும் நாடாமல்

# பாமாலிவ்

ஷேவிங் கிரீமைத்தான் உபயோகிக்கிறார்கள்







நுரையுடனோ அல்லது பிரஷ் இல்லாமலோ நீங்களே தேர்ந்தெடுங்கள்

பாமாலிவ் என்றாலே உயர்ந்த ரகம்!

---



## மதுபாலாவின் அழகின் இரகசியம்

கோத்ரெஜ்

# வத்னி*

சாவி மார்க்




100% ஸ்வதேசி

* "தாய்நாடு" என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.



மகிழ அதிக அவகாசம் இருக்கிறதா? உன் நன்மைக்காகவே ஒப்புக் கொண்டேன்."

"ஒப்புக் கொண்டாயா? அந்தப்பெண்ணை எனக்குப் பிடிக்கவில்லை" என்று சொல்லிப் பேச்சை முடிக்க எண்ணினான் ஜயதேவன்.

"பிடிக்கவில்லையா? ஏன்? எதற்காக? நீ சொல்லுவது எனக்கு அர்த்தமாகவில்லை. ஒரு காரணமும் இல்லாமல் பிடிக்கவில்லை என்றால்?"

"இதுமாதிரி விஷயத்தில் காரணம் சொல்ல முடியுமா? சில பேரைப் பிடிக்கும், சில பேரைப் பிடிக்காது..."

"நீ என்ன சிறு பிள்ளையா, இப்படிப் பேசுவதற்கு? உன்னைப்போல் படித்த அறிவாளி இவ்விதமாகக் காரணமில்லாமல் வேண்டாமென்று சொல்ல முடியுமா? அபர்ணாவுக்கு என்ன குறை? ஒரு கலெக்டர் மனைவிக்கு வேண்டிய சகலவிதத் தேர்ச்சிகளும் அவளிடம் உண்டு."

"இதென்னம்மா வேடிக்கை? எனக்கு அபர்ணாவைத் தெரியாதா? தினம் கிளப்பில் பார்க்கவில்லையா?"

பாகீரதியம்மாள் தீர்மானமாக இருப்பதைக் கண்டு ஜயதேவன் மௌனமானான். அதைப் பார்த்து அவனுக்குச் சம்மதம் என்று அவள் அர்த்தம் பண்ணினாள். அவனோ, 'சரி, இனிமேல் விஷயத்தைத் தள்ளிப் போடக் கூடாது. சாருசீலாவுடன் நாளைக்கே பேசி விடவேண்டும்' என்று முடிவு கட்டினான்.

★

**ம**றுநாள், "அபர்ணா, வா! நாழிகை ஆகி விட்டது. இன்று கலெக்டர் வீட்டில் டீக்குக் கூப்பிட்டிருக்கிறார்கள். சீக்கிரமாய்த் தலையை வாரி விடுகிறேன்!" என்று ராஜம் தன் பெண்ணை அன்புடன் அழைத்தாள். அபர்ணா அழகாக நடை போட்டு வந்து, அம்மாவிடம் தலைவாரிக் கொள்ள அமர்ந்தாள்.

அவள் கல்லூரியில் மாணவியாக இருந்து, பட்டம் பெற்றவள். அவளைப் போல் நம் தேசத்தில் பல ஆயிரம் பெண்கள், மயில் போல் நடை, குயில் போல் குரல், அழகான உடைகள் அணிந்து எப்போதுமே பெண் பார்க்க வருவோருக்குக் காட்சி அளிக்க ஆயத்தமாய் இருப்பவர்கள் போல் இருப்பார்கள். தலைமயிர் ஒழுங்காகப் படிய, புடவைத் தலைப்பு மடிப்புகளுடன் விசிறியாட, இவர்கள் சதா அலங்காரக் கோலத்தில் இருப்பார்கள். இவர்கள் பெற்றோர்களும் சதா வரன்களைப் பற்றிப் பேசிப் பொழுது போக்குவார்கள். அந்தப் பெண்களும், அவர்கள் இருக்கும் பொழுது நமக்கென்ன என்ற பாவனையில் இருப்பார்கள். பொழுதைப் போக்குவதற்காக இவர்கள் சினிமா பார்ப்பார்கள்; கிளப்புக்குப் போவார்கள், சங்கீதம் பழகுவார்கள், நாவல்கள் வாசிப்பார்கள். பேச்சுக் குழாங்களில் சேர்ந்து கொள்வார்கள்; லேடீஸ் கிளப்பில் காரியதரிசி ஆவார்கள்; உபகார ஆஸ்பத்திரியிலோ, குழந்தை பரிபாலன விடுதிகளிலோ சம்பளமில்லாமல் வேலை பார்ப்பார்கள்.

அபர்ணாவும் இப்படித்தான் கவலையற்று, காலம் கழித்தாள். அவள் எதைப் பற்றி யோசனை செய்கிறாள் என்று யாருக்குமே தெரியாது. பார்ப்பதற்கு அவள் ஒரு அழகான பெண். மௌனமாக இருப்பாள். அவ்வளவுதான். இவ்விதப் பெண்களை, மௌன விரதத்தில், அவர்கள் பெற்றோர்கள் பழக்கி வைத்திருந்தார்கள். கல்யாணமான பிறகு அவர்கள், பாகீரதி அம்மாளாகவோ, ராஜமாகவோ மாறலாம். மாறவும் மாறுவார்கள். மணமான பிறகு எப்படி இருந்தால் என்ன? அதுவரையில் அடக்கம் வேண்டும், ஒடுக்கமும் வேண்டும். கலியாண மேளம் கொட்டும் வரையில் அவர்கள் வேஷம் ஒரு மாதிரி. அப்புறமோ?

தன் தாயாருக்குக் கலெக்டர் மாப்பிள்ளையாக வரவேண்டும் என்ற ஆசை இருக்கிறதென்று அபர்ணாவுக்குத் தெரியும். அதனால் அவள் வாய் திறவாமல் தன்னை அலங்கரித்துக் கொண்டாள்.

**ம**ணி ஐந்து அடித்தது. நீதிபதியின் குடும்பம் வண்டியில் ஏறும் தறுவாயில், கொண்டாபுரம் கோட்டை வாசல் அபாயமணி அலறிற்று. அதே சமயத்தில் துப்பாக்கி வெடிச் சத்தமும் கேட்டது. ஒரு வில்லை போட்ட சேவகன் காரைப் பார்த்து ஓடி வந்தான்.

"ஐயா, ஊரிலே கலாட்டா. சாமி ஊர்வலம் போய்க் கொண்டிருந்தப்போ, சிலர் கல்லை விட்டு எறிஞ்சாங்க. உடனே ஒரே அமளி. போலீஸ் வந்துட்டாங்க. கட்டுப் போடுறாங்க. நீங்க போக வேணாம்" என்று அவர்களுக்கு எச்சரித்தான்.

இதென்ன அபசகுனமாக இருக்கிறது என்று எண்ணிக் கொண்டு, அவர்கள் காரைவிட்டுக் கீழே இறங்கி உள்ளே போனார்கள்.

★

"**பா**ரு சுப்பம்மா, இந்தக் கலெக்டர் துரைக்குப் பாடம் சொல்லித்தராட்டி, நான் செல்லத்தாவில்லே..."

சுப்பி சிரித்தாள்.

"பாரு நீ..இந்த ராமநவமி அன்னைக்குச் செல்லத்தாளு....கொக்கோ...."

"நீ என்ன பண்ணப் போகிறாய்?"

"ஏன், எனக்கு மாத்திரம் மனுசங்க இல்லையா? அவங்களைக் கூட்டிக்கிட்டு கொஞ்சம் பேரை அடிக்கப் போடறது. இந்தக் கலெக்டர் பேரு கொஞ்சம்கெட்டுப் போகட்டுமே. ரொம்ப ஞாயம் பேசுகிறாரே. நான் குடிச்சிப்புட்டு என் பெண்சாதியை அடிச்சால் இவருக்கு என்னவாம்?"

"அவள் டபேதார் பொண்ணு."



செல்லத்தானைத் தூண்டி விட்டு வேடிக்கை பார்ப்பது சுப்பம்மாளுக்குப் பிடித்தமாக இருந்தது. அவன் ஜயதேவனைத் தூற்றுவது அவள் மனத்துக்கு இதமாக இருந்தது.

"என்னைக் கூப்பிட்டு வையணும்னு அத்தனை பேருக்கு எதிரே ஏன் செய்யவேணும்? கொஞ்சம் தனியாக அழைச்சிக்கிட்டுச் சொல்லக் கூடாது?"

செல்லத்தானுக்கு மூச்சு வாங்கிற்று.

"நான் சின்னக் கண்ணியை அடிச்சா இவங்களுக்கு என்னவாம்? புருஷனைக் கலெக்டருக்குக் காண்பிச்சுக் கொடுக்கறவ என்ன மனைவி? அதான் அவளை அடிச்சுப்புட்டேன்."

செல்லத்தான் தன் மனத்திலிருக்கும் கோர எண்ணங்களை, நினைக்கக்கூட பயமாய் இருப்பது போல், கண்களை உருட்டினான். பிறகு அண்டையில் வந்து அவள் காதில், ஏதோ சொன்னான். சொல்லிவிட்டு, பிறகு மார்பைத் தட்டிக் கொண்டான்.

"உன்னாலே ரொம்ப முடியும். கலெக்டரும் போலீஸுமாக வந்து உன்னை இழுத்துச் சிறையில் போட்டு விடுவார்கள்" என்று சுப்பம்மா தீர்ப்பு கூறினாள்.

"நீ பார்க்கிறாயா! இவங்களெல்லாம் எம்மாத்திரம்? செல்லத்தானை யாருன்னு நினைச்சுக்கிட்டே! மூளை இருக்குது, சுப்பி, மூளை!" என்றான்.

"மூளையாவது மண்ணாவது!" என்று சுப்பி முணுமுணுத்தாள். 'செல்லத்தான் உண்மையிலே தைரியத்துடன் அதைச் செய்தால் இந்தக் கலெக்டருடைய ஜம்பம் ஒடுங்கும்" என்று அவள் எண்ணினாள்.

அவன் குடித்து விட்டு, தான் பழி வாங்கப் போவதைப் பற்றி அடிக்கடி கடைத் தெருக்களில் பேசினான். தன் மாமனாரைக் காணும்பொழுதெல்லாம், அடிக்கடி தன் தோள்களைத் தட்டிக் கொண்டான். மனைவியைக் 'கலெக்டரு வீட்டு நாய்க் குட்டியே' என்று பரிகாசம் செய்தான். சின்னக் கண்ணி அவனை வெண்டா வெறுப்புடன் பார்த்தாள். இந்த மனுஷனையும் ஆசைப்பட்டுக் கட்டிக் கொண்டதை நினைத்து அருவருப்புற்றாள்.

சின்னக் கண்ணியைக் கல்யாணம் செய்து கொண்ட பொழுது, செல்லத்தான், நல்ல கட்டுமஸ்தான தேகம் படைத்த இளங்காளையாக இருந்தான். இப்போது மாத்திரம் என்ன? அவன் தேகம் இரும்புதான்.

கலெக்டருடைய டபேதார் மகள் சின்னக் கண்ணி அவன் மேல் மோகங் கொண்டதில் ஆச்சரியமில்லை. சின்னக்கண்ணியும் செம்மண் நிறத்தவளாகக் கரும் விழிகளுடன் மிக்க கவர்ச்சிகரமாய் இருப்பாள். இருவரும் ஏற்ற ஜோடியாக இருந்தார்கள்.

செல்லத்தான் ஆஸ்பத்திரி காவலாள். அந்தத் தோட்டத்திலுள்ள ஒரு சிறு குடிசையில், அவர்கள் நிம்மதியாக வாழ்ந்தார்கள். திடீரென்று என்ன நேர்ந்ததோ, செல்லத்தான் குடிக்க ஆரம்பித்து விட்டான்.

ஆஸ்பத்திரிக்கு ஏற்ற காவலாளி இவனல்ல, வேறு யாரையாவது போடவேண்டுமென்று, பலர் நேராகவும், மறைவாகவும், பேசிக்கொண்டார்கள். அதிகாரிகளுக்கு அதைப் பற்றி மனுக்கள் வந்தன. டபேதார் கலெக்டரிடம் செய்து வந்த சிபார்சினால் இதுவரையில் அவனுக்கு வேலை தங்கி நின்றது.

இந்தத் தடவை கலெக்டர் அவனைக் கூப்பிட்டுச் சூடாக எச்சரித்தார். முதல் நாள் அவன் குடித்து விட்டுப் போட்ட கூச்சல் ஆஸ்பத்திரி நோயாளிகளையெல்லாம் கலங்க வைத்து விட்டது.

டபேதார் ராமுப்பா நல்ல மானமுள்ள மனுஷன். விசுவாசம் நிறைந்தவன். ஜயதேவனுக்கு அவன்பேரில் மிகவும் நம்பிக்கை. கிழவன் ராமுப்பாவுடைய அநுபவம் நிறைந்த தொண்டினால், அவன் எத்தனை பயன் அடைந்திருக்கிறான்? கலெக்டர்கள் வருவார்கள், போவார்கள். ஆனால் ராமுப்பாவோ நிலையாக இருந்து வந்தான். ஜயதேவனைத் தன் பிள்ளைபோல் பாதுகாத்து வந்தான்.

ஜயதேவன் செல்லத்தானைக் கூப்பிட்டுப் பயமும் நயமுமாகப் புத்தி சொல்லி அனுப்பினான். ஆனால் அது செல்லத்தானுடைய வெறியைத்தான் கிளப்பி விட்டது. கலெக்டரை எப்படியாவது தீர்த்துக் கட்டப் போவதாகச் சொல்லிக் கொண்டு ஊர் சுற்றினான்.

ஒருநாள் காலையில் சின்னக்கண்ணிக்கு நல்ல உதை கிடைத்தது. "நீ பார்த்துக்கிட்டிரு; உங்க அப்பாவையும், அவங்க துரையையும் என்ன பண்ணறேன்னு!" என்று உறுமிக் கொண்டே அவன் வெளியேறினான்.

அவள், "போதும்! உன் லட்சணம் தெரியாதாக்கும்" என்று இடித்துக் கூறினாள்.

செல்லத்தான் கடைத்தெருவோடு போனான். ஒரு வெற்றிலை பாக்குக் கடையில் நின்றான். வாய் நிறைய வெற்றிலையையும் புகையிலையையும் குதப்பியபடி வீறாப்புப்பேச ஆரம்பித்தான். அவனைச் சுற்றி ஒரு சிறு கும்பல். திடீரென்று செல்லத்தான் முதுகில்

ஒரு குத்து விழுந்தது. ஒரு போலீஸ்காரனுடைய சிறு உருண்டைக் கழி அவன் முதுகில் பதிந்தது.

''வா, ஐயா ஸ்டேஷனுக்கு, சும்மா நட...''

வெற்றிலைக் கடைக்காரன் சிரித்தான். செல்லத்தான் முறைத்தான், திமிறினன். கழி நடு முதுகை அழுத்ியது. அவன் அலறினன். அங்குள்ளவர்கள் ஒரே எகத்தாளம் செய்து, கொக்கரித்தார்கள்.

டி. எஸ். பி.யும் கலெக்டர் ஜயதேவனும் ஆபீஸ் அறையில் பேசிக் கொண்டிருந்தார்கள். எப்போதும்போல், டி.எஸ்.பி. 'ஒன்று பிடித்துக் கட்டி வைக்க வேண்டும், அல்லது அடித்து மண்ணோடு மண்ணாக்க வேண்டும்' என்ற பலாத்கார முறையை அநுசரித்துப் பேசிக் கொண்டிருந்தார்! ஜயதேவனோ, சமாதான ரீதியில் பேசிக் கொண்டிருந்தான்.

''பஜாரில் பேச்சு பிரமாதமாக இருக்கிறது. ஸ்ரீராமநவமி உற்சவத்தைச் சாக்காக வைத்துக் கொண்டு, கலகக்காரர்கள் ஒரு கை பார்க்கப் போகிறார்களாம்! இது உண்மையானால், சமாளிப்பது கஷ்டம். எதற்கும் நீங்கள் உற்சவத்தை நிறுத்தி விடுங்கள்.''

''எதற்காக? வேண்டியதில்லை. நீங்கள் போலீஸ் பந்தோபஸ்தைச் சரியாகச் செய்யுங்கள். நான் சுவாமி ஊர்வலத்தைக் குறுக்கி, ஒரு தெருவோடு நிறுத்தச் சொல்லுகிறேன்'' என்றான் ஜயதேவன்.

''போதாது. அப்புறம் நான் எச்சரிக்கவில்லை யென்று சொல்லாதீர்கள்!'' சீனிவாசலுவுக்கு எரிச்சல் வந்தது. ''இந்தக் காவாலிப் பசங்க கூட்டம் அதிகமாகிறது. இப்போது கூட அந்தச் செல்லத்தானைப் பிடித்து வரச்சொல்லி யிருக்கிறேன். பார்த்துக் கொள்ளுங்கள், விஷயம் கொஞ்சம் அபாயகரமாகப் போய் விடப் போகிறது. கலகம் வேண்டாமானால், சும்மா பத்து கலாட்டாக்காரர்களைப் பிடித்து 'லாக் அப்பில்' போட்டால் போதும்'' என்று அவர் மேஜையைக் குத்திச் சொன்னார்.

''அதுவும், வேண்டியதில்லை. அனாவசியமாக யாரையும் இம்சிக்க வேண்டாம். நீங்கள் கைது செய்யும் ஆட்களில் நிரபராதிகளும் இருக்கக் கூடும்.''

''நிம்மதிக்காக, பத்து நான் நிரபராதிகள் கூட ஜெயிலிலிருக்கட்டுமே?'' என்றார்.

இதற்கு கலெக்டர் பதில் சொல்லவில்லை.

டி. எஸ். பி. வேறு வழியில்லாமல் எழுந்து சென்றார். அவருடைய மனத்தாங்கல் மறையவில்லை. ஜயதேவன் தன்னை லட்சியம் செய்து, தன் யுக்தியை ஏற்றுக் கொள்ளவில்லை என்று அவர் மனத்தில் ஆத்திரம் ஏற்பட்டது.

அவர் ஆபீசுக்குப் போய் உட்கார்ந்ததும் அந்தப் புகையும் தீயில் நெய்யை வார்த்தது போல், அங்கே செல்லத்தானை இழுத்து வந்த இன்ஸ்பெக்டர் 'டக்'கென்று ஒரு சலாம் போட்டு விட்டுப் பேச ஆரம்பித்தார். ''சார், இந்த ஆசாமி தெருவோடுதான் கலாட்டாக்காரர்களுடன் சேர்ந்து ஸ்ரீராமநவமி யன்று, கறுப்புக் கொடியைப் பிடித்துக் கொண்டு போகப் போவதாகச் சொல்லிக்கொண்டே போகிறான். இங்கே பிடித்து வந்தேன்.''

டி. எஸ். பி. செல்லத்தானைப் பார்த்து முறைத்தார். அவனுடைய வீறாப்பெல்லாம் எங்கேயோ மாயமாய் மறைந்து விட்டது. அவன் கெஞ்சும் பாவனையில், தன் கையைப் பிசைந்து கொண்டான். ''ஹீ....ஹீ....'' என்று அசட்டுத்தனத்துடன் சிரித்தான். அவன் பின்னால் இருந்த ஹெட்கான்ஸ்டேபிள் கழியை முதுகில் ஊன்றினான்.

டி. எஸ். பி. அதட்டிக் கேட்டார். ''ஊம், சொல்லு சீக்கிரம். உன் கூட்டாளிகள் யார், யார்? எங்கே கூடப் போகிறீர்கள்? நீங்கள் எத்தனை பேர்கள்?''

''ஐய்யய்யோ. எனக்கு ஒண்ணுமே தெரியாதுங்க. சும்மா வேடிக்கை பண்ணினேனுங்க.''

''வேடிக்கையா? ஊர் அமர்க்களப் பட்டால் வேடிக்கையா? இங்கே துப்புத் துலக்கி எங்கள் மண்டை கலங்குகிறது. இவனுக்கு வேடிக்கையாம். என்ன இன்ஸ்பெக்டர்?''

அவர் பதில் சொன்னார். ''சார்! எங்களிடம்





விட்டுவிடுங்கள், பார்த்துக் கொள்கிறோம்.''
செல்லத்தானுக்கு இதைக் கேட்டு நடுக்கம் எடுத்தது.

டி. எஸ். பி. இரைந்தார். ''என்ன கேட்டுக் கொண்டாயா? நீ சொல்லாவிட்டால், இவர்கள் உன்னைக் கிழித்துப் பார்த்து விடுவார்கள்'' என்று பயமுறுத்தினார்.

செல்லத்தானின் நா குழறிற்று. ''இல்லே, எனக்கு ரகசியம் ஒண்ணும் தெரியாதுங்க... ஒண்ணுமே தெரியாதுங்க ...நீங்க யாரைப் பேசறேங்கன்னுகூடத் தெரியாது.''

என்ன மிரட்டியும், செல்லத்தான், கெஞ்சினானே தவிர, குழைந்தானே தவிர, விஷயத்தைச் சொல்லவில்லை.

டி. எஸ். பி.க்குச் செல்லத்தானுடைய பயித்தியப் பிதற்றலைப்பற்றித் தெரியும். செல்லத்தான், தான் கேட்ட ரகசியத்தை அறிந்திருக்கக்கூடும் என்று அவர் நம்பவில்லை. இந்த அசட்டு செல்லத்தானிடம் யார் நம்பிக்கை வைத்திருக்கக் கூடும். இருந்தாலும், செல்லத்தான் தனக்கு உதவக் கூடும். திடீரென்று அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. ''சரி செல்லத்தான், நீ நிஜமாகவே ஒரு யோக்கியனா அல்லது பாசாங்கு பண்ணுகிறாயா என்று பார்க்க உனக்கு ஒரு வேலை கொடுக்கப் போகிறேன். என்ன சொல்லுகிறாய்?''

'கொடுங்கள்' என்ற பாவனையில் செல்லத்தான் கும்பிடு போட்டான்.

''நவமியன்று போலீஸ்படையுடன் சேர்ந்து உனக்கு, கிழக்கு வீதியில் வேலை கொடுக்கப் போகிறேன்...எப்படி?''

செல்லத்தானுடைய உயிர் திரும்பி வந்தது. அயர்ந்துபோன அவனுடைய இருதய நாடி படபடவென்று அடித்துக் கொண்டது. அவன் நிமிர்ந்தான். தன் மார்பை அகல விரித்துக் கொண்டான். பிறகு கனைத்து விட்டுக்கொண்டே, மார்பைத் தட்டினான். ''பாருங்க ஐயா, என்னோட வீரத்தே, பரிசோதித்துப் பார்த்தால்தான் தெரியுமுங்க.''

டி. எஸ். பி. சிரித்துக் கொண்டே கையைச் சமிக்ஞை செய்தார். செல்லத்தான் விடுதலையடைந்தான்.

ஸ்ரீராமநவமி அன்று, சூரியன் பொலிவுடன் பிரகாசித்தது. கொண்டாபுரம், ஒரு புராதன ஊரானதனால், அதைச் சுற்றி மதிற்சுவர்கள் இருந்தன. பதினேழாவது நூற்றாண்டில் கட்டப்பட்ட இக் கோட்டையின் மதில்கள், இப்போதும் உறுதியாய் இருந்தன. சிதைந்து போயிருந்த சுவரை, ஆங்காங்கே சீராக்கி யிருந்தார்கள். மற்றும் சில இடங்களில், அழிந்துபோன விஜயநகரத்தின் பண்டையச் சிறப்பை ஞாபகப்படுத்தும் சின்னங்கள் இருந்தன.

டி. எஸ். பி. தெருத்தெருவாகச் சுற்றி வருவதும், ஆங்காங்கே போலீஸ் பந்தோபஸ்துகள் தம்முடைய உத்தரவுகள்படி சரியாக நடந்து வருகின்றனவா என்று பார்வையிடுவதுமாக இருந்தார். எல்லா ஏற்பாடுகளும் திருப்திகரமாய் இருப்பதாகவே தெரிந்தன. ஊரில் ஒருவித அமளியும் இல்லை. கறுப்புக் கொடிகளைக் காணவில்லை. காவாலிகளும் எங்கோ பதுங்கி விட்டார்கள். தீபாராதனை ஆனவுடன் சுவாமி புறப்பாடு நடந்தது. ஜனங்கள் கரகோஷம் செய்து கொண்டு பவனியைத் தொடர்ந்தார்கள். எங்கும் ''ஸ்ரீராமஜய'' என்ற பஜனை கோஷ்டிகளும் நெடுகிலும் பிரமாதமாக இருந்தன. நாதசுவர வெள்ளம் இனிமையாக வானை நிறைத்தது. சுவாமி பல்லாக்கு தெற்கு வீதிவழியாக வந்து கொண்டிருந்தது.

தெற்கு வீதியும் கிழக்கு வீதியும் சந்திக்கும் மூலையில் ஆஸ்பத்திரி இருந்தது. பவனி சற்றுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த பொழுதே, அதைப் பார்க்க, சாருசீலாவும், மற்றும் சிலரும் ஆஸ்பத்திரியின் மேல் மாடிக்குச் சென்றார்கள். அங்கிருந்து அவர்களுக்கு, கிழக்கு வீதியும், தெற்கு வீதியும் தெரிந்தன. கூட்டமும், கூச்சலுமாக உற்சவ சுவாமி வந்து கொண்டிருந்தார். நாடகத்தைப்போல் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு வந்த சாருசீலா, அப்போது, தன் எதிரே ஆஸ்பத்திரியை நோக்கி, கிழக்கு வீதியில் கலெக்டரின் கார் வருவதைக் கவனித்தாள்.

அந்த வண்டி மிக மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தது. காலையிலிருந்து ஒரே மனதாக இருந்த ஜயதேவன், நிம்மதிக்காகத் தான் இட்ட கட்டளைகள் சரியாக நடந்து வருகின்றனவா என்று கவனித்துக் கொண்டிருந்தான். பல்லக்கு புறப்பட்டவுடன் அவன் அப்பிரதக்ஷணமாய் ஊரைச்சுற்றிவரலானான்.

ஜயதேவன் சற்றுக் களைப்புடன் கார் சீட்டில் சாய்ந்தான். உற்றுக் கவனித்த சாருசீலாவுக்கு அவனுடைய உருவம் மங்கலாகத் தெரிந்தது. அவள் உற்சவத்தை நோக்கினாள். ஸ்ரீராமர் மெதுவாக வந்து கொண்டிருந்தார். தர்மகர்த்தா பரவசத்துடன் கை கூப்பிக் கொண்டு பல்லக்கின் அருகில் இருந்தார். ஆஸ்பத்திரிச் சுவரோரமாக வரிசையாய்ப் போலீஸ் குதிரை வீரர்களும் சாதாரண வீரர்களும், அணிவகுத்து நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடன் டி. எஸ். பி. ஒரு குதிரையில் இருப்பதைச் சாருசீலா கவனித்தாள். அப்போது சீனிவாசலு தம் கையை ஆட்டிச் சமிக்ஞை செய்தார். உடனே சற்றுத் தூரத்திலிருந்த செல்லத்தான் அவரிடம் ஓடிவந்தான். டி. எஸ். பி. குனிந்து அவன் காதோடு ஏதோ சொன்னார். என்ன சொன்னார்? அதைக் கேட்ட செல்லத்தான் முகத்தில் முதலில் ஆச்சரியமும், பிறகு திகிலும் தோன்றின. டி. எஸ். பி. கடிந்து கொண்டு ஏதோ இரைந்தார். செல்லத்தான் கூட்டத்தில் மறைந்து விட்டான்.

சுவாமி ஆஸ்பத்திரியை நெருங்கும் சமயம். அப்போது எங்கிருந்தோ ஒரு குறுக்கு வீதியிலிருந்து, ஒரு சின்னக் கும்பல் கிழக்கு வீதிக்குள் பிரவேசித்தது. அந்தக் கூட்டத்திலுள்ள சிலர் பெரியதொரு கறுப்புக் கொடியைப் பிடித்திருந்தார்கள். அவர்கள் அமளி ஒன்றும் செய்யவில்லை. நிதானமாகவும், கிரமமாகவும் நடந்து போய்க் கலெக்டர் காருக்கு முன்னால் சென்றார்கள்.

அந்தச் சமயத்தில், யாரோ ஒருவன் கலெக்டர் கார்மீது ஒரு கல்லை வீசி எறிந்தான். சாருசீலாவுக்கு அந்த மனுஷனுடைய உருவம் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் அது செல்லத்தான் என்பதை அவ

# இதன் பரிசுத்தம் ஓட்டினால்



பாதுகாக்கப்படுகிறது

# துஷார்

விடமின்கொண்ட
வனஸ்பதி

இதன் பரிசுத்தம்
சீல் செய்யப்பட்ட
டப்பாவினால்
பாதுகாக்கப்படுகிறது.




2 பவுண்டு,
5 பவுண்டு,
10 பவுண்டு
டின்களில்
கிடைக்கிறது

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட்., கர்நூல்

னுடைய உள் உணர்வு அவனுக்கு விளக்கியது. பட்டென்று அந்தக் கல் காரின் முன்பக்கத்துக் கண்ணாடியைத் தாக்கியது. 'பட்தட்' என்று அடுத்தடுத்துக் கற்கள் விழுந்தன.

சாருசீலாவுக்குக் குடல் நடுங்கியது. ஜயதேவன்! அவனுக்கு அடிபட்டிருக்க வேண்டும். அவள் முன்னும் பின்னும் யோசியாமல், ஜயதேவனுக்கு உதவி செய்யும் எண்ணத்துடன் தடதடவென்று படிகளைக் கடந்து, கூட்டத்துக்குள் புகுந்தாள்.

இதென்ன மடமை! இந்தக் கூட்டத்தில் ஒரு பெண் என்ன செய்ய முடியும்? அவள் சற்றுப் பொறுமையுடன் இருந்திருந்தால், மேலே நடந்தது, மாடியிலிருந்தே அவளுக்குத் தெரிந்திருக்கும். கல்லொன்று ஜயதேவன் நெற்றியில் அறைந்தது என்னமோ உண்மை. ஆனால் கலகம் வலுப்பதற்குமுன் கார் டிரைவர் மிக்க சாமர்த்தியமாகக் காரைத் திருப்பி ஒரு சந்துக்குள் செலுத்திச் சென்றான்.

கூட்டத்தில் புகுந்த சாருசீலா எக்கச் சக்கமாய் அகப்பட்டுக் கொண்டாள். ''கலகம்! கலகம்! கலெக்டருக்கு அடி'' என்று ஜனங்கள் கூச்சலிட்டார்கள். சாருசீலா இன்னும் அதிகமாகக் கலங்கிவிட்டாள். ஜயதேவனைப் புறக்கணிக்க வேண்டும் என்று வைத்திருந்த எண்ணங்களை மறந்தாள். அவனுடைய சுந்தர வதனத்தையே நினைத்துப் புழுங்கினாள். இதற்குள் எங்கும் அடிதடி பலத்தது.

ஊரில் அமர்க்களமென்று தெரிந்ததும் விமலனுக்குச் சாருசீலாவின் நினைவுதான் வந்தது. காதலென்பதை ஒவ்வொருவனும் தன்னுடைய தனி விதத்தில் காட்டலாம். ஆனால், ஆபத்துச் சமயத்தில் எவனும் தன் காதலியைத்தான் முதலில் நினைப்பான். விமலன் தன் வண்டியை எடுத்துக் கொண்டு சந்துகள் வழியாகச் சரசர வென்று ஆஸ்பத்திரியை அடைந்தான். அங்கேஅவன் கேட்ட செய்தி அவனைத் திடுக்கிடச் செய்தது. அவன் இருதயம் பதைபதைத்தது.

சற்று யோசித்தான். கோட்டைச்சுவர் அவனுக்கு ஞாபகம் வரவே, உடனே மதில் மேல் ஏறினான். தன்னிடமிருந்த பைனாக்குலரின் உதவியால் அவன் சாருசீலாவைக் கண்டு பிடித்தான். கூட்டத்தில்தெரிந்த அவளுடைய முகம் சிறுத்துச் சுருங்கி இருந்தது. அதை அப்படியேசென்று எடுத்துத் தன் கரங்களில் பதித்துக் கொள்ள ஆசைப் பட்டான். ஆனால் அவனுடையவிவேகம் அவனைத் தடை செய்தது. அவசரப்பட்டுப் பிரயோசனமில்லை என்று உணர்ந்து, மெதுவாக மதிற் சுவரின்மேல் சிரமப் பட்டு ஏறி, பாதி கவிழ்ந்தும், பாதி தொங்கிக் கொண்டும் நகர்ந்து போனான்.



கோவில் வாசலுள்ள இரு பக்கத்துச் சுவர்களிலும் பெரிய மாடங்கள் காலியாய் இருந்தன. அந்தக் காலி மாடங்களில் ஒன்று, விமலன் ஒதுங்கி நிற்பதற்கு உதவியது. மாடத்தில் நின்றவாறு அவன் கூட்டத்தைத் துழாவினான். அது போய்க் கொண்டிருந்த வேகத்தில் அவனையும் அடித்துக் கொண்டு போயிருக்கும். ஆனால் அவன் பத்திரமாய்ச் சுவருடன் ஒட்டிக்கொண்டான். அப்போது சாருசீலாவைத் தாங்கிய ஜனத்திரள் அவன் பக்கமாக விரைந்தது. விமலன் தைரியமாகக் கூட்டத்தில் புகுந்தான். இரும்பு போன்ற கரங்களால் சாருசீலாவைப் பற்றினான். பிறகு பாதி இழுத்தும், பாதி தூக்கியும் கொண்டு வந்து அவளை மாடத்தில் சேர்ப்பித்தான். மாடத்தின் உள் வீச்சு அதிகமில்லை. இருவரும் கஷ்டப்பட்டேதான் அதில் பதுங்கினார்கள். சாருசீலாவை ஜனப்பிரளயம் மறுபடியும் இழுத்துச் செல்லாமலிருக்கும் பொருட்டு விமலன் அவள் இடுப்பில் தன் கரத்தைக் கொடுத்து வளைத்துப் பிடித்துக் கொண்டான்.

என்ன ஆச்சரியம்! எங்கும் கொலை குத்து! போலீஸ்காரர்கள், கூட்டத்தைக் கலைப்பதற்காக இரக்கமின்றி ஓங்கி அடித்தார்கள். நெடுகிலும் பயங்கரக் கூச்சல்; வேதனையின் ஓலம். ஆனால் விமலன் உள்ளத்தில் மையல். சாருசீலாவின் மெல்லிய தேகத்தின் ஸ்பரிசம், அவன் உடலைப் புல்லரிக்கச் செய்தது. 'சாருசீலா' என்று மெதுவாக அழைத்தான். அந்தச் சந்தடியில் அவன் கூப்பிட்டது அவளுக்குக் கேட்டுவிட்டதோ என்னமோ! அவள் நிமிர்ந்து பார்த்தாள். அவள் கண்களில் தோன்றிய கேள்வி அவனுடைய உள்ளத்தை இளக்கியது. அப்போது அவளுடைய முகம், அவனுடைய முகத்துக்கு வெகு சமீபத்தில் இருந்தது. ''மன்னித்து விடுங்கள்'' என்றுகூறித் தன்னை விடுவித்துக் கொண்டு கூட்டத்தில் பாய்ந்து மறைந்தாள். அவளை அவன் தடுத்து நிறுத்த முடியவில்லை.

அவளைத் தொடர்ந்து செல்லலாமா என்று விமலன் யோசித்தான். பிறகு தயங்கி நின்று விட்டான். அவன் மறுபடியும் சுவரின் மேல் ஏறக் கூட்டத்தைக் கவனித்தான். போலீஸின் இரக்கமில்லாத அடிகள் அவன் கவனத்தைக் கவர்ந்தன. குற்றம் செய்யாத இந்த ஏழை ஜனங்களை ஏன்வதைக்கிறார்கள்? முன்னாலேயே யோசனையுடன் உற்சவத்தை நிறுத்துவதற்கென்ன? ஏன் அதிகாரத்துக்கு இத்

தனை ஆர்ப்பாட்டம் தேவையாக இருக்கிறது? விமலனுடைய அனுதாபம் சாருசீலாவை விட்டு, பொது ஜனங்கள் மீது பாய ஆரம்பித்தது. ஏன் தானும் அவர்களுக்கு உதவியாக இருக்கக்கூடாது? ஏன் தானும் தேசத் தொண்டில் சேரக்கூடாது? சாருசீலாவோ தன்னைத் திரஸ்கரித்து விட்டாள். காதல் என்னமோ கிடைக்கவில்லை. தன்னிடமுள்ள ஆவல், ஊக்கம், அன்பு, சேவை செய்ய வேண்டுமென்ற துடிப்பு இவைகளைத் தேசத்துக்காக ஏன் அர்ப்பணம் செய்யக்கூடாது?

*

ஜயதேவனுக்கு நெற்றியில் பலத்த அடி. தோள் எலும்பிலும் காயம். ஆனால் அவன் அவைகளைப் பொருட்படுத்தவில்லை. டிரைவரை ஒதுக்கிவிட்டு, தானே காரை ஓட்டிக்கொண்டு வீதிகளில் சுற்றி வந்தான். அடிக்கடி உத்தரவுகள் பிறப்பித்தான். டி. எஸ். பி. நீதிபதிகள், குதிரை வீரர்கள் எல்லோரும் அவனை அடிக்கடி சந்தித்தார்கள். அமைதி நிலவும் வரையில் ஜயதேவன் ஊரை வட்டமிட்டு வந்தான்.

ஒரு தடவை கோவில் வாசற்படி வழியாக ஜயதேவன் கார் ஊர்ந்து சென்றது. அங்கே அவன் பார்த்த காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது. சிற்பங்கள்போல் மாடத்தில் பதித்திருந்த ஒரு சித்திரக்காட்சி, அவன் கண்களைக் கவர்ந்தன. அவன் அயர்ந்து போனான். அவனது இருதய நாயகி சாருசீலா, விமலனுடைய அன்பு அணைப்பில் இருந்தாள். அவள் அவனைக் கெஞ்சும் பாவனையில் பார்த்துக் கொண்டிருந்தாள். அவனோ அவளை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தச் சித்திரம் மிக விநோதமாக இருந்தது.

ஜயதேவன் விவரிக்க முடியாத வேதனைக்கு உள்ளானான். சாருசீலா அவன் வாழ்க்கையை விட்டு நழுவி விட்டாள். காலையில் தான் செய்த திட்டத்துக்கு இனி அவசியமேது? மறு நிமிஷம் கார் நகர்ந்தது. அந்தக் காட்சியும் அவன் கண் முன்னிருந்து மறைந்தது. ஆனால் அகக்கண்களை விட்டு மறையுமா?

அவன் மனம் சாருசீலாவைச் சிந்தித்தவாறே இருந்தது. உள்ளம் அவளை நினைத்து விம்மியது. நெற்றியில் வழியும் ரத்தத்தை அவன் கவனிக்கவில்லை. ஆனால் மனத்தில் கசிந்த உதிரம் அவனைப் பலஹீனப்படுத்தியது. தான் தோல்வியுற்றதை அவன் அறிந்து கொண்டான். காரினுள் சாய்ந்தான். சாருசீலா மறுபடியும் கூட்டத்தில் புகுந்ததையும் விமலன் அவளை அழைத்ததையும், அவன் பார்க்கவுமில்லை கேட்கவுமில்லை.

'சாருசீலா! சாருசீலா!'—அவன் என்ன செய்து கொண்டிருந்தான். முதல், முதல் ஜயதேவனை நினைத்துக் கூட்டத்தில் இறங்கியவள் இப்போது அவனுடைய நினைவை அறவே இழந்து விட்டாள். விமலனை விட்ட பிறகு அவள் கூட்டத்தோடு இழுத்துச் செல்லப்பட்டாள். அவள் எங்கே போகிறாள்?

திடீரென்று இன்ன காரணத்தினால் என்று தெரியாமல் அவள் மனத்தில் தெளிவுண்டாயிற்று. ஜயதேவனைப் பற்றி நினைக்கும் பொழுதெல்லாம், அவள் நெஞ்சைத் துளைக்கும் அந்த வேதனை அடங்கிவிட்டது. இத்தனை நாட்களாக அவள் விடுதலை, விடுதலை என்று எதற்காக வேண்டிக் கொண்டாளோ, அது கிடைத்து விட்டது.

இல்லை! இந்த நிம்மதி அவள் இது வரையில் காணாத நிம்மதி! ஒரே அமளியாக இருக்கும் பொழுது திடீரென்று செவிடானால் உண்டாகும் பற்றில்லாமை அவள் உள்ளத்தில் தோன்றி விட்டது.

அந்தப் பலன்தான் அன்பு. காயங்களைச் சிகிச்சை செய்து புண்களை ஆற்றுவதைப்போல் அன்பு, மனப்புண்ணை ஆற்ற வல்லது. அவள் வைத்தியக் கல்லூரியில் படித்தவள். புண்களை ஆற்றக் கற்றவள். இனிமேல் அன்பினால் அவள் சமூகத்தின் புண்களை ஆற்றுவாள். அதுவரையில் அவள் அன்பைக் கொட்டிக் கொடுப்பாள். சாருசீலா தன் தந்தையை நினைத்துக் கொண்டாள். உன்னதமான, தகர்க்க முடியாத அன்பு நிலையை அடைய, இனிமேல் தனி வழி நடக்க வேண்டும். மென்மையான அந்த அன்பின் ஒளி இனிமேல் அவள் உள்ளத்தில் உறுதியுடன் பிரகாசிக்கும்.

கலகம் ஓய்ந்து மறுபடியும் நகரத்தில் நிம்மதி நிலவியது. ஜயதேவன் தன் காயங்களைச் சுத்தி செய்து கொள்வதற்காக, ஆஸ்பத்திரிக்குள்ளே போனான். அவனுக்குச் சிகிச்சை செய்தார்கள். நெற்றிக் காயத்தைத் துடைத்துக் கட்டும்போது அவன் பிரக்ஞை இழந்தான். அவனைத் தூக்கிக் கொண்டுபோய் ஆஸ்பத்திரியிலுள்ள தனி அறையில் படுக்க வைத்தார்கள். அன்று இரவு அவன் வேதனையால் வெகுவாய்ச் சிரமப்பட்டான். பாதி, பட்ட அதிர்ச்சியினாலும், பாதி தூக்க மருந்தின் மயக்கத்தினாலும் அவன் வேதனைப் பட்டான். தலையை உருட்டுவதும், திரும்பித் திரும்பிப் படுத்துக் கொள்ளுவதுமாக இரவு சங்கடத்திலேயே கழிந்தது. மயக்கத்தில் கூட அவனுடைய அந்தரங்கம் துயரப்பட்டிருக்க வேண்டும். ஆனால் சாருசீலாவின் நடத்தையினால் அவன் எத்தனை துன்புற்றான், என்னென்ன கஷ்டங்கள் எய்தினான் என்பதை யாராலும் சொல்ல முடியாது.

அடுத்த நாள் காலையில் பாகீரதியம்மாள் தன் மகன் அருகில் நின்றாள். பக்கத்தில் அபர்ணாவும், நீதிபதியும் அவர் மனைவி ராஜமும் நின்று கொண்டிருந்தார்கள்.

அச் சமயத்தில் சாருசீலா ஜயதேவனுடைய தேக நிலையைக் கேள்வியுற்று உள்ளே வந்தாள். அவளைக் கண்டதும் ஜயதேவனின் கண்கள் நிலைகுத்தி நின்றன. ஒரு கணம் இருவர்களுடைய கண்களும் சந்தித்தன. பிறகு சடாலென்று, தன் நெற்றிக் காயத்தைக் கூடக் கவனிக்காமல் ஜயதேவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். ''அபர்ணா'' என்று அன்பு ததும்ப அழைத்தான். அந்த அழைப்பில் ஒருவிதத் துவர்ப்பு கலந்திருந்தாலும் அதை அபர்ணா கவனிக்கவில்லை. அவள் முகத்தில் வெற்றிக் களையே திகழ்ந்தது.

ஏதுமே பேசாமல், யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், சாருசீலா நகர்ந்தாள்—தனி வழியில், அன்புப் பாதையில் நடப்பதற்காக.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

## வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய் களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில் . . .

# ஆக்டமர்

### இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!

நீராடும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பராமரிப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் பீர்ஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மான்ஸான்டோ கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக உருவாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசினி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது. அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனால் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'

நறுமணமுள்ள பீர்ஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உகந்த தருணம். தவறாமலும் இடையறாமலும் 3 வில்லைகள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றால் அதுதான்!



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

